ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மலைமேல் நிற்பாய்



ஆசிரியர்:

**திருமதி ஆண்டாள் ராஜன்**

வெளியீடு:

*விக்ரம வருடம் வைகாசி அனுஷம்*

*(19.05.2000)*

**விலை ரூ.60/-** (தபால் செலவு தனி)

Srimathey Ramanujaya Nama:

# "Malaimel Nirpai"

by

**Smt. ANDAL RAJAN**


| | | |
|---|---|---|
| Copy Right | : | Publisher |
| Copies | : | 1000 |
| Price | : | Rs. 60/- |

This Book is Published with the
Financial Assistance of
TIRUMALAI TIRUPATHI DEVASTHANAMS
Under their Scheme
**"Aid to Publish Religious Books"**



Copies Available at:

**Smt. ANDAL RAJAN,**
Flat No.1. N.J.Apartment,
81, Ammamandapam Road,
Srirangam, Trichy - 620 006.
Ph: (0431) 434127



Printed at:
**Sriranga Nachiyar Achagam**
214, East Uthara Street,
Srirangam, Trichy - 620 006.
Ph:(0431) 434398



ஸ்ரீமான் G. கண்ணையா இராமாநுஜதாஸர் K. துளசியம்மாள்

பொருளல்லாத என்னையும் பொருளாக்கி "மறந்தும் புறந்தொழ மாந்தர்" நிலைக்கு என்னை வளர்த்து ஆளாக்கிய எந்தையார் "ஸ்ரீவைஷ்ணவ ரத்னம்" ஸ்ரீமான் கண்ணையா இராமானுஜதாஸர் திருவடி இணைகளில் இவ்வாய்வேடு நினைவு மலராக சமர்ப்பிக்கப்படுகிறது.

# பொருளடக்கம்

Sri

Srimathe Ramanujaya Nama:



**Srimath Kaliyan Vanamamalai**

**Ramanuja Jeer swami**

**Sri Vanamamalai mutt**

Phone 50119(04635)

Nanguneri-627108.

Place: Nanguneri

Date: 14.3.2000

அன்புடைப்பெருமக்களே- ஸ்ரீவைஷ்ணவச் சான்றோர்களே ! மலைமேல் நிற்பாய் என்ற தலைப்பின் கீழ் எழுதப் பட்டுள்ள இந்நூல் நம் பார்வைக்கு என சில மாதங்கட்கு முன்னரேயே நம்மிடம் கொணர்ந்து அளிக்கப்பட்டது. கிட்டத்தட்ட 300 பக்கங்கள் கையெழுத்துப் பிரதியில் உள்ளன. இங்கு நமது திருக்கோவிலிலும், திருமடத்திலும் தொடர்ந்து முக்கியமான விழாக்கள் பலவும் கொண்டாடப்பட்டன. இக்காரணங்கொண்டு, இந்நூலை முழுமையாக நாம் படித்துச் சுவைத்திட போதிய அவகாசம் கிடைத்திலது.

நூலாசிரியருக்கு நூலை அச்சிடுவதற்கு நேர்ந்துள்ள இந்தத் தாமதமே பெரியது. இனியும் தாமதம் நேரக் கூடாது. ஒரு மிக மிக வேகமான கண்ணோட்டத்தின் பயனாக, இந்நூலாசிரியர் தமது இந்நூலில் ஸ்ரீவைஷ்ணவ சம்பிர தாயத்தின் பற்பல விஷயங்களையும், எம்பிரான்

அர்ச்சாவதாரமூர்த்தியாக விளங்கும் திவ்யதேசங்களையும் பற்றி எல்லாம் பரக்க எடுத்துரைத்திருப்பது தெரிகிறது. ஊன்றி முழுதும் படித்து ரசித்திட இப்போது இயலாமற் போய் விடினும், புத்தகமாய் இந்நூல் அச்சு ஏறி வெளிவந்த பின் சாவகாசமாக சுவைத்திட வேணும் என்பதே நமது அவா.

இந்நூலாசிரியரான ஸ்ரீமதி ஆண்டாள் , மதுரையில் மிகச்சிறந்த பக்தப்பெருமகனாயும். பாகவதோத்தமராயும் முன்னர் விளங்காநின்ற கீர்த்தி மூர்த்தி ஸ்ரீமான் கண்ணையா தாஸர் அவர்களது திருமகளாராவர். திருவரங்கத்தில் நித்யவாசம் செய்யும் இவர், பற்பல ஸ்ரீவைஷ்ணவ வித்வான்கள் பக்கல் ஸம்பிரதாயார்த்தங்களைச் செவிமடுத்தும், பயின்றும் பேறு பெற்றுள்ளார். பிரமாதி வருடத்தின் மார்கழித் திங்கள் முழுதும் உறையூர்த் திருக்கோயிலில் திருப்பாவை தொடர் சொற்பொழிவு நிகழ்த்திய பெருமை படைத்தவர். அன்னாரது இப்படைப்பு, படிப்போரனைவர்க்கும் பலபடிகளிலும் பயனளிக்கும் என்பதே நமது நம்பிக்கை. இந்நூல் வெளியாகி இச்சிறந்த வைணவப் பெண்பாலாசிரியரது நன் ஞானத்தை தமிழ் கூறும் நல்லுலகு முழுதும் உணர்ந்து மகிழ்ந்து பாராட்டும் வகையில் அமைந்திடுகஎன்றும் இவ் வாசிரியர் தமது அன்புமிகு கணவர், குழந்தைகள் முதலிய குடும்பத்தினரனைவருடனும் இனிது, நீடு வாழ்ந்து இத்தகைய தொண்டுகள் பலவற்றையும் மேன் மேலும் புரிந்திடுக என்றும் மனமார மங்களாசாஸனம் செய்கின்றோம்.

சுபம்.

*ஸ்ரீராமாநுஜன்*

பங்குனித் திங்கள் 1

பங்குனித் திருவிழா ஐந்தாம் நன்னாள்

**14.3.2000.**

ஸ்ரீ:

Sri Mathe Ramanujaya Nama:







**VANGIPURAM NAMBI THIRUVAI MOZHI ACHAN**

Sri.Sri. U.veT.K. Sampathkumar Achariyar Swamigal

Melkote, Mandya, Karnataka - 571 431.

✆(08236) 58816


ஸ்ரீமதே ராமானுஜாய நம:

க்ஷேமம் — மேல்கோட்டை
3.11.99

திருமதி ஆண்டாள் ராஜன் **மலைமேல் நிற்பாய்** என்னும் தமிழ் உரைநூலிற்கு மங்களாசாஸனம்.

ச்ரிய: பதியான ஸர்வேச்வரன் பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளில் இவ்வுலகையும் அதைச் சார்ந்துள்ளவற்றையும் ரக்ஷிக்கிறான். அவனது குணானுபவங்களை மனத்தினால் நினைத்து நாவினால் பாடி பாமர மக்களும் எளிதில் உணர்ந்து அவன் நித்திய கல்யாணகுணங்களைக் கொண்டாடி மகிழ ஆழ்வார்களும் ஆசார்யர்களும், ஸ்ரீவைஷ்ணவச் சான்றோர்களும் பல ஆய்வாளர்களும் அன்றும் இன்றும் என்றென்றும் இம்மானிடப் பிறவி கடைத்தேற பல்வேறு மார்க்கங்களைக் காட்டியுள்ளனர். 108 ஸ்ரீவைஷ்ணவத் திருப்பதிகளில் ரத்னஹாரத்தின் நடுநாயகம் போல் விளங்கும் வேங்கடகிரியில் வித்தகன்

திருவேங்கடவன் மலைமேல் நிற்கும் அழகினைத் தமது உரை நூலிற்கு தலைப்பாக எடுத்துக்கொண்டு ஆய்வுகளைத் திரட்டி பல நூல்களில் உள்ள கருத்துக்களைக் கையாண்டு மிக அழகாகவும், தெளிவாகவும் இந்நூலில் மிகவும் அற்புத மாகக் காட்டியுள்ளார்.

அர்ச்சாவதார மூர்த்திகளின் கீர்த்தியும், மலைமேல் நிற்கும் மலையப்பனாகிய வேங்கடவனின் ஏற்றமும், அர்ச்சா வதாரத்தின் நிரூபணங்களும், திவ்ய தேசங்களின் இன்றைய நிலைகளும் ஆழ்வார்கள் எம்பெருமான் இடத்தில் ஆட்பட்ட விதமும், பெரியகோயிலாம் திருவரங்கத்தில் பள்ளி கொண்டு ள்ள நம்பெருமாளின் பெருமையையும், மாலிருஞ்சோலை மணாளனையும், ஸ்ரீபூம் நமாமி சிரஸா யதுசைல தீபமாம் திருநாராயணபுரத்தில் எழுந்தருளி சேவை சாதித்து பெருநாடு காட்டும் திருநாரணனின் மகிமையும் மற்றும் அத்திகிரி அருளாளனான வரதனையும் இந்நூலில் தன் திறம் பட போற் றத்தக்க வகையிலே அனைவரும் படித்து இன்புறுமாறு ஆய்ந்து இந்நூலில் வெளியிட்டுள்ளவிதம் பாராட்டத் தக்கது. இந்நூலை வெளியிட இத்தம்பதியினர்க்கு இருக்கும் ஆர்வ மும் பக்தியும், ஸ்ரீவைஷ்ணவத்தில் இவர்களுக்கு உள்ள ஈடுபாடும் மிகவும் போற்றத்தக்கதாகும். இவரின் இச்சீரிய பணி வர்த்ததாம், அபிவர்த்ததாம் என்கிற மங்களாசானப்படி ஓங்கி உலகளந்த உத்தமனாகிய கலியுகத்தின் கண்கண்ட தெய்வமான ஏழுமலையானின் மலைமேல் நிற்கின்ற அழகை சேவித்துக்கொண்டு இவர்தம் இச்செயல் பொலிக, பொலிக என்று மங்களாசாஸனம் செய்து இத்தம்பதிகளும் இவர்கள் குடும்பத்தினரும் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து பரமனின் பெருமைகளை உலகோர்க்கு உணர்த்தி ஸ்ரீவைஷ்ணவத்தை உயர்ந்த நிலைக்கு கொண்டு வர பிரயத்தனப்படுமாறு மங் களாசாஸனம் செய்கிறோம்.

வேணும் மங்களாசாஸனம்

**வங்கிபுரம் திருவாய்மொழியாச்சான் சம்பத்குமாரன் ஸ்வாமிகள்.**

**சுபம்.**

ஸ்ரீ:



*ஸ்ரீமதே ராமாநுஜாய நம:*

*ஸ்ரீமத் வரவரமுநயே நம:*

*அண்ணன் திருவடிகள் சரணம்*

"வித்வான் சாஹித்ய ரத்னம், வைஷ்ணவ ரத்னம், வேத நெறி வித்த கர், ப்ரவசன மணி, சதுரகவி, பண்டித சிகாமணி, அருளிச் செயல் அருளமுதுச் செல்வர், பஞ்சமாம்னாய ரத்னம், ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய பாஸ் கரர், கலை மலிந்த சீர் நம்பி, விஷ்ணு பரத்வ ஸ்தாபக தீர சிகாமணி, வைஷ்ணவ ஸம்ப்ர தாய ப்ரவர்த்தக ஸம்பந்தர், ஸத்ஸம்ப்ரதாய செங்கட்சீயம், கோயில் தென்னாசார்ய ஸம்ரக்ஷண ஸபா வித்வான், ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரர்"

## R. நரஸிம்மாசாரியர்

**50, மேல உத்தர வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி - 620 006.**

சௌபாக்கியவதி. திருமதி ஆண்டாள் ராஜன் பரம்பரையான வைணவ குலத்தில் பிறந்தவர். வைணவக் கோட்பாடுகளிலும் திவ்யஸூரிகளான ஆழ்வார்கள் அருளிச் செயல்களிலும் மிகவும் ஆழங்கால் பட்டவர். அவர் எழுதி ய ஆய்வேடு **மலைமேல் நிற்பாய்** என்பதனை ஆரம்பம் முதல் இறுதி வரை படித்துச் சுவைத்தேன். மலைமேல் நிற்பாய் என்ற நம்மாழ்வார்பாசுரத்தை ஆதாரமாகக் கொண்டு இறைவனுடைய ஐந்து நிலைகளையும் விளக்கி யிருப்பது பற்றிய விரிவான விளக்கமும் அதற்கு உறு துணையாக திவ்யதேசங்களை விளக்கியுள்ளது. சுவை பட அமைந்திருக்கிறது.

ஆழ்வார் பாசுரங்கள் ஸ்ரீவசனபூஷணம் முதலிய வைணவ ஸம்ப்ரதாய நூல்களிலிருந்தும், பெருந்தேவனார் பாரதத்தில் இருந்தும் அரும்பெரும் கருத்துக்கள் எடுத்து ஆளப்பட்டுள்ளன. 108 திருப்பதிகளைப் பற்றிய குறிப்பு சிறப்பாயுள்ளது. ஆய்வேடுகளுக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ள இதன் சிறப்பு பாராட்டுக்குரியது.

திருமதி ஆண்டாள் அம்மாள் "தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன்" போது என்னும் பாசுரத்துக் கிணங்க பகவத் விஷயத்தில் பொழுது போக்கவும் அரும்பெரும் ஆய்வுகளைச் செய்யவும் வல்லளவராய் நல்லபதத்தால் மனைவாழ வேணுமென தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்க நகராளன், பதின்மர்பாடும் பீடுடைய அழகிய மணவாளனை வேண்டி

9-7-99 R. **நரஸிம்ஹாசாரியார்**

திருவரங்கம். *வித்வான்*



ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## அணிந்துரை

திருமாலடியார்கள் ஆதரித்துச் சொல்லுவது அர்ச்சாவதாரம் விரும்பிப் பூண்பது அர்ச்சாமூர்த்தியின் சூடிக்களைந்த துழாய்மலர்கள்; பேணிக் காண்பது அர்ச்சாமூர்த்தியின் அழகார் திருக்கோலம்; அரணாகப் புகுவதும் அர்ச்சா மூர்த்தியின் பூவார் பொற்றமரைத் திருவடிகள்; இவ்வாறு புக்க பின்னரும் விரும்பியிருப்பது பவளவாய் காண்பது. இவற்றுக்கு எல்லாம் அடியிட்டவர்கள் ஆழ்வார் பெருமக்களே யாவார்கள்.

அர்ச்சாவதாரம் என்ற கோட்பாடு ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் அடிநிலையாகும். இதனைப் பலர் அறியார்; எம்பெருமானார் திருவடி ஸம்பந்தமும் ஆழ்வார்களிடத்தில் அளவற்ற மதிப்பும் கொண்டவர்களுக்கே அர்ச்சாவதாரத்தின் அருமையும் பெருமையும் அறியவியலும்.

அறியாதார் பேசகின்ற வார்த்தைகளைக் கேட்டு மருள வேண்டாம்.அர்ச்சாவதாரம் என்பது ஒன்று கிடையாது என்றும் அர்ச்சாவதாரம் என்பது ஓர் அடையாளமாத்திரம் என்றும்; அர்ச்சாவதாரம் என்பது பாமரமக்கள் பணிந்தொழுவதற்குரியது என்றும் இன்னவாறு பேசுகின்றவர்களும் மலிந்திருக்கின்றார்கள். இவர்களுக்கிடையில் அர்ச்சா மூர்த்தியையே உபாயோபேமாகப் பற்றியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தளத்தில் தாமரை பூத்தாற்போல் ஆங்காங்கே விளங்கி வருகின்றனர். ஆழ்வார்களின் அருளிச்செயலும் ஆசார்யர்களின் செஞ்சொற்களும் அவர்களின் அநுட்டானங்களுமே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அருமருந்துகளாக விளங்கிவருகின்றன. ஆழ்வார்கள் திருஅவதரிக்க வில்லை என்றால், தேவதாந்தர பரர்களும் உபாயாந்தரபரர்களும், அந்தர்யாமிபரர்களான

உபாசகர்களுமேயாகி இவ்வுலகு இருள் மண்டியிருக்கும். அத்வைதிகளுக்கும் த்வைதிகளுக்கும் அர்ச்சாவதாரத்தில் ருசி விச்வாஸங்கள் ஏற்படவில்லை. விசிஷ்டாத்வைதிகளிலும் உபயவேதாந்திகளுக்கே அர்ச்சாவதாரம் ருசி விச்வாஸ ஜனகமாயிருக்கும். தமிழ் மொழியறியாத விசிஷ்டாத்வைத வித்வான்களும் ஆழ்வார்களின் அருளிச்செயலை ஆளவந் தார் ஆழ்வான் அவருடைய திருக்குமாரரான பராசரபட்டர் ஆகியோரின் ஸ்தோத்ரக்ரந்தங்கள் வாயிலாக அறிந்து வைத் துள்ளபடியால் அவர்களும் அர்ச்சாவதாரத்திலே மண்டி இருக்கிறார்கள்.

வேத சாஸ்த்ரங்கள் பகவத் பரத்வத்தில் ஊன்றி யிருக்கும்; ஸ்ரீபஞ்சராத்ராதி பகவத் சாஸ்தரங்கள் வ்யூஹா வஸ்த்தையில் ஊன்றியிருக்கும்; மந்வாதிஸ்ம்ருதிகள் அந்தராத்மதையில் ஊன்றியிருக்கும்; இதிஹாஸ புராணங் கள் பகவச் சேஷ்டித பரங்களாய் விபவங்களில் ஊன்றி யிருக்கும்; அர்ச்சாவதாரத்தின் மகிமைகளை அருளிச் செயல் கொண்டே நிரூபிக்கவேண்டும்.

அர்ச்சாவதாரத்தில் இருட்டறையில் விளக்குப்போல் கல்யாண குணங்கள் பூர்ணமாய் பிரகாசிக்கும். அவற்றிலும் வைத்துக்கொண்டு எளிமையே தலைசிறந்து நிற்கும். அதனால் தோஷபூயிஷ்டர்களான ஸம்ஸாரிகளும் கண்டு பற்றுதற்கு இயலும் படியாயிருக்கும். கர்ம, ஜ்ஞான, பக்தி மார்க்கங்களில் இழிய இயலாது பின்னடைந்தவர்களான அஸ்மதாதிகளுக்கு அர்ச்சாவதாரமே கதியாயிருக்கும். பின்னானார் வணங்கும் சோதி திருமூழிக்களத்துறையும் பூந்துழாய்முடி எம்பெருமானை ஸம்ஸாரிகளுக்கு ஒளி காட்டும் விளக்காய் வர்ணித்துள்ளார் திருமங்கையாழ்வார். விபவாவதார காலத்துக்குப் பிற்பட்டவர்களான சேதனர் களையும் ஆழ்வார் அவ்வாறு குறித்துள்ளார் என்னலாம்.

இவ்வாறு அர்ச்சாவதார வைபவத்தை வருணித்தால் அது அளவுக்கு அடங்காமல் பெருகிச் செல்லும்.

ஆயினும் நம் அருமை நண்பராக விளங்கி இப்போது திருநாட்டை அலங்கரித்து வாழ்பலரான பெரும்புகழாளர் ஸ்ரீமான் கண்ணையா ராமாநுஜதாஸரின் திருக்குமாரத்தியும் திருமால் அடியாரைப் பூசித்துத் திருவரங்கம் பெரியகோயிலை இப்போது அணிசெய்து வாழ்பவரான திருவருட்செல்வர் ஸ்ரீமான் ராஜன் ராமாநுஜதாஸரின் அன்பு மனையாட்டியும் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயை மாலையிட்டிருக்கும் திருவருட்செல்வி ஆண்டாள் ராஜன் அர்ச்சாவதாரத்தின் மாண்புகளையெல்லாம் விரிவுக்கு அஞ்சாது பூர்வாசார்யர்களின் கிரந்தங்களையெல்லாம் மேற்கோளாக்கி அழகியதோர் ஆய்வு நூல் வரைந்திருக்கிறார்.

கோயில் வித்வான் ஸ்ரீ.உ.வே நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி பக்கல் கேட்ட அரும்பொருளையெல்லாம் இந்நூலில் உலகுய்ய வழங்கியிருக்கிறார்.

ஸ்ரீவானமாமலைஜீயர் திருவடி சம்பந்தமும், கோயில் வித்வான் ஸ்வாமிபக்கல் கேட்ட ஆசார்ய சம்பந்தமும், அர்ச்சாவதாரத்தை அழகுறக்காட்டும் விஷய சம்பந்தமும் சேர்ந்திருப்பதால் இந்நூலில் வக்த்ரு வைலக்ஷண்யம் விஷய வைலக்ஷண்யம், கிரந்த வைலக்ஷண்யம் என்ற வைலக்ஷண்ய த்ரயமும் பிரகாசிக்கிறது. மலைமேல் நிற்கும் திருவேங்கடவன் திருவருளால் இந்நூல் அச்சு வடிவில் நூலாகி மலர்கிறது.

இனி இன்பமாரியாம் ஆழ்வாரின் அருள்கொண்டு இன்னபப்பாவாம் திருவாய்மொழியைக் கற்றறிந்து வீட்டின்பமாம் அர்ச்சாமூர்த்திக்கு ஆன அடிமைகள் யாவும் செய்வோமாக! ஸ்ரீ ஆண்டாள் ராஜன் இருவரும் இனிது வாழ்க! அவர்கள் பெற்றெடுத்துப் போற்றிவளர்க்கும் மக்கட் செல்வங்களும் இனிது நீடு வாழ்க!

வேங்கடகிரி இல்லம்
28A. அக்கிரகாரம் தெரு,
பழங்கானத்தம்
மதுரை - 625 003.

இங்ஙனம்
கலையிலங்கு மொழியாளர்
முனைவர் இரா. அரங்கராஜன்
M.A. PhD

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆரண நூல்காவலர், ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ

**ம. கி. நரஸிம்மாச்சாரியார் ஸ்வாமி**

M.A., (Tamil), M.A., (Public Admn), M.A., (Sociology)

ஆசிரியர் : பாஞ்சசன்னியம்

இயக்குநர் : ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீ அஞ்சல் வழிக் கல்வி முறை இயக்ககம்.

எமது நிறுவனத்தின் மூன்று நிலை ஸ்ரீவைஷ்ணவக் கல்வித்திட்டத்தின் மூன்றாம் நிலையான பிரபன்னா பட்டப் படிப்பினை முடித்து, 1998 ஆம் ஆண்டு ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ பட்டத்தினைப் பெற்றவர் திருமதி. ஆண்டாள் ராஜன் அவர்கள்.

பிரபன்னா தேர்வில் வெற்றி பெறுவதற்குக் கட்டாயப் பாடமாக 30 தலைப்புகள் ஏதேனும் ஒரு தலைப்பில் 160 பக்கங்களுக்குக் குறையாமல் ஆய்வுக் கட்டுரை ஒன்று எழுதப்பட வேண்டும் என்ற விதிமுறைக்கு உட்பட்டு எழுதப்பட்ட ஆய்வு கட்டுரையே இந்நூலாகும். திருமதி. ஆண்டாள் ராஜன் அவர்கள் மலைமேல் நிற்பாய் என்ற தலைப்பில் எழுதப்பட்ட அந்த ஆய்வுக் கட்டுரை அச்சுவடிவில் திருவேங்கடவனது இன்னருளால் இப்பொழுது வெளிவந்துள்ளது.

மூன்று நிலை தேர்வுகளிலும், மிகவும் பாராட்டத்தக்க வகையில் பயின்ற இந்த ஆய்வு நூலின் ஆசிரியர் **மலை மேல் நிற்பாய்** என்ற இந்த ஆய்வேட்டில் பல அரிய செய்திகளைத் தந்துள்ளார். ப்ரமேயவஸ்துவின் முடிந்த நிலையான அர்ச்சாவதார எம்பெருமான், கோயில், திருமலை, திருநாராயணபுரம் திருமாலிருஞ்சோலை ஆகிய

திவ்யதேசங்களில் எழுந்தருளி யிருக்கும். நிலையை ஆசிரியர் எடுத்துரைத்துள்ளார். முக்கியமாக திருவரங்கம் பெரியகோயில் நடைபெறும் எல்லா விழாக்களையும் சுவை குன்றாமல் தந்துள்ளார்.

இந்த நூலில் திருமதி ஆண்டாள் ராஜன் அவர்கள் கற்றறிந்த பெரியோர்களிடம் கேட்ட செய்திகளை மிக எளிய நடையில் தந்துள்ளார். ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது எமது நிறுவனத்தின் கீழ் மேலும் பல ஆய்வுக் கட்டுரைகள் விரைவில் வெளிவரஉள்ளன. அன்பர்கள் இந்த நூலினை பெற்று பயன் பெறுமாறு பெரியபிராட்டியார், பெரிய பெருமாள் திருவடிகளில் இறைஞ்சி நிற்கிறேன்.

''நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே'' என்று ஆழ்வார் (8.10.11) அருளிச் செய்தபடி இல்வாழ்க்கை வாழும் திருமதி.ஆண்டாள், திரு.ராஜன் மற்றும் அவர்களுடைய குடும்பத்தினருக்கு மேலும், மேலும் இது போன்ற கைங்கர்யங்கள் வாய்க்கப்பெற்று ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ நாடெங்கும் தழைத்திட பரம ஆசாரியரான எம்பெருமானார் திருவடிகளில் வேண்டி நிற்கிறேன்.

ஸ்ரீரங்கம் — அநேக மங்களாசாஸனத்துடன்

03.05.2000 — அ. கிருஷ்ணமாசாரியர்



ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆசார்யஹிருதயநாவலர், நடமாடும் ஸ்ரீவைஷ்ணவ காவலர் தோப்புஸ்வாமி என காஞ்சி ஸ்வாமியால் அபிமானிக்கப் பெற்ற திண்டுக்கல் P.L**இராமாநுஜதாசன்** அவர்கள் அளித்த அணிந்துரை.

**மலைமேல்நிற்பாய்** ஆய்வுநூலை முழுவதும் வாசித்து மகிழ்வெய்தினேன். நூலாசிரியர் ஆய்வு நூலில் கொடுத்துள்ள கருத்துக்கள் யாவும் அரிய, பெரிய ஆழ்ந்த கருத்துக்களாகும். அர்ச்சாவதாரம் பற்றிய ஆராய்ச்சி, அதற்குரிய ப்ரமாணங்கள் ப்ரமேயங்கள், உபநிஷத்து, விஷ்வக்சேன ஸம் ஹிதை, கடவல்லி தைத்திரியம், பாகவதம், பாரதம், பரிபாடல்கள், பகவத்கீதை ஸ்ரீவிஷ்ணுபுராணம், பாஞ்சராத்ரம், ஆசார்ய ஹிருதயம், ஸ்ரீவசனபூஷணம், அர்த்த பஞ்சகம், ஸ்ரீரங்கராஜ ஸ்தவம், மேலும் ஆழ்வார்கள் ஆசார்யர்கள், அர்ச்சாவதார எம்பெருமானிடம் ஈடுபட்ட விதமும், அவர்கள் அருளியச் செய்த திவ்யப்ரபந்தத்தைக் கொண்டு பல பாசுரங்களை மேற்கோளாக காட்டி, அதன் விளக்கத்தினையும் அளித்த பாங்கு மிகவும் சிறப்பாகஅமைந்துள்ளது.

அர்ச்சாவதார சிறப்புகளையும் கூறி, திவ்ய தேசங்களில் சிறந்து விளங்கும் திருவரங்கம், திருவேங்கடம், திருநாராயணபுரம், காஞ்சிபுரம், திருமாலிருஞ்சோலை, திருவரங்கத்தின் மதிள்கள், கோபுரங்கள் அதன் தத்துவங்கள், நம்பெருமாள் புறப்பாட்டு மகாத்மியங்கள், 12 மாத விழாக்களின் சிறப்புகள், அபரிமிதமானது. திவ்ய தேசத்தின் வரலாற்று நிகழ்ச்சிகளும் அந்த திவ்யதேசத்தில் ஆழ்வார் ஆசார்யர்கள் ஈடுபட்ட விதங்களும், திருவரங்க திவ்யதேசத்தின் சிறப்புகளையும் திருவேங்கடமுடையானின் நின்ற கோலத்தின் சிறப்புகள், திருநாராயணபுரத்தின் வரலாறு, உடையவர்

உகந்தருளிய திருநாராயண பிரதிஷ்டை, உடையவர் ஆழ்வான் சம்பாஷணை, திவ்யதேசத்து எம்பெருமான் களுடைய உற்சவாதிகள் சிறப்பு, பகல்பத்து, இராப்பத்து நடக்கும் விவரம். ஆழ்வார்திருவடி சார்தல் (**சூழ்விசும் பணிமுகில்**), ஆழ்வார்க்கு அர்ச்சிராதிபதி சத்காரங்கள், மற்றும் பலபல. ஆங்காங்கு கொடுத்துள்ள வைணவ சூட்சுமார்த்தங்கள் ஆசிரியை தனக்கே உரிய உயரிய ஆராய்ச்சிகள், வாசாம கோசரங்களும், நூலாசிரியை ப்ரபன்னா விருது மட்டும் போறாது, மேலும் பெரியோர்களால் ஆசீர்வதிக்கப் பெற்று ஸ்ரீவைஷ்ணவ ஆராய்ச்சி நூல் எழுதி வைணவ உலகில் பெண்ணும், பேதையரும், பயன் பெற்றுய்ய வேணுமென்று வாழ்த்துகின்றேன். ஆசிரியை அடியேனுக்கு நீண்டநாட்கள் பரிசயமும், கலந்துரை யாடலிலும் பங்கு கொண்டு சுமார் 15 வருடம் சம்பாஷணை புரிந்தும் இருந்தவர் நல்ல ஞானமும், சொரூப ரூபமும் பெற்று நோயற்ற வாழ்வுடனும், குறைவற்ற பெருஞ் செல்வம் வானமாமலை ஜீயர் ஸ்வாமிகளின் ஆசியும் பெற்று மகிழ் வுற்றுய்ய வேண்டி வாழ்த்துகின்றேன். வளர்த்த தினால் பயன் பெற்று ஞானக்கிளியை வணங்கி மகிழ்கிறேன்.

தாஸன்

**P.L.R தோப்புஸ்வாமி**



# 1.முன்னுரை

ஆய்வு நோக்கம்,

இன்று உலக மக்கள் அனைவரும் உயர்வதற்கும், எம்பெருமானை அடைந்து வீடு பேறு பெறுவதற்கும், உபாயமாக இருப்பது, கருணைக்கடலான எம்பெருமானது அர்ச்சை நிலை. இவ்வர்ச்சை நிலையில் தான் ஆழ்வார்கள், ஆசார்யர்கள் அனைவரும் பரிபூரண சரணாகதியினைச் செய்தார்கள், “புகலொன்றில்லா அடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே - (தி-வா 6-10-9) என்கிறார் நம்மாழ்வார். மேலும் ஆசார்யனிடம் பஞ்சஸ்ம்ஸ்காரம் பெற்ற பின் ஏற்கும் நித்ய திருவாராதன கைங்கர்யத்திற்கு விஷயமான, அர்ச்சாவதார எம்பெருமான் மீது அடியேனுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. அந்த அர்ச்சைக்கு பொருள் சேர்க்கும். “மலை மேல் நிற்பாய்” என்ற தலைப்பை எடுத்து என் அறிவுக்கு எட்டியவாறு எழுத முனைந்தேன். என்னுடைய இந்த முயற்சி கடல் நீரைக் கையில் இறைக்க முயலுவதைப் போன்றதேயாயினும் ஆவல் மேலுற்று இதனைச் செய்ய துணிந்தேன். கடல் நீரை மேகமானது பருகி நமக்கு தருவது போல், ஆழ்வார்கள், ஆசார்யர்கள் அனுபவித்து நமக்கு காட்டி கொடுத்ததையும், அவர்கள் அர்ச்சை நிலையில் ஈடுபட்டதையும், அர்ச்சை நிலைக்கும், மற்ற நிலைகளுக்கும் உள்ள வேறுபாடும், திவ்ய தேசத்தின் நிலைகளையும், திவ்ய தேசத்தில் எம்பெருமான் எந்தெந்த நிலைகளில் எழுந்தருளியுள்ளான் என்பதையும் காட்டியுள்ளேன்.

“பின்னானார் வணங்கும் சோதி திருமூழிக்களத் தானாய்” என்ற விடத்து திருமூழிக்களம் ஒன்றைச் சொன்னது உபலக்ஷணமாய் ஸகல திவ்யதேசங்களையும் காட்டுமா போலே இங்கும் “மலை மேல் நிற்பாய்” என்று திருமலை ஒன்றைச் சொன்னது மற்றுமுள்ள ஸகல திவ்யதேசங் களுக்கும் உபலக்ஷணமாகும்.

108 திவ்யதேசங்களில் முதன்மையானதும் பெரும் பெருமை பெற்றதுமான திருவரங்கத்தின் சிறப்புகள், அச்சிறப்பினை ஆழ்வார்கள் அனுபவித்தமையும், ஏழு மதிள்களின் பெருமையும், அங்கு நடைபெறும் உற்சவங் களையும் குறிப்பிட்டுள்ளேன். சிந்து பூ மகிழும் திருவேங்கடம், காஞ்சிபுரம், திருமாலிருஞ்சோலை, திருநாராயணபுரம் போன்ற திவ்யதேச வைபவத்தினையும் இதில் சேர்ந்துள்ளேன்.

அடியேன்

ஆண்டாள் ராமாநுஜ தாஸ்யை



## 2. அர்ச்சாவதாரம் விளக்கம்

அடியேன் ஆச்சாரியன் கிருபையால் மலை மேல் நிற்பாய் தலைப்பில் எழுத நியமிக்கப்பட்டுள்ளேன். ஆசார்யன் அருளே இந்த காரியத்தை நிறைவுறச் செய்ய வேணும் மலைமேல் நிற்பவனுக்கும் பெருமை ஏற்படும் வண்ணம் நடத்தியருளவேணும்.

"மலை மேல் நிற்பாய்" என்னும் தொடர் மலையிலுள்ள எல்லா திவ்யதேசத்துக்கும் பொதுவான திருநாமமாயிருப் பினும், திருவேங்கடமுடையானையே இவ்விடத்தில் குறிப்பாகச் சொல்லுகிறது. ஆழ்வார் திருவாய்மொழியில் அவ்விதமே திருவுள்ளம் பற்றுகிறார் "திவ்ய தேசங்களுக்கு வேர்ப்பற்று".

"மலைமேல் நிற்பாய்" என்ற ஏற்றம் என் என்னில், அமலனாதிபிரானில், திருப்பாணாழ்வார் அருளிச்செய்த படியே திவ்யதேசங்களுக்கு வேர்ப்பற்றான திவ்யதேசம். திருமலையாகும். பரமபதத்திலிருந்து திருப்பதியில் வந்து நின்று சாதாரண ஸம்சாரி ஜனங்களை உஜ்ஜீவிப்பிக்கப் பாங்கான இடம் ஏதென்று பார்த்து உபய காவிரி மத்யத்திலே நீர்ப்பாங்கான சோலைகள். மிகுந்த திருவரங்கத்தை மிக விரும்பி எழுந்தருளினான். ஆக திவ்யதேசங்களுக்கு வேர்ப்பற்றான இடம் திருமலை. இது அர்ச்சாவதாரங்களுக் கெல்லாம் வேர்ப்பற்றானது இங்கிருந்தே மற்ற திவ்யதேசங் களுக்கும் எழுந்தருளினாற் எம்பெருமாள் உலகை படைப்பதற்காகவும், பக்தர்கட்காகவும், தம்மை ஐந்து வடிவங்களில் தன்னை அமைத்துக் கொண்டுள்ளான். அவையாவன பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என ஐவகைப்படும்.

**பரத்வம்:** பரமபதத்தில் எம்பெருமான் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்ற மூன்று தேவிமார்களுடனும், நித்திய சூரிகளுடனும், முக்தர்களுடனும் எழுந்தருளியுள்ளான்.

இங்கு எம்பெருமானுக்கோ, நித்தியசூரிகளுக்கோ, முக்தர்களுக்கோ, பசி, தாகம், தூக்கம், துக்கம், அயர்வு என்பன கிடையாது. நித்தியசூரிகள் பரவாசுதேவனான எம்பெருமானின் அழகிலும், கல்யாணகுணங்களிலும், ஈடுபட்டு எப்போதும் அவர்களைச் சாமகானத்தில் புகழ்ந்துகொண்டு ஆனந்தித்திருப்பார். அத்திவ்யதம்பதி களோ இவர்களின் சேர்த்தியில் ஆனந்தம் கொண்டிருப்பார். இவ்வுலகிற்குப் பாட்டுக்கேட்கும் உலகு என்று பெயர்.

**வ்யூகம்:** பரமபதத்தில் பரவாஸுதேவனான எம் பெருமான், வைகுண்டத்திலிருந்து புறப்பட்டு வெள்ளையதீவு என்று சொல்லப்படும், க்ஷீராப்தி என்ற பாற்கடலில் பக்தர்களின் தரிசனத்திற்காகவும் தன்னைக் கீழ்க்கண்ட வ்யூகமாக பிரித்து ஆதிசேடனின் படுக்கையில் திருமகளும், பூமகளும் திருவடி வருட யோகநித்திரை செய்து அறிதுயிலமர்ந்த நிலையில் உள்ளார். இதைத்தான் "உறங்குவான் போல யோகு செய்து" என்பார் நம்மாழ்வார்.

இந்த வ்யூகத்தில் (வ்யூகம் என்றால் விரிவுப்படுத்துதல் எனப்பொருள்.

கிழக்குநோக்கிச் சிரிப்புடன் கூடிய வாசுதேவனாகவும்
தெற்கு நோக்கிச் சிங்கமுகம் கொண்ட சங்கர்ஷணனாகவும்
வடக்கு நோக்கிய வராகமும் கொண்ட பிரத்யுமனனாகவும்
மேற்கு நோக்கிய ருத்ரமுகம் கொண்ட அனிருத்தனாகவும்

தம்மை வ்யூகப்படுத்தி ஸர்வ திக்குகளையும் நோக்கியுள்ளார்.

தேவர்கள் தமக்குத் துன்பம் நேரிடும் போதெல்லாம் இந்தப் பாற்கடலின் கரையில் வந்து நின்று க்ஷீராப்திநாதனைப் பள்ளியெழுந்து தமது முறையீட்டினைத் தெரிவித்து அபயக்குரல் கொடுப்பர். எம்பெருமானும் அபயமளிப்பான், எனவே இந்த உலகிற்கு கூப்பாடு கேட்கும் உலகு என்று பெயர்.

இந்த வ்யூக வாசுதேவனுடன் மற்றைய மூன்று உருவங்களும் பிரளய காலத்தில் ஐக்கியமாகி விடுகின்றன என்பது ஐதீஹம் ஸ்ரீகஜேந்த்ராழ்வான் "நாராயணா ஓ மணிவண்ணா!" என்று கூப்பிட்டவுடன், எம்பெருமான் கருடாழ்வானை வேகம் கூட போதவில்லை என்று கருடனை தன் கையில் இடுக்கிக்கொண்டு பறந்து வந்தான். (இது பட்டர் அநுபவித்த ப்ரகாரம்) அப்படியிருந்த தான் இன்னும் சீக்கிரமே வந்திருக்க வேணும் என்று எண்ணி அதனாலேயே வ்யூஹம் என்னும் திருப்பாற்கடலில் வந்து படுத்தான். (கஜேந்த்ராழ்வானைப் போல் வேறு யாராவது கூப்பிட்டால், உடனே கேட்கும்படியாக என்றிறே நம்பூர்வர்கள் அநுசந்திப்பது) ஆக வ்யூஹம் திருப்பாற்கடலில் சயனித்திருக்கும் இருப்பு.

**விபவம்:** அவதார என்ற வடசொல்லுக்கு இறங்கி வருதல் என்று பொருள். உலகுய்யவும், பக்தர்கட்காகவும், பரமபதத்திலிருந்து இறங்குகிறான். ஸ்ரீஇராமனாகவும், ஸ்ரீகிருஷ்ணனாகவும், பூவுலகில் தோன்றின அவதாரங்களை விபவம் என்பர். இவைகள் பூர்ணாவதாரம், அம்சாவதாரம் ஆவேச அவதாரம் என்று வகைப்படும்.

**பூர்ணவதாரம்** - இராம, க்ருஷ்ண, வாமன அவதாரங்கள்

**அமிசாவதாரம்** - மச்சாவதாரம், வராக அவதாரம் போன்றது.

**ஆவேசஅவதாரம்** - பரசுராம அவதாரம்

**அந்தர்யாமித்வம்:** ஸகல ஜீவராசிகளுக்குள்ளும், இருந்து இவ்வுலகை நடத்துபவன். இத்தை "உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் என்று ஆழ்வார் திருவாய்மொழியிலும், "அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம்" (ஜனங்களுக்கு உள்ளே புகுந்து நியமிக்கிறான்). வேதமும் கோழிக்கின்றன.

**அர்ச்சாவதாரம்:** ஒரு பக்தன் தங்கம், வெள்ளி, கல், மரம், சாளக்கிராமம், முதலிய வஸ்துக்களில் யாதாயினு

மொரு கருப்பொருளில் தன் மனத்திற்குகந்த வாறும், சாஸ்திரங்களில் கூறிய முறை வழுவாமலும், மேற்சொன்ன வற்றில் ஏதாயினுமோர் உருவத்தை பிரதிஷ்டை செய்து வழிபடும் முறைக்கு அர்ச்சாவதாரம் என்று பெயர்.

இதுவே ஸம்ஸாரம் கிழங்கொடுத்தாலொழியப் பேரேன் என்று நிலை ஆழ்வார்கள் அநுபவித்த திவ்ய தேசம் தோறும் நமக்கு கண்ணால் பருகுமாறு எழுந்தருளியிருப்பவன்.

**அர்ச்சையின் விசேஷங்கள்:** நம்முடைய காலத்திலும் எப்போது வேண்டுமானாலும் ஒரு இடமின்றிக்கே 108 திவ்யதேசங்களிலும், ஆயிரக்கணக்கான ஆசாரிய அபிமான ஸ்தலங்களிலும் கண்ணுக்கும் மனத்திற்கும் இனிமை தரும்படியாக எழுந்தருளியிருக்கும் இருப்பு. அப்படி ஒரு திவ்யதேசத்தை நாடிப் போக முடியாவிடில் தன் அகத்தில் (வீட்டில்) அவரவர் ஏற்படுத்தும் விக்ரஹங்களில் வந்து எழுந்தருளும் எளிமை. இத்தை ஆழ்வாரும் கனிவார் வீட்டின்பமே திருவாய் 2-3-5 என்று க்ருஹங்களில் திருவாராதனம் பண்ணும் எம்பெருமான் விரித்துள்ளார். இது வேறெங்கும் காண முடியாத எளிமையின் எல்லை நிறம்.

(இப்பாசுரத்தின் ஒன்பதினாயிரப்படி வ்யாக்யானத்தில் "அவர்களிருந்த வடத்தே வந்து போக்யனாகையும்" என்று ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது.

ஆழ்வார்கள் அனைவரும் அர்ச்சாவதாரத்திலேயே ஆழ்ந்திருந்தார்கள். இவர்களும் ஆழும்படியாக திவ்யதேசங் களில் எழுந்தருளியும், சிந்தை தன்னுள் நீங்காதிருந்தும் இவர்கள் சொன்ன வண்ணம் செய்தும், எழுந்திருந்து பேசியும், மூவரையும், ஓரிடத்தில் நெருக்கியும் இப்படி அனைவரையும் தன் அழகிலும், குணங்களிலும் ஈடுபட்டு மூவாறு மாதம் மோஹிக்கச் செய்தும், ஆழ்வார்களாக்கி னான். இவையெல்லாம் அர்ச்சாவதாரத்திலன்றோ நடந்தது!

பூர்வாசார்யர்கள் விஷயத்திலோவென்னில் எம்பெருமானார் திருவுள்ளக் குறிப்பையொட்டியே தான் நடக்க விழைந்தான். அரங்கன் நாடு நகரமும் நன்குடன் காண...வீடும் பெறுத்தி" - (திருவாய். 3-10-11) என்கிறபடியே எல்லோரும் காணும்படி எல்லா நலன்களையும் செய்தருளினான்.

ஸ்வாமி நம்பிள்ளையின் ஒரு முறிச்சீட்டுப்படி பரமபதம் செல்லும்படியாக ஆக்கி கொடுத்தான்.

ஸ்வாமி பிள்ளை உலகாரியன் "ஸ்வஸ்வாமி பாவத்தை மாறாடிக்கொண்டு" என்று தத்வத்ரயம் அருளியதால், அவர் விஷயத்தில் தான் சொத்தாகவும், அவரை ஸ்வாமியாகவும், தான் ரக்ஷ்யமாகவும், அவரை ரக்ஷகமாகவும். கொண்டு திருவரங்கத்தை விட்டு எழுந்தருளினான் அரங்கன். ஸ்வாமி மணவாளமாமுனிகளுக்கு தனியனை ஸாதித்து சிஷ்யனாக்கி ஆசார்ய ஸம்பாவனையாக தன் சேஷ பீடத்தையும் அளித்தருளினான். அர்ச்சாவதாரத்தில் அவன் செய்தருளிய ஏற்றங்கள் நெஞ்சால் நினைப்பிதே.

"அர்ச்சாவதாரமாவது – ஆஸ்ரிதர் உகந்தது ஏதேனுமொரு த்ரவ்யத்தை அதிஷ்டித்து அதிலே திவ்ய மங்கள விக்ரஹத்திற் பண்ணும் ஆதரத்தைப் பண்ணிக் கொண்டு ஆஸ்ரிதபராதினனாய், கோயில்களிலும், க்ருஹங்களிலும் காலாவதியின்றிக்கே அவதரிக்கை."

(தத்துவத்திரயம்)

(ஆஸ்ரித பராதினனாய்) தன்னை ஆராதிப்பவர்களுக்கு வாஸப்பட்டிருக்கும் ஸ்நானம், அமுது செய்தல், புறப்படுதல் முதலான எல்லாச் செயல்களையும் உடையவனாய் என்ற கருத்து. அர்ச்சக என்னாமல் ஆஸ்ரித என்கையாலே, தன்னை ஆராதிக்கும் அர்ச்சகனுக்கு மாத்திரமல்லாமல், தன்னைத் தஞ்சமாக நினைத்திருக்கும் அடியார் அனைவருக்கும் வஸப்பட்டிருப்பவன் என்று உணர்த்தப் படுகிறது.

ஸ்வஸ்வாமிபாவத்தை மாறாடிக்கொண்டு, அஜ்ஞரைப் போலேயும், அஸக்தரைப் போலேயும், அஸ்வதந்த்ரரைப் போலேயும் இருக்கச்செய்தேயும் அபார காருண்ய பரவஶனாய்க் கொண்டு ஸர்வாபேஷிதங்களையும் கொடுத்தருளும் என்று பிள்ளைலோகாசார்யர் தத்வத்ரயத்தில் கடைசி சூர்ணையில் அருளிச்செய்தது இங்கு அனுஸந்திக்கத்தக்கது.

(கோயில்களிலும், க்ருஹங்களிலும்) பல சேதனர்க்குப் பொதுவான கோயில்களிலும், அந்தந்த அடியவர்களுக்கே யான வீடுகளிலும், ஆகமங்களிலும் இவை "பரார்த்தம்" என்றும் "ஸ்வார்த்தம்" என்றும் வழங்கப்படும். ப்ரார்த்தமான கோயில்களில் ஆராதன ப்ரகாரம் விரிவாயிருக்கும். ஸ்வார்தமான வீடுகளில் அது சுருக்கமாயிருக்கும். (காலா விதியின்றிக்கே அவதரிக்கை)

விபவாவதாரங்களில் மத்ஸ்ய கூர்ம, வராஹ, நரஸிம்ஹ, அவதாரங்கள் க்ருத்யுகத்தில் என்றும், வாமன, பரசுராம, ராம அவதாரங்கள் திரேதாயுகத்தில் என்றும், பலராம க்ருஷ்ணா அவதாரங்கள் துவாபரயுகத்தில் என்றும், கல்கியவதாரம் கலியுகத்தில் என்றும் ஒரு நியதியுண்டு. அந்தந்த அவதாரங்களோடு இவ்வளவு காலம் எழுந்தருளியிருப்பான் என்னும் காலக் கணக்குமுண்டு. அப்படி ஒரு கால நியதியோ, கால எல்லையோ அர்ச்சாவதாரத்துக்குக் கிடையாது.

இங்கு கால எல்லை இல்லை என்றது தேஸ நியமும் அதிகாரி நியமமுமில்லை என்பதற்கும் உபலக்ஷணம். அதாவது அயோத்யையில் ராமாவதாரம். மதுரையில் க்ருஷ்ணாவதாரம் என்னும் தேஸநியமமும், தஸரதன் முதலானார்க்காக ராமாவதாரம் வஸுதேவர் முதலானார்க் காகக் க்ருஷ்ணாவதாரம் என்னும் அதிகாரி நியமமுமில்லா மல் அன்புடையார் அனைவர்க்குமாக எல்லா தேசத்திலும் ஏற்பட்டது. அர்ச்சாவதாரம் ஆகும்.

• • • • • • • • • •

# நன்றியுரை

"ஸ்ரீவைணவ சமயமரபு நூல்கள் ரஹஸ்யக்ரந்தங்கள், முதலானவற்றை எனக்களிப்பவரும், இவ்வாய்வேட்டிற்கு நெறியாளருமாக இருப்பவரும், பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்டு அறியாதன அறிவித்து வரும் ஸ்ரீ.உ.வே மஹாவித்வான் R. நரஸிம்மாச்சார்யர் ஸ்வாமி களின் திருவடி மலர்களை அடியேன் சென்னிக்கு அணியாக ஏற்கிறேன்.

"ஞானம் அநுட்டாநம் இவை நன்றாகவே உடையனான குரு" என்னும் மாமுனிகளின் வாக்கிற்கு இலக்கணமாய் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ கல்வி முறையூடே பாடங்களை அறிவித்தும், இழிந்த இடமெல்லாம் துறையாகும்படி தெளிவை பிறப்பித்தும் வழி காட்டிய எம் கல்வி முறையின் இயக்குநர் ஸ்ரீமான் உ.வே. அ.கிருஷ்ணமாச்சார்ய ஸ்வாமி அவர்களிடம் பெருநன்றியுடையேன்.

அடியேனது வைணவத்திற்கு வித்திட்ட எந்தையாரும் பரமபத வாசியுமான "ஸ்ரீமான்வைஷ்ணவ ரத்ன" கண்ணையா ராமாநுஜ தாஸர், அவர்களுக்கும், அடியேனின் தாயார் துளசியம்மையார் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

வைணவத்தை வேரூன்ற வைத்தவரும் ரஹஸ்ய க்ரந்தங்களில் முதல் அநுபவங்களை ஏற்படுத்தியவரும், இந்நிலவுலக திவ்யதேசங்கள் நூற்று ஆறினையும், காட்டித் தந்தவரும் இவ்வாய்வேட்டிற்கு அணிந்துரை நல்கியவருமான மதுரை பேராசிரியர் ஸ்ரீமான் உ.வே. டாக்டர் அரங்கராஜஸ்வாமி Phd., அவர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றி.

அடியேன் இல்ல சமையல் பணியில் ஈடுபடும் நேரங்களில் கூட ஓயாமல் மணிக்கணக்கில் மறைபொருள் நுணுக்கங் களை தெளிவாக்கும் சௌலப்யர் திண்டுக்கல் ஸ்ரீமான் தோப்பு ஸ்வாமி அவர்களுக்கு தலையல்லால் கைமாறு செய்திலேன்.

இந்நூலுக்கு பெருமை சேர்க்கும் அணிந்துரைகளை அருளியுள்ள ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வானமாமலை கலியன் ராமானுஜ ஜீயர் ஸ்வாமிகளின் திருவடி தாமரைகளிலும், ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்கம் நாராயண ஜீயர் ஸ்வாமி மற்றும் ஸ்ரீமத் வங்கிபுரம் நம்பி திருவாய்மொழி ஆச்சான் ஸ்ரீஸ்ரீஉ.வே. சம்பத்குமார் ஆச்சாரியர் ஸ்வாமிக்கு அடியேனின் சிரம் தாழ்ந்த நன்றிகள் உரைத்தாகும்.

ஆய்வின் போது பல கால், பல்வேறு கோணங்களில் ஐயங்கள் அடியேனுக்கு எழுந்த சமயம் அப்போதைக்கப் போதே தெளியச்செய்து, அவ்வப்போது அடியேனுக்கு ஏற்பட்ட மனத்தளர்வுகளை வேர்அறுத்து உக்கமேற்றிய திருத்தம்பதியினர் கோயில் திருமஞ்சன கண்ணன் ஸ்வாமி மற்றும் ராஜலட்சுமி அம்மங்கார் அவர்களின் அன்பிற்கும், அருளுக்கும், யான் என்றென்றும், கடமைப்பட்டுள்ளேன். அம்மங்கார் அவர்கள் அடியேனுக்கு நேரிலும், தொலைபேசி மூலமும், மணிக்கணக்கில் எனது ஐயங்களை தீர்த்து நூலின் குறைகளை பெருமளவு குறைத்து திருத்தங்கள் செய்த பாங்கு அடியேனை மிகவே நெகிழச் செய்துள்ளது.

இந்நூலினை வடிவமைக்கும் சமயங்களில் பிற இல்லப்பணிகளை ஏற்றுக்கொண்டு மறைமுகமாக உதவிய என் அன்புச் செல்வங்கள் பத்மசுஜா, ஐஸ்வர்யா, நம்பி மணவாளன் ஆகியோர்க்கு எனது ஆசிர்வாதங்கள்.

இவ்வாய்வேடு எழுதுவதற்கு எனக்கு ஊக்கமளித்தும், வாழ்க்கையில் உறுதுணையாக இருப்பதுடன் இவ்வாய்வேடு சிறந்த முறையில் உருவாவதற்கு நூல் வடிவில் வெளி வருவதற்கு அனைத்து வகையிலும் உதவி புரிந்த எனது கணவன் C.V. ராஜன் B.E., MTech.,அவர்களுக்கு எற்றைக் கும் ஏழேழ் பிறவிக்கும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூல் அலர்மேல் மங்கையுறை மார்பனான திருவேங்கட முடையான் திருவருள் திறத்தாலும், திருமலை திருப்பதி தேவஸ்தான நிதியுதவியினாலும், வெளியிடப்பெற்றுள்ளது. தேவஸ்தானத்தாருக்கு அடியேனது முதல் முயற்சி,

பெரியோர்கள் பிழை பொறுத்துத் திருத்திப்பணிகொள்ள வேண்டுமாய் விண்ணப்பித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறந்த முறையில் அச்சிட்டு வெளிவரப் பெரிதும் உதவி புரிந்த ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாச்சியார் அச்சக உரிமையாளர் மற்றும் அலுவலர்கள் அனைவருக்கும் எனது உளம் நிறைந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

இப்படிக்கு

அடியேன் இராமானுஜ தாஸ்யை,

**ஆண்டாள் இராஜன்.**



ஆண்டாள் ரங்கமன்னார்

## நூலாசிரியரைப் பற்றி



**திருமதி. ஆண்டாள் இராஜன்,**
Flat No.1. N.J.அப்பார்ட்மெண்ட்,
81, அம்மா மண்டபம் சாலை,
திருவரங்கம்,
திருச்சி - 620 006.
தொலைபேசி எண் - (0431)434127

மதுரை "ஸ்ரீவைஷ்ணவரத்னம்" G. கண்ணையா ராமாநுஜ தாஸன், திருமதி துளசியம்மையார் தம்பதியர்க்கு 1962ஆம் ஆண்டு மகளாகப் பிறந்த திருமதி ஆண்டாள் 1977ஆம் ஆண்டு திரு.C.V.ராஜன் அவர்களை மணவாளராக அடைந்தார். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வானமாமலை சடகோபராமாநுஜஜீயரிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்றவர். தமிழ் இலக்கியத்தில் B.Lit. பட்டம் பெற்ற இவர், சிறு வயது முதற்கொண்டு, சிறந்த பாகவதோத்தமரான தம் தந்தையாரிடமும், ஸ்ரீஉ.வே. மதுரை வீரராகவ அய்யங்கார் ஸ்வாமிகள், மதுரைப் பேராசிரியர் ஸ்ரீ.உ.வே. டாக்டர். அரங்கராஜன் ஸ்வாமிகள் போன்றோரிடமும், தற்சமயம் தொடர்ச்சியாக திண்டுக்கல் தோப்பு ஸ்வாமிகளிடமும், கோயில் வித்வான் ஸ்ரீஉ.வே நரஸிம்மாசார்யர் ஸ்வாமியிடமும் ரஹஸ்யக்ரந்தங்கள், அருளிச்செயல் உள்ளிட்ட ஸம்ப்ரதாய விஷயங்களை வரியடைவே காலக்ஷேபமாக கற்று அறிந்து வருகிறார். ஆரம்பத்தில் கபிஸ்தலம் ஸ்ரீஉ.வே ஸ்ரீநிவாஸா சார்யர் ஸ்வாமியிடமும், தற்சமயம் திருவரங்கம் திருமதி ராஜலக்ஷ்மி அம்மங்காரிடமும் அருளிச்செயல்கள் மற்றும் ஸ்தோத்ரங்களை கற்றறிந்து வருகிறார். ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ நடத்தும் தபால்வழி கல்விமூலமாக "ஸ்ரீவைஷ்ணவ காருண்யஸ்ரீ", "ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்யஸ்ரீ" மற்றும் "ப்ரபன்னா" பட்டம் பெற்றுள்ளார். 1999-2000 மார்கழியில் உறையூர் நாச்சியார் கோயிலில் திருப்பாவை தொடர்உபன்யாசம் மற்றும் அவ்வப்பொழுது சிற்சில உபன்யாசங்களும் செய்து வருகிறார். திரு C.V.ராஜன், திருமதி ஆண்டாள் இராஜன் தம்பதியர்க்கு, சௌ. R. பத்மசுஜா, சௌ. R. ஐஸ்வர்யா என்ற இரு குமாரத்திகளும், R. நம்பி மணவாளன் என்ற ஒரு குமாரனுமாக குடும்பத்தினர் அனைவரும் பகவத், பாகவத விஷயங்களில் ஈடுபாடு உடையவராகத் திகழ்கின்றனர்.

## (1) மலை மேல் நிற்பாய்-அர்ச்சாவதார குறியீடு

**விண்மீதிருப்பாய்! மலைமேல்நிற்பாய்! கடற்சேர்ப்பாய்! *
மண்மீதுழல்வாய்! இவற்றுளெங்கும்மறைந்துறைவாய்! *
எண்மீதியன்றபுறவண்டத்தாய்! எனதாவி *
உள்மீதாடி உருக்காட்டாதேஒளிப்பாயோ?**

(திருவாய்மொழி 6-9-5)

| | | |
|---|---|---|
| **விண்மீதிருப்பாய்** | - | **பரத்வம்** |
| **கடல் சேர்ப்பாய்** | - | **வ்யூஹம்** |
| **மண்மீது உழல்வாய்** | - | **விபவம்** |
| **மலைமேல்நிற்பாய்** | - | **அர்ச்சை** |
| **மறைந்துறைவாய்** | - | **அந்தர்யாமி** |

எம்பெருமான் நித்தியவிபூதியான பரமபதத்தில் வீற்றிருக்கிறான், அர்ச்சாவிக்ரஹமாய் திருமலையில் நின்று காட்சியளிக்கிறான், திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்கிறான், இராமனாகவும், கிருஷ்ணனாகவும் அவதாரம் செய்து பூமியின் மேல் கண்காண வந்து அருள் செய்கிறான், இந்த ஜகத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும், அந்தர்யாமியாய் மறைந்து உறைகிறான். எண்ணில் அடங்காத, மற்றும் உண்டான அண்டங்களின் உள்ளும், என் ஆத்மாவின் உள்ளும், எங்கும் அடியார்களின் பொருட்டு சமீபனாயிருந்துக் கொண்டு உன் வடிவைக் கண்ணுக்குக் காட்டாமல் ஒளிக்கலாமா? உன் திருவடியைக் காட்டாது ஒளிப்பதோ என்கிறார் நம்மாழ்வார்.

இந்தப்பாடலில் ஆழ்வார் எம்பெருமானின் ஐந்து நிலைகளைப் பேசுகிறார். ஆழ்வார்கள் ப்ரபத்தி செய்கிற இடங்களாக பரத்துவம் முதலான நிலைகள் இருக்க, அர்ச்சாவதாரத்திலே ப்ரபத்தி செய்வது ஏன் எனில் இவ்விடத்தில் குணங்கள் நிறைந்து இருத்தலேயாகும். பூர்ணம் என்கையாலே, எல்லா குணங்களும் புஷ்கலங்கள் (ஸ்ரீவசனபூஷணம் - 37) (பூர்ணம் - நிறைவு, என்கையாலே - என்று வேதம் சொல்லுகையாலே. புஷ்கலங்கள் - நிறைந்திருப்பனவாம்.)

"பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவ அவிஸிஷ்யதே ஸர்வம் பூர்ணம் ஸஹோம்"- (என்பது கடவல்லி உபநிடதம்)

மேலும் "பூர்த்தியையும், ஸ்வாதந்திரியத்தையும், குலைத்துக் கொண்டு தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கும் இடம் அர்ச்சாவதாரம் ஆகும்." (ஸ்ரீவசன பூஷணம் - 39).

"பூகத ஜலம் போலே அந்தர்யாமித்வம்; ஆவரண ஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே வ்யூஹம் பெருக்காறு போலே விபவங்கள். அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்." (ஸ்ரீவசன பூஷணம்-40) இதில் பரத்வம் முதலானவைகளின் நிலையையும் அர்ச்சாவதாரத்தின் எளிமை யையும் அதனுடைய பெருமையையும் கூறுகிறார் பிள்ளை உலகாரியன்.

ப்ரபத்திக்கு குணங்கள் நிறைந்த இடமே இலக்காக வேண்டும். அந்த குணங்கள் பூர்ணமாக உள்ளது, அர்ச்சாவ தாரத்திலே தான். அதனால்தான் ஆழ்வார்கள் எல்லோரும் அர்ச்சாவதாரத்திலே ப்ரபத்தி பண்ணினார்கள்.

அர்ச்சாவதாரத்திலே எல்லா குணங்களும் நிறைந் திருக்கும் என்றும், தன்னை விரும்பாதவரையும் தான் விரும்பி நிற்கும் இடம் என்றும் கூறுவர். பரத்வம் முதலான நிலைகள் ஒவ்வொரு வகையாலே பற்றுதற்கு அரியன. அர்ச்சை எல்லா வகையிலும் பற்றுதற்கு எளியதானது.

ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களின், திவ்யதேசங்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடத்தில் தானே, நாயக நாயகி பாவத்திலோ மற்ற பாவங்களிலோ ஈடுபட்டு பாசுரங் களைப் பாடினார்கள்!. ப்ரேமத்தினாலே குழந்தையாக நினைத்துக் கொஞ்சினார்கள். இப்படி பல விதமான அநுபவங் களைக் காட்டியதும், ப்ரேமையைக் காட்டியதும் அர்ச்சா

வதாரமாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடம் தான். பரிபூரண சரணாகதி செய்வதும் அர்ச்சாவதார எம்பெருமானிடத்தில் தான்.

**தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்தானே * தமருகந்தது எப்பேர் மற்றப்பேர் * – தமருகந்து எவ்வண்ணம்சிந்தித்து இமையாதிருப்பரே * அவ்வண்ணமாழியானாம்.**

(முதல் திருவந்தாதி - 44)

என்கிறபடியே தனக்கென்று ஓர் உருவமும் ஓர் பெயரும் இல்லாமல் அடியார் விரும்பும் வகையில் பொன், வெள்ளி முதலான உலோகங்களிலும், மரம், கல், சாளக்கிராமம், வரைசித்திரம், பிம்ப ஓவிய வடிவம் முதலிய வஸ்துக்களில் யாதானும் ஒருபொருளில் தன் மனதிற்கு உகந்தவாறும், சாஸ்திரங்களில் கூறிய முறை வழுவாமலும், மேற்சொன்ன வற்றில் ஏதாயினுமோர் உருவத்தை பிரதிஷ்டை செய்து, வழிபடும் முறைக்கு அர்ச்சாவதார வழிபாடு என்று பெயர். இதனையே விக்ரஹ ஆராதனை என்றும், உருவ வழிபாடு என்றும் சொல்வர். "**ஸௌலப்யத்துக்கு எல்லைநிலம் அர்ச்சா வதாரம்**" - ((முமுக்ஷுப்படி - 139)

ஈஶ்வரனுடைய பரத்வம் போலே வ்யூஹம் விபவ அந்தர் யாமி அர்ச்சாவதார உருவங்களும் சுத்த ஸத்வ திரவிய முள்ளது என்பது ஸ்ரீவேதாந்த தேசிகர் முதலான ஆசாரியர் களின் கொள்கை. ப்ராக்ருதமான அர்ச்சாரூபத்தில் தமருகந்தவுருவமென்பதையே கொண்டு, அப்ராக்ருத உருவிலுள்ள உகப்பைச் செய்து கொண்டு எழுந்தருளியிருக்கு மிருப்பு அர்ச்சாவதாரம் என்று நம்பிள்ளை முதலான தென்னாசாரியர்களின் திருவுள்ளம். ஆகையால் அவையும் அப்ராக்ருதங்களே. சாஸ்திர முறைப்படி பிரதிஷ்டை செய்யப் பட்ட அர்ச்சையுருவங்களில் மஹாமந்திரத்தின் பெருமையால் உகந்தருளிய ஸ்ரீமந்நாராயணனுடைய சுத்த ஸத்வத் திருமேனி யொன்று, ஸுவர்ண ரஜதாதிகளாலான அர்ச்சா விக்ரஹத்

தினுள், பாலினுள் நீர் கலந்து நிற்பது போல் பகவத் ஸங்கல்பத்தால் கலந்து நிற்கிறது. இவ்வர்த்தம் சாஸ்திர ஸம்மதமாகும்.

இவ்வர்ச்சையில் ப்ராக்ருத த்ரவ்யத்தோடு முற்றிலும் மாறுபட்ட அப்ராக்ருத த்ரவ்யம் ப்ராக்ருதங்களான பாலும் நீரும் போலே கலந்து நிற்பது எப்படிக் கூடும்? என்று விசாரப்பட வேண்டியதில்லை. இராமபிரான், கண்ணன் முதலிய அப்ராக்ருதத் திருமேனிகள் ப்ராக்ருதமான இவ்வுலகில் கலந்து நிற்கவில்லையோ? அப்படியே இங்கும் சாஸ்த்ரத்தை யொட்டி அறிவாளிகள் ஸந்தேஹ நிவ்ருத்தி செய்து கொள்ளவேணும். அப்ராக்ருத ப்ராக்ருத த்ரவ்யங்கள் ஒன்று சேராதாகில் நாராயணன் நாட்டில் பிறந்து மனிசர்க்காகப் படாதனப்பட்டது எப்படிப் பொருந்தும்?.

எம்பெருமான் எல்லாம் அறிந்தவனாக இருந்தும், ஒன்றும் அறியாதவனைப் போலேயும் ஸர்வ சக்தி படைத்தவனாயிருந்தும், சக்தி அற்றவனைப் போலேயும், எல்லா விருப்பங்களையும் அடையப் பெற்றவனாயிருந்தும் அர்ச்சகர் கையை எதிர்பார்த்தும், ரக்ஷகனாயிருக்கச் செய்தே தான் பிறரால் ரக்ஷிக்கப்படுவனாயும், சொத்து, சொத்துக்கு உடையவன் என்ற பாவத்தை மாற்றிக் கொண்டு, எல்லோருடைய கண்ணுக்கும் தெரியும்படி வெகுசுலபனாக கோயில்களிலும், வீடுகளிலும், தேசம், காலம் என்ற வரம்பில்லாமல், எல்லா தேசத்திலும், எல்லா காலத்திலும் எப்போதும் எழுந்தருளியிருக்கும் நிலையே அர்ச்சாவதாரம்.

சாமான்ய மனிதர்கள் பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், என்னும் நிலைகளை கண்ணால் காண்பதும் அரிது. பரமபதத்திலிருக்க, நாம் நித்தியசூரிகளாக இல்லை. வ்யூஹத்தை காண நாம் தேவர்கள் இல்லை. விபவ அவதாரங்கள் நிகழ்ந்த கால கட்டத்தில் நாம் எப்படிப்பட்ட ஜன்மங்களாக இருந்தோம் என்பதை உணர முடியாது. அந்தர்யாமியாய் இருக்கும் எம்பெருமானை அறியும் ஆற்றல் நமக்கு

இல்லை. நம்மை போன்று கலியுகத்தில் வாழ்பவர்கட்கு அர்ச்சாவதாரம் போன்று எளிதாக வேறென்ன இருக்க முடியும்.

ஸுரூபாம் ப்ரதிமாம் விஷ்ணோ: ப்ரஸந்நவத நேக்ஷணாம்।
க்ருத்வாத்மந: ப்ரீதிகரீம் ஸுவர்ணரஜதாதிபி:
தாமர்ச்சயேத் தாம் பூர்ண மேத் தாம் பஜேத் தாம் விசிந்தயேத்
விசத்ய பாஸ்ததோஷஸ்து தாமேவ ப்ரஹ்மரூபிணீம்।।

(விஷ்ணுதர்மம் - 103 - 30)

அழகிய உருவமுள்ளதும் மலர்ந்த திருமுகமண்டலத்தையும், திருக்கண்களை உடையதும், தனக்கு ஆநந்தத்தை விளைவிப்பதுமான பகவத் விக்ரஹத்தைப் பொன், வெள்ளி முதலிய உலோகங்களால் செய்து பரரூபமாக அனுஸந்தித்து அதை அர்ச்சிக்கக் கடவன்; அதை வணங்கக் கடவன்; அதை பஜனம் செய்யக் கடவன்; (இப்படிச் செய்தால்) தோஷம் நீங்கப் பெற்றவனாய், அதையே அடைகிறான் என்று ஸ்ரீவிஷ்ணு தர்மத்தில் அர்ச்சாரூபத்தைப் பரரூபமாக அனுஸந்திக்க வேணும் என்று காட்டப்பட்டது.

புஜைச் சதுர்ப்பி: ஸமுபேதம் மமேதம்
ரூபம் விசிஷ்டம் ஜீவிதம் ஸமஸ்திதம்ச ।
பூமௌ கதம் பூஜயதாப்ரமேயம்
ஸதாஹி தஸ்மிந் நிவஸாமீதி தேவா: ।।

(பார - மௌஸல - 5-34)

(தேவர்களே! நான்கு கைகளோடு கூடியதும், (அடியார்க்கு) உயிராயிருப்பதும், நிலையாயிருப்பதும், பூமியில் உள்ளதும், (பரரூபத்தைப் போல்) "அளத்தற்கரியதும், மிகச் சிறந்ததுமான என்னுடைய இந்த ரூபத்தில்"நான் எப்போதும் வாழ்கிறேன் என்னும் அநுஸந்தானத்துடன் பூஜிப்பீர்களாக!) என்று கண்ணனும் பரமபதம் செல்லும் போது தன் ரூபத்தைப் பரரூபமாக அனுஸந்திக்க வேண்டும் என்று காட்டினான். "மனுஷ்யா அநுவர்த்தந்தே" - (கீதை 4-11)

தாழ்த்தப்பட்டவர்களாக கருதப்படும் எல்லா மனிதர்களும் குண பூர்த்தியுள்ள அர்ச்சாவதாரத்தையே அனுபவித்து

வாழ்கிறார்கள். பரரூபமானது - ஆவரண ஜலம் போலேயும் வ்யூஹரூபமானது, திருப்பாற்கடல் போலேயும், அந்தர்யாமி ரூபமானது பூமியினடியிலிருக்கும் ஜலம் போலேயும், விபவாவதாரங்கள் ஒரு காலத்தில் ஓடிய காட்டாறுகள் போலேயும், அனைவர்க்கும் கைக்கொள்ள அரிதாயிருக்கையாலே, காட்டாறுகளில் தேங்கின மடுக்கள் போன்ற அர்ச்சாவதாரமே எல்லா மனிதர்க்கும் கைக்கொள்ளத் தக்கது என்று கண்ணன் கீதையில் காட்டுகிறான்.

இவ்விடத்தில் "பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே" "ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்தி பண்ணிற்றும்", "பூர்ணம்", என்கையாலே எல்லா குணங்களும் புஷ்கலங்கள், ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் - இருட்டறையில் விளக்குப் போலே ப்ரகாசிப்பது இங்கே. "பூர்த்தியையும், ஸ்வாதந்தர்யத்தையும் குலைத்துக்கொண்டு, தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கிறவிடம்" - என்னும் ஸ்ரீவசனபூஷண சூத்திரங்கள் (35-39) அநுஸந்திக்கத் தக்கவை.

"வாஸுதேவனான தேவரீர் எல்லாக் குணங்களாலும் நிறைந்திருக்கின்றீர்", என்கிற பரத்வத்தைக் காட்டிலும் இங்குத்தைக்கு ஏற்றம் ஏன், என்ன? அதற்கு விடை அருளிச் செய்கிறார் ஸ்ரீவசனபூஷணத்தில். உபாயமாகப் பற்றுமிடத்தில் வேண்டுமவையான குணங்கள், வாத்ஸல்யம், ஸ்வாமி த்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம். காரியங்களைச் செய்கைக்கு வேண்டுமவையான குணங்கள் - ஞானம், சக்தி, பிராப்தி, பூர்த்தி "வாஸுதேவாஸி பூர்ண:" என்பது ப்ரமாணம்.

"இருட்டு அறையில் விளக்குப் போலே பிரகாசிப்பது இங்கே" என்றது, பரத்துவத்தில் இந்தக் குணங்களெல்லாம் உளவாக இருக்கவும், எல்லாவற்றாலும் தன்னை ஒத்திருப்பவர்களான நித்திய முக்தர்கட்கு முகம் கொடுத்திருக்கிற இடமாகையாலே, பகல் விளக்குப் போன்று ஒளி குன்றியிருக்கும். ஸௌலப்யத்திற்கு எல்லை நிலமான அர்ச்சாவதாரம் இவ்வுலகமக்கட்கு முகம் காட்டி அருள்புரிகையாலே இருட்டிலே

ஏற்றப்பட்ட விளக்கு போல மிக்க பேரொளியாகத் தோன்றும் எம்பெருமானின் திருக்கல்யாண குணங்கள் பிரகாசிப்பது இங்கே.

**பூர்த்தியாவது** - விரும்பப்படுவனவெல்லாம் பெற்று உள்ளவனாய் இருத்தல்.

**ஸ்வாதந்தர்யமாவது** - சொரூபம் முதலானவற்றைத் தன் வசத்திலே உடையவனாயிருத்தல்.

**குலைத்துக் கொள்ளுகையாவது** - ஒருவன் கொடுத்ததைக் கொண்டு மனம் நிறைந்தவனாம்படி விருப்பத்தையுடையவனாய் இருக்கை. அதனைக் குலைத்துக் கொள்ளுகையாவது, அடியார்களுடைய விருப்பத்திற்கு ஏற்றவாறு உருவம், குணம், விபூதி முதலானவற்றையுடையவனாயிருத்தல்.

**ப்ரமாணங்கள்** :

> **ததிச்சயா ஹோதேஜா புங்கத்தே வை பக்தவத்ஸல**
> **ஸ்நாநம் பாநம்ததா யாத்ராம் குருதே வை ஜகத் பதி:**
> **ஸ்வதந்த்ரஸ் ஸஜகந்நாதோ ப்யஸ்வதந்த்ரோயதாததா**
> **ஸர்வசக்தி: ஜகத் 'தாதாப்ய சக்த இவசேஷ்டதே**

- விஷ்வக்சேந ஸம்ஹிதை

அடியார்களுடைய குற்றங்களைப் பாராதவனாய்ப் பெரு மதிப்பனாய் இருக்கிற ஸர்வேஶ்வரன், தன்னை அடைந்தவர்களுடைய விருப்பப்படி உண்கிறான் உலகத்திற்கெல்லாம் நாதனான இறைவன், தன்னைப் பற்றினவர்களுடைய விருப்பின்படி நீராடலையும், நீர் பருகுதலையும், அப்படியே யாத்திரையையும் செய்கிறான். அந்த உலகநாதன் ஸ்வதந்த்ரனாயிருந்தும், ஸ்வதந்த்ரம் இல்லாதவன் எப்படி இருப்பானோ அப்படியிருக்கிறான். எல்லா ஆற்றலையும் உடையவனாய் இருந்தும், அனைத்திற்கும் காரணப்பொருளாய் இருந்தும், ஆற்றல் இல்லாதவனைப் போன்று நடிக்கிறான். "தன் இச்சை ஒழிய இவற்றைக் குலைப்பதற்குக் காரணம் இல்லாமையாலே" குலைத்துக் கொண்டு என்கிறார். "தன்னை அநாதரிக்கிறவர்

களைத் தான் ஆதரித்து நிற்கிற இடம்''- என்றது தான் இப்படி எளியனாய் வந்து நின்றால் அரியன் எளியனாய் நிற்கப் பெற்றோம் என்று விரும்பி மேல் விழுகை அன்றிக்கே அவ் வெளிமைதானே காரணமாக விரும்பாத இவ்வுலக மக்களைத் தான் விடமாட்டாத அளவன்றிக்கே அவர்களை ஒழியச் செல்லாமை தோற்ற நிற்கிற இடம் அர்ச்சாவதாரம் என்கை.

இந்த சூத்திரத்தால் நான்கு குணங்களுள்ளும் முதன்மையையுடைய சௌலப்யத்தை கூறுகின்றார். கண் களுக்குப் புலப்படும்படி எப்பொழுதும் அண்மையில் எழுந்தருளி யிருக்கின்ற அளவே அன்றி எல்லா வகையாலும் நிறைந்த வனாய் வேறொரு பொருளால் தடை செய்யப்படாத ஸ்வதந்திர னாய் இருக்கிற தன்னை, ஒரு பொருளை விரும்பு கிறவனைப் போலவும், ஸ்வதந்த்ரம் இல்லாதவனைப் போல வும் தன்னை ஆக்கிக் கொண்டு தன்னை விரும்பாத இவ்வு லக மக்களைத் தான் விரும்பிக் கொண்டு நிற்பதற்கு மேற்பட்ட சௌலப்யம் இல்லையிறே.

''ஏவம் பஞ்ச ப்ரகாரோஹமாத்மநாம் பததாமத:
பூர்வஸ்மாதபி பூர்வஸ்மாத் ஜ்யாயாம்ச்சைவ உத்தவரோத்தர:
ஸௌலப்யதோ ஜகத்ஸ்வாமி ஸுலபோஹ்த்தர உத்தர:
- விஷ்வக்சேந சம்ஹிதை

அந்தர்யாமித்வம், பரத்வம், வ்யூஹம், விபவம், அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளோடு கூடியிருக்கிற நான் பிறப்பு இறப்புகளில் மூழ்கிக்கிடக்கிற ஆன்மாக்களைக் குறித்து முன்னைய நிலைகளைக் காட்டிலும், பின்னைய நிலைகளில் எளிமை குணத்தால் மிக்குவருகின்றேன். உலக நாதனானவன் பரத்வம் முதலான ஐந்து நிலைகளிலும் சௌலப்ய குணம் உண்டாயிருக்கவும், அர்ச்சாவதாரத்தில் சௌலப்ய குணம் அதிகமாகயிருக்கும் என்று தானே அருளிச் செய்கையாலே சௌலப்ய குணத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம் ஆகும்.

''இது தான் சாஸ்த்ரங்களால் திருத்த வொண்ணாதே விஷயாந்தரங்களிலே மண்டி விழுகராய்ப் போரும் சேத நர்க்கு,

வைமுக்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய், ருசி பிறந்தால் உபாயமாய், உபாய பரிக்ரஹம் பண்ணினால் போக்கியமுமாய் இருக்கும்'' - (ஸ்ரீவசனபூஷணம் - 41)

இங்ஙனம் உபாயமாகப் பற்ற ருசி பிறந்தவர்களுக்குப் பற்றுதற்கு எளிதாயிருக்கும் என்பது மட்டுமல்லாமல், ருசியை விளைத்தல் முதலியவைகளும் இவ்வர்ச்சாவதாரத்திற்கு உண்டு என்று இதன் சிறப்பை அருளிச்செய்கிறார்.

| | | |
|---|---|---|
| விஷயாந்தரங்கள் | - | மகளிரிடம் பெறும் இன்பம் முதலியன |
| விமுகர் | - | ருசியில்லாதவர் |
| வைமுக்கியம் | - | விமுகரது தன்மை |
| போக்கியம் | - | இனியது. |

சாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாத என்பது; நலத்தை உபதேசிக்கும் வேதம், ஸ்மிருதி முதலான சாஸ்த்ரங்கள். வெறுப்பு பிறக்கும்படி இவ்வுலக வாழ்க்கையினுடைய குற்றங்களின் மிகுதியினையும், ருசி பிறக்கும்படி பகவத் விஷயத்தினுடைய குணங்களின் மிகுதியினையும் உபதேசித்தாலும், துர்வாசனையின் காரணமாக பயன் அற்றதாகி விடுகிறது. இதற்கு பிரமாணம் காட்டுகிறார்.

ஜந்மாந்த்ர ஸஹஸ்ரேஷு யாபுத்தி: பாலிதா ந்ருணாம்
தாமேவ லபதே ஜந்து: உபதேசோ நிரர்த்தக:

கீதை—

''மனிதர்களுக்கு எந்த அறிவானது பல பிறவிகளிலே உண்டான பாவனை என்கிற ஸம்ஸ்காரத்தால் பிறக்கிறதோ அந்த அறிவையே மக்கள் அடைகிறார்கள். ஆகையால் சாஸ்த்ர உபதேசம் பயன் அற்றதாகி விடுகிறது. விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப்போரும்'' என்றது

*சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார்*
*திறத்தனாய் அறத்தையே மறந்து*

*புலம்படிந்துண்ணும் போகமே பெருக்கிப்*
*போக்கினேன் பொழுதினைவாளா*

(பெரிய திருமொழி 1-6-2)

“சிலம்புகளை அணிந்த அழகிய கால்களும், கறுத்து நீண்ட கண்களுமுடைய மாதர்களிடமே மனத்தைச் செலுத்தித் தருமங்களை மறந்து போகங்களையே மிகுதியாக்கிக் கொண்டு வாழ்நாள்களை வீணாகக் கழித்தேன்” என்றும்,

*சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து*
*சுரிகுழல் மடந்தையர் திறத்து*
*காதலேமிகுத்துக் கண்டவா திரிந்த*
*தொண்டனேன்நமன்தமர்செய்யும்*

(பெரியதிருமொழி 1-6-3)

“சூதாடியும், துணிந்து களவுகள் செய்தும் மடந்தையர் மீது ஆசைகொண்டு கண்டபடி திரிந்த அடியேன் யமதூதர்களால் ஏற்படும் வேதனைகளை நினைத்து உடல் குன்றி நடுங்கி இன்று வந்து உன் திருவடியினை அடைந்தேன்” என்கிறார் திருமங்கையாழ்வார்.

மாயசொற்களால் ஈஶ்வரனை இல்லை செய்வது சூது. எம்பெருமானுக்கு சொந்தமான இந்த ஆத்மாவைத் தன்னுடையதாக எண்ணுதல் களவு.

**சூதனாய்க்கள்வனாகித் தூர்த்தரோடுஇசைந்தகாலம் ***
**மாதரார்கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை ***
**போதரேயென்றுசொல்லிப் புந்தியுள்புகுந்து * தன்பால்**
**ஆதரம்பெருகவைத்த அழகனூர்அரங்கமன்றே.**

திருமாலை 16

“முதலில் சூதிலே ஊன்றினவனாய், பிறகு களவிலே ஆழ்ந்தவனாய்ச், சிற்றின்பத்தில் ஈடுபட்டவர்களுடன் பொருந்தியிருந்த காலத்திலே, பெண்களுடைய கயல் போன்ற கண்களாகிற வலையினுள்ளே அகப்பட்டு அழுந்திக் கிடக்கிற என்னை இப்படிவா என்றருளிச் செய்து, என் நெஞ்சிலும் வந்து

புகுந்து தன்னிடத்திலே அன்பை வளரச் செய்த வடிவழகை யுடைய எம்பெருமானது இருப்பிடம் திருவரங்கமாகும்.''

சூது - ஒருவனுடைய பொருளைக் கொள்ளையிடுவது பகவா னும், தர்ம அதர்மங்களும் இல்லையென்று சொல்வது

களவு - பிறருடைய பொருளைத்தன்னுடையது என்று நினைப்பது பகவானுக்கு உரியதான ஆத்மாவைத் தனது என்று நினைப்பது.

மற்றைய விஷயங்களிலே ஈடுபட்டவராய் யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை ஏறிட்டுக் கொண்டு இறைவன் திறத்தில். முகம் வைக்க இசையாதே இருக்கும் சேதநர்க்கு வைமுக்கியத் தை மாற்றி ருசியை விளைக்க கடவதாய் என்பது போதரே யென்று சொல்லிப் புந்தியில் புகுந்து, தன்பால் ஆதரம் பெருக வைத்த அழகனூர் அரங்கமன்றே? இங்கே வா என்று கூப்பிட்டு, தன்னுடைய அழகு முதலானவைகளாலே மனத்தினைக் கவர்ந்து, தன்னைக் காணவேண்டா என்று இருக்கும் இருப்பைக் குலைத்து, கண்ட கண் மாறவைக்க மாட்டாதபடி வடிவழகையுடைய எம்பெருமானது இருப்பிடம் திருவரங்கமன்றோ.

ருசி பிறந்தால் உபாயமாய் இப்படித் தனது சிறந்த அழகினைக் கண்ட காட்சியாலே, தன்னை எப்பொழுதும் அநு பவித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்னும் ருசி பிறந்த பின்பு ''ஆறு எனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்'' (திருவாய்மொழி 5-7-10) என்கிறபடியே இவ்வுலக வாழ்க் கையை விடுதல் முன்னாகத் தன்னை அடைதற்குத் தானே சாதனமாய் இருத்தலைத் தெரிவிக்கிறார். உபாய பரிக்கிரஹம் பண்ணினால் போக்கியமுமாய் இருக்கும்.

**தானேயாகிநிறைந்து எல்லாவுலகும்உயிரும்தானேயாய் ***
**தானேயானென்பானாகித் தன்னைத்தானேதுதித்து * எனக்குத்**
**தேனேபாலேகன்னலேயமுதே திருமாலிருஞ்சோலை ***
**கோனேயாகிநின்றொழிந்தான் என்னைமுற்றும்உயிருண்டே.**

(திருவாய்மொழி 10-7-2)

''பகவான் என்னை எல்லா விதத்தாலும், அநுபவித்துத் தானே ஒருவனாய் முழு நிறைவு பெற்றுவிட்டான். எல்லா உலகங்களும், எல்லா உயிர்களும் அவனேதான் என்னலாம் படியாக அவற்றுக்குள் நியமிக்கிற ஆத்மாவாய் யான் என்கிற பொருளும் தானே ஆகிவிட்டான். மேலும் அவன் தன்னை நான் துதித்ததாகக் கவி செய்வித்துத் தானே துதித்துக் கொண்டான். தேனையும், பாலையும், கருப்பஞ் சாற்றையும், அமுதினையும் போல எனக்குச் ஸகல விதத்திலும் அநுபவரஸம் மிகுந்த இனியவன்: திருமாலிருஞ்சோலை மலையிலே தலைவனாய் எழுந்தருளி இருக்கிறான். அங்கே நின்றபடி ஸேவை ஸாதிக்கும் அப்பெருமான் நான் ரஸித்துப் பருக வேண்டிய அமுதமாக இருக்க மாறாக என்னை முழுதும் பருகி விட்டானே!'' என ஆழ்வார் எம்பெருமானுடைய சீல குணத்தைப் பாராட்டிப் பேசுவதாக இத்திருவாய்மொழி அமைகிறது.

இவ்வாறு எம்பெருமான் எல்லை இல்லாத இனிய பொருளாக இருக்கையாலே தானே பலமுமாய் இருப்பதை தெரிவிக்கிறார்.

ஆக ப்ரபத்திக்குக் குணங்கள் நிறைந்த விடமே இலக்காக வேண்டும் என்றும், அது தான் உள்ளது அர்ச்சாவ தாரத்திலே என்றும், அதனை நோக்கி ஆழ்வார்கள் எல்லாரும் ப்ரபத்தி பண்ணிற்றும் இவ்வர்ச்சாவதாரத்திலே என்றும், இவ்வர்ச்சாவதாரத்திலே எல்லாக் குணங்களும் நிறைந்திருக் கும் என்றும், ப்ரபத்திக்கு வேண்டப்படுவனவான குணங்கள் விசேடமாகத் தெளிவாக விளங்குவன இவ்வர்ச்சாவதாரத்திலே என்றும், இவ்வர்ச்சாவதாரந்தான் யாதொரு பொருளிலும் விருப்பம் இல்லாமை முதலான தன்னுடைய இயல்புகளை அழிய மாறி, தன்னை விரும்பா தாரைத் தான் விரும்பி நிற்கும் இடம் என்றும், பரத்வம் முதலான நிலைகள் ஒவ்வொரு வகையாலே பற்றுதற்கு அரியவை, இது எல்லா வகையாலும் பற்றுதற்கு எளியது என்றும், இது மட்டும் அல்லாமல், இந்த அர்ச்சாவதாரம் ருசியை விளைவிக்கக் கூடியதாய், உபாய முமாய், உபேயமுமாய் இருக்கும் என்றும், சொல்லப்பட்டன.

இதனால் உபாய உபேயங்கள் இரண்டும் தானேயாய், மற்றைய விஷயங்களில் விரக்தி முன்னாகத் தன் விஷயத்தில் ருசியை விளைவிக்குமதாய் எல்லா வகையாலும் சுலபமாய், தன் படிகளை அழிய மாறிக்கொண்டே அவனை விரும்பா தாரையும் விரும்பச் செய்வதாய் ப்ரபத்திக்கு வேண்டப் படுவனவான குணங்களெல்லாம் பிரகாசிப்பதாய், எல்லா குணங்களும் குறைவற்று நிறைந்ததாய் பிரபந்நஜந கூடஸ் தருக்கு உபாயமாகப் பற்றுவதற்கு உரியதாய் இருந்துள்ள அர்ச்சா வதாரமே பிரபத்திக்கு நியத விஷயம் என்பதாயிற்று.

---





## (2). அர்ச்சாவதார நிருபணம்.

கோயில், திருமலை, பெருமாள் கோயில் முதலான திவ்யதேசங்களிலும், கிராம நகர க்ருஹங்களிலுமிருப்பவனாய், தமர் உகந்ததானதொரு ஸ்வர்ணம், ரஜதம் (வெள்ளி) முதலான திரவியங்களைத் திருமேனியாக உகந்து விளங்காநிற்கும் அப்ராக்ருதமான அழகிய திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனாய், அவர்களுகந்த பெயர், ஆகாரம் முதலியவற்றையும் உகப்பவனாய், பரவ்யூஹாதி நிலைகளைப் போலே தேசத்தாலும், காலத்தாலும் விலகி நில்லாமல், அனைவர்க்கும் எளியவனாய், அர்ச்சகரின் வசமாயிருக்கும் ஆஸநம், சயநம், ஸ்நாநம், போஜனம் முதலான எல்லா போகங்களையுமுடையவனாய் அடியார்கள் செய்யும் குற்றங்களனைத்தையும் பொறுத்திருப்பவனாய், குணபரி பூர்ணனாய், பிராட்டியைத் திருமார்பிலே தரித்திருப்பவனாய் உள்ள நிலை, அர்ச்சாவதாரம்.

இதுவே, எம்பெருமானுக்கு கைங்கர்யம் செய்ய விருப்ப முள்ளவர்களுக்கு, ஸர்வதேச, ஸர்வகால, ஸர்வா வஸ்தை களிலும், உசிதமான ஸர்வவித கைங்கர்யங்களையும் செய்வதற்கு ஹேது வாகிறது. இவ்வர்ச்சாவதாரம் ஸ்வயம் வ்யக்தம் (தானாகவே ஆவிர்ப்பவித்தது) தைவம் (தேவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது) ஆர்ஷம் (ரிஷிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்டது), மாநுஷம் (மனிதர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது) என்று நாலுவகைப்பட்டதாக ஸம்ஹிதை களில் சொல்லப்படுகிறது.

பகவானுடைய திவ்ய மங்களத்திருமேனி ஜ்ஞாநம் சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம் தேஜஸ்களாகிற ஆறு குணங்க ளையும் பிரகாசிக்கச் செய்வதாகையால் ஷட்குண பூர்ணமானது என்றும், ஷாட்குண்யமயமானது என்றும் சொல்லப்படுகிறது. நித்யமாய், குற்றமற்றதான ஒப்பற்ற ஒளி, ஸௌந்தர்யம்(அவயவ அழகு) நறுமணம், ஸௌகுமார்யம் (திருமேனி மென்மை) திருமேனியழகு, யௌவனம் மார்த்தவம் (மனத்தின் மென்மை),நேர்மை முதலான எண்ணற்ற குணங்களுக்கு இருப்பிடமாகவிருப்பது திவ்ய மங்கள

விக்ரஹம், பகவத் கீதை விச்வரூப தர்சநப்ரகரணம் முதலான விடங்களில் திவ்யமங்கள விக்ரஹம் எங்கும் வியாபித்திருப்பது என்பது காட்டப்பட்டிருக்கிறது.

எம்பெருமானின் திருமேனியானது ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள எல்லாத் தத்துவங்களுக்கும் ஆதாரமாகவுமுள்ளது என்பது ஸ்ரீவிஷ்ணுபுராண அஸ்த்ரபூஷணாத்யாயம் (1-22) முதலான இடங்களில் கோஷிக்கப்பட்டது. அந்த ப்ரமாணங்களைப் பின் பற்றி நிற்கும் ஆசாரியர்களாலும்இவ்வர்த்தம் ஆதரிக்கப்படுகிறது.

புருஷதத்துவத்தை பகவானின் திருமார்பிலிருக்கும் ஸ்ரீகௌஸ்துப மணி தரித்து நிற்கிறது. மஹான் என்னும் தத்வத்தை 'கௌமோதகீ' என்னும் கதையும், தர்மபூத ஜ்ஞானத்தை 'நாந்தகமென்னும் வாளும்', அவ்வறிவை மறைக்கும் அஜ்ஞானத்தை அவ்வாளின் உறையும், ஸாத்விகாஹங்காரத்தை 'ஸார்ங்கம்' என்னும் வில்லும், தாமஸாஹங்காரத்தைப் பாஞ்சசன்னியமெனும் சங்கமும், அதிசஞ்சலமான மனமென்னும் தத்துவத்தை அதிவேக மாகச் சுழலும் ஸுதர்சன சக்கரமும், பத்து இந்த்ரியங்களை பத்து அம்புகளும், ஐந்து தந் மாத்ரைகளையும், ஐந்து பூதங்களையும், பல மலர்களால் தொடுக்கப்பட்ட 'வனமாலையும்' தரித்து நிற்கின்றன. இவ்விடத்தில் ஸ்ரீ வேதாந்த தேசிகன் அருளிய பின் வரும் பாசுரமும், "சேதச் சக்ரதி" என்று தொடங்கி தீபிகையில் எடுக்கப்பட்டுள்ள இதே பொருளுள்ள ஸ்ரீவேதாந்த தேசிகரின் குமாரரான வரதாசார்யர் அருளிய ச்லோகமும் அறிவிற் சிறந்தவர்களால் அநுஸந்திக்கத் தக்கவை:

*புருடன் மணிவரமாகப் பொன்றா*
*மூலப்பிரகிருதி மறுவாக மான் தண்டாகத்*
*தெருள்மருள் வாள் மறைவாக ஆங்காரங்கள்*
*சார்ங்கஞ்சங்காக மனம் திகிரியாக*

*இருடிகங்களீரைந்தும் சரங்களாக*
*இருபூதமாலை வனமாலையாகக்*
*கருடனுருவமறையின் பொருளாம் கண்ணன்*
*கிரிகிரிமேல் நின்றனைத்தும் காக்கின்றானே.*
- ரஹஸ்யத்ரயஸாரம் - தத்வத்ரயசிந்தநாதிகாரம்-156

**வேத ப்ரமாணம்:** பரமபுருஷனுக்கு திவ்யமங்கள விக்ரஹம் உண்டு எனக்கூறும் உபநிஷத்து வாக்கியங்கள் 'கல்யாண தமம் தேரூபம் யத்' - மிக, மிக மங்களமான உனது யாதொரு உருவம், ச்ருதிகளில் ஸுப்ரஸித்தமாயுள்ள தோ, "கல்யாணதமம்" என்கையாலே ப்ராக்ருதமாய், உபாஸிக்கத் தகாததான ப்ரஹ்மருத்ராதி தேவதைகளின் உருவம் போல் அல்லாமல், அப்ராக்ருதமாய் உபாஸிக்கத்தக்க ஸுபாச்ரய மாயுள்ளது இவனது உருவம் என்று காட்டுகிறது.

"வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் ஆதித்ய வர்ணம் தமஸஸ்து பாரே" - (புருஷஸூக்தம்).

- சூரியன் போல் ஒளிவிடுபவனாய் மூலப்ரக்ருதிக்கு அப்பாலி ருப்பவனான இந்த மஹாபுருஷனை நான் உபாஸிக்கிறேன்.

"யதா பச்ய: பச்யதே ருக்மவர்ணம் கர்த்தாரமீசம் புருஷம் ப்ரஹ்ம யோநிம்" - (முண்டக-3-1-3) - (பொன் போன்று அழகிய நிறமுடையவனாய் ஜகத் காரணனாய் ப்ரஹ்மாவைப் படைத்தவனாய், அனைவரையும் நியமிப்பவனான பரம புருஷனை எப்போது உபாஸகன் காண்கிறானோ).

"அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே ஹிரண்ய ச்மச்ருர் ஹிரண்ய கேச: ஆப்ரணகாத் ஸர்வ வெ ஸவுர்ண: தஸ்ய யதா இப்யாஸம் புண்டரீகமேஷ மக்ஷிணீ தஸ்ய உதிதி நாம ஸ ஞுஷ ஸர்வேப்ய: பாப்மப்ய உதித: உதேதி ஹவை ஸர்வேப்ய: பாப்மப்ய ய ஏவம் வேத"

(சாந். – 1–6–6)

சூரியனுக்கு நடுவில் பொன்போன்று அழகிய மீசை, திருக்குழல்கள் திருமேனி முதலிய அனைத்தையும் உடையவனாயிருக்கும் பரமபுருஷனுக்கு சூரியனால் மலர்ந்த தாமரை போன்ற இரு கண்கள் உள. அவன் எல்லாப் பாபங்களையும் கடந்திருக்கையால் அவனுக்கு "உத்" (கடந்தவன்) என்று திருநாமம். அவனை இப்படி உபாஸிப்பவன் பாபங்களைக் கடக்கின்றான்.

"தஸ்ய ஸஹதஸ்ய புருஷஸ்ய ரூபம் யதா மாஹா ரஜநம் வாஸ: யதா பாண்ட்வாவிகம் யதேந்த்ர கோபோ யதாக்ந் யர்ச்சிர் யதா புண்டரீகம் யதா ஸக்ருத் வித்யுத்தம் ஸக்ருவித்யுத் தேஹ வா அஸ்ய ஸ்ரீர்பவதி ய ஏவம் வேத" - (ப்ருஹ-4-3).

அப்படிப்பட்ட இந்தப் புருஷனுடைய உருவமானது பீதாம்பரம் போலேயும் வெள்ளைக் கம்பளம் போலேயும், இந்திர கோபம் என்னும் பூச்சி புழுவைப் போலேயும், அக்னியின் ஒளியைப் போலவும், தாமரை இலையைப் போலவும், ஒன்றாக மின்னும் மின்னலைப் போலவும் நிறமுள்ளது. இதை அறிபவனுடைய செல்வம் ஒன்றாக மின்னும் மின்னல் போல் பிரகாசிக்கும்.

"நீல தோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா"

(தை-நா-11)

நீல மேகமுண்ட மின்னல் போல ஒளிவிடுவது எம்பெருமானின் திருமேனி என்னும் வேத வாக்கியங்கள் இங்கு அநுஸந்திக்கத் தக்கவை. "தத் பச்யாமி" அத்திருமேனி யைக் காணக் கடவேன் அதைக் கண்டு உபாஸிக்கக் கடவேன்; காட்டியருள்வாயாக என்று கருத்து.

"ஆசம்ஸாயாம் பூதவச்ச (3—3—137) என்னும் இலக்கண விதிப்படி காணக் கடவேன்" என்னும் பொருளில் 'காண்கி றேன்' என்று நிகழ் காலப் பிரயோகம் வந்துள்ளது. இங்கு ஓர் ஆக்ஷேபம் பின்வருமாறு எழுகிறது.

"அகாயம் அவ்ரணம்" - (ஈசா-8)

"அசரீரம் சரீரேஷு" - (கட-1-2-22)

"அபாணி பாதோஜவநோ க்ருஹிதா" - (ச்வே 3-19)

முதலான உபநிஷத் வாக்யங்களில் பரப்ரஹ்மத்துக்கு சரீரமில்லை என்று கூறியிருக்கையில் இங்கு பரமபுருஷனுக்கு மிக, மிக மங்களமான திருமேனி உண்டு என்று கூறியிருப்பது எப்படி பொருந்தும் என்பது அவ்வாக்ஷேபம்.

இப்படி சரீரமில்லை என்று சில வாக்கியங்கள் கூறுவது போலே "**ஆதித்யவர்ணம்**" (பு-ஸூ)

"ஹிரண்மய: புருஷ:- ஆப்ரணகாத் ஸர்வ ஏவ **ஸுவர்ண:**" - (சாந்.)

(நகத்திலிருந்து உச்சி என்ற எல்லாமே பொன்மயமா யிருக்கும் திருமேனியையுடையவன்).

"ருக்ம **வர்ணம் புருஷம்**" - (முண்டக 3-1-3)

"புருஷஸ்ய ரூபம் யதா மாஹாரஜநம் வாஸ"

- (ப்ருஹ 4-3)

முதலான (சற்றுமுன் எடுத்துக்காட்டப்பட்ட) பல வேத வாக்யங்கள் பரமபுருஷனுக்கு மிகமிக மங்களமான அப்ராக்ருதமான திருமேனி உண்டென்று முழங்குகையால், சரீரமில்லை என்று கூறும் வாக்யங்கள் கர்மத்தால் விளைந்த ப்ராக்ருத சரீரமில்லை என்று கூறுவதாகவும், திருமேனி உண்டு என்று கூறும் வாக்யங்கள் தன் விருப்பத்தால் எடுத்துக் கொள்ளப்பட்ட அப்ராக்ருதமான திருமேனி உண்டு என்று கூறுவதாகவும் கொண்டு இவ்வாக்யங்களில் மேலெழத் தோன்றும் முரண்பாட்டை நீக்குவதே நியாயமாகும். ஒருவகை வாக்யங்களைக் கொண்டு மற்றொரு வகை வாக்யங்களை அத்வைதிகள் தள்ள முற்படுவது பொருந்தாது.

**உபய வேதாந்த ஒற்றுமை:-**

"பூஷந் ஏகாஷே யம ஸூர்ய ப்ராஜா பத்ய" என்ற இம்மந்திரத்தில் ஸூரியனுக்கு அந்தர்யாமியான நாராயணனைக் குறித்து "**வ்யூஹ ரச்மீந் ஸமூஹ தேஜ: யத், தே ரூபம் கல்யாண தமம் தத் தே பச்யாமி**" என்று அவன் தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை எனக்குத் தானே காட்ட வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறான்.

"வெஞ்சுடரில் தானடுமால் வீங்கிருளின்நுண்துளியாய்*
அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர்தோன்றாதால் *
செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வாரானால் *
நெஞ்சிடர்தீர்ப்பார்இனியார்? நின்றுருகுகின்றேனே!.

(திருவாய்மொழி -5-4-9)

என்னும் பாட்டில் நம்மாழ்வார் ஸூர்யமண்டலத்தின் நடுவில் தாமரைக் கண்ணனைக் காண ஆசைப்பட்டது இங்கு ஒப்பாக நோக்கத் தக்கது.

"யோऽஸாவஸௌ புருஷஸ்ஸோஹமஸ்மி" என்று இங்கு ப்ரஹ்மாத் மகனாகத் தன்னை அனுஸந்தித்தற்கு ஒப்பாக "யானே நீ" - (திருவாய் 2-9-9) "யானும் நீ தானே ஆவதோ மெய்யே" - (திருவாய் 8-1-9) முதலான பாசுரங்களில் நம்மாழ்வார் தம்மை ப்ரஹ்மாத்மகராக அருளிச் செய்தது காணத்தக்கது.

"பரிசுத்தமான மனத்தினால் அறியத்தக்கவன், பிராணனைச் சரீரமாகவுடையவன், பிரகாசிக்கின்ற திவ்விய மங்கள விக்கிரஹத்தையுடையவன் என்றும் வருவன போன்றவைகளாலே சொல்லப்பட்ட திவ்விய மங்கள விக்கிரஹத்தை திருவாய்மொழியின் முதல், நடு இறுதிகளில் பல இடங்களிலும், வர்ணித்துக் கொண்டு பேசுகையாலே தெளிவுறச் சொன்ன இவர் பிரபந்தங்களையும் வேத உபபிரும்ஹணம் என்பர்கள்.

தெரிதல்நினைதல் எண்ணலாகாத்திருமாலுக்கு *
உரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் *
தெரியச்சொன்ன ஓராயிரத்துள்இப்பத்தும் *
உரியதொண்டராக்கும் உலகமுண்டாற்கே

(திருவாய் 6-9-11)

பகவானான திருமாலே யாராலும் உள்ளபடி அறிய முடியாது; தெளிந்து தெரிதல், நெஞ்சில் தியானித்து எண்ணுதல் இவற்றாலும் அவனை முழுமையாக அறிய முடியாது. இத்தகைய எம்பெருமானுக்கு உரிமைப்பட்ட வைணவத் தொண்டர்களுக்குத் தொண்டரானவர்க்குத் தொண்டராக

உள்ள சடகோபர், ஆயிரம் பாசுரங்களையும், சேவிப்பவர்களும் அறியும்படி பாடினார். அவற்றுள் இப்பத்துப் பாசுரங்களைப் பயில்வோரை உலகம் உண்ட அப்பெருமானின் அநந்யார்ஹ சேஷ பூதராக்கி உலகமுண்டாற்கே தொண்டராக்கும் என்பது இப்பாசுரத்தின் பொருள் ஆகும்.

திருவாய்மொழி தெரியச்சொன்ன என்கிறபடியே, தெளிவுறச் சொன்ன ஆழ்வாரின் திருவாய்மொழித் திருப்பாசுரமேயாகிலும், உபப்ரஹ்மணமாக இருக்கும் தன்மை மற்றைப் பிரபந்தங்கள், மூன்றிற்கும் ஒக்கும் என்றே கொள்ள வேண்டும்.

100 பாடல்கள் கொண்ட - **திருவிருத்தம்** - ருக் வேத ஸாரம்
7 பாடல்கள் கொண்ட- **திருவாசிரியம்** - யஜுர் வேத ஸாரம்
87 பாடல்கள் கொண்ட- **பெரிய திருவந்தாதி** - அதர்வண வேத ஸாரம்
1102 பாடல்கள் கொண்ட - **திருவாய்மொழி** - ஸாம வேத ஸாரம்

பாஞ்சராத்ரத்திலும், புராணங்களிலும் இதிஹாஸங்களிலும், இவர் பிரபந்தங்களிலும் ஸ்வரூபம், ரூபம், குணம், நெறி, விபூதி அவதரித்துச் செய்த செயல்கள் ஆகிய எல்லாமும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனாலும் பாஞ்சராத்ரங்களுக்கு ஸ்வரூபம், குணம் என்னும் இவற்றிலே நோக்கு, புராணங்களுக்கு உலகங்களின் விரிவினைச் சொல்லுவ திலே நோக்கு இதிஹாஸங்களுக்கு அவதாரங்களைப் பற்றிச் சொல்லுவதில் நோக்கு. நம்மாழ்வார் அருளிச் செயல்களுக்குத் திவ்விய மங்கள விக்கிரஹத்திலே நோக்கு.

இவருடைய பிரபந்தங்கள் நான்கினுள் திருவிருத்தத் தின் தொடக்கத்தில் "**முழுநீர் முகில் வண்ணன்**" (திருவிருத்தம்-2) என்று திருமேனியைக் கூறி முடிவில் "**மைப்படி மேனியும் செந்தாமரைக் கண்ணும்**" (திருவிருத்தம் - 94) என்று அதனையே கூறியிருத்தலாலும், திருவாசிரியத்தில் முதலில் மீதிட்டுப் "**பச்சை மேனி மிகப் பகைப்ப**" (திருவாசிரியம்-1) என்று திருமேனியைக் கூறி, முடிவில் "**தாமரைக் காடு மலர் கண்ணொடு கனிவாயுடையதுமாய்**" (திருவாசிரியம்-5) என்று அதனையே கூறியிருத்தலாலும்.பெரிய திருவந்தாதியில்

முதலில் "நற்பூவைப்பூ ஈன்ற வண்ணன்" (பெரிய திருவந்தாதி - 1) என்று திருமேனியைக் கூறி முடிவில் "கார்கலந்த மேனி யான்" - (பெரிய திருவந்தாதி -86) என்று அத்திருமேனியைக் கூறியிருந்தாலும்.

திருவாய்மொழியில் "துயரறு சுடரடி" (திருவாய் 1-1-1) என்று திருமேனியில் தொடங்கி "புனக்காயா நிறத்த புண்டரீகக் கண் செங்கனிவாய்" - (திருவாய் 10-10-6) என்று அத்திருமேனி தன்னையே கூறி முடித்திருந்ததாலும், இறைவனுடைய திவ்ய மங்கள விக்கிரஹத்தைக் கூறுதலே இவற்றிற்குப் பெரு நோக்கம் ஆகும்.

**பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்।**
**தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே॥**
(பகவத்கீதை 4-8)

"நல்லோர்களை ரக்ஷிப்பதன் பொருட்டும், தீயவர்களை அழிப்பதன் பொருட்டும், அறத்தை நன்கு நிலை நிறுத்துவதன் பொருட்டும் அந்தந்த யுகங்களில் பலபடியாகப் பிறக்கிறேன்" என்பது கண்ணபரமாத்மாவின் கூற்று.

அடியார்களுக்குத் தன் திருமேனியை அநுபவிக்கக் கொடுப்பதும், அவர்களுடைய விரோதிகளை நேரே நின்று அழித்தும், தர்மங்களைத் தான் அனுஷ்டித்துக் காட்டிப் பிறரை அனுஷ்டிக்கச் செய்தும், அவதரித்தாலொழியக் கைகூடாதாகையாலே இப்படி ஸாதுக்களைப் பரித்ராணம் செய்வதற்காகவும், துஷ்டர்களை விநாசமடையச் செய்யவும், தர்மத்தை ஸம்ஸ்தாபனம் செய்யவும அவதரித்தே தீர வேண்டியுள்ளது.

பரித்ராணமாவது - வித விதமான அநிஷ்டங்களைப் போக்குவதும், விதவிதமான இஷ்டங்களை அளிப்பதுமாகும். இந்த வைஷ்ணவச்ரேஷ்டர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை ஆராய்ந்தால் இவர்களுக்கு அநிஷ்டங்கள் எவை? இஷ்டங்கள் எவை? என்பது விளங்கும்.

"கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப் பிறவி செய்யாமே இனிப் போய்ச் செய்யும் தவந்தான் என்". (நாச்.திரு.13-9)

"அச்சுவை பெறினும் வேண்டேன்" - (திருமாலை - 2)

"உலகம் மூன்றினொடு நல்வீடு பெறினும் கொள்வ தெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே" - (திருவாசிரியம் -2)

"சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரான் அறியும்" - (திருவாய் 7-10-10)

"பாவோ நாந்யத்ர கச்சதி" - (ரா-உத்-40-5)

(என் நினைவு ராமபிரானை விட்டு வைகுண்ட நாதனிடமும் செல்வதில்லை) என்கிறபடியே மோக்ஷவின்பத்தையும் உபேக்ஷித்து இவ்வுலகில் இவ்வுடம்போடே அவனுடைய செயல்களைக் காண வேணும், அவனோடு பேச வேணும், அவனை அணைக்க வேண்டும் என்று பாரித்திருக்கிறவர்கள்.

இவர்களுக்கு மோக்ஷாநந்தமும் இஷ்டமன்று; அவனை இவ்வுலகில் இவ்வுடம் போடே கண்டு களித்துப் பேசித் தழுவி, சுற்றிச்சுழன்று பரிமாறும் பரிமாற்றங்களே இவர்களுக்கு இஷ்டங்கள். இவ்விஷ்டங்களை இவர்கள் அடையத் தடையா யிருப்பவை இவர்களுக்கு அநிஷ்டங்கள். இவ்வநிஷ்டங்களை போக்கி இஷ்டங்களைக் கொடுப்பது என்பது எம்பெருமான் அவதரித்தாலொழிய நிறைவேறாது. மேலும் இந்த ஸாதுக் களுக்குத் தீங்கிழைக்கும் தீயவகளை அழித்தாலொழிய முற்கூறிய ஸாது பரித்ராணம் நிறை வேறாதாகையாலே அவதாரம் செய்தே ஆக வேண்டியுள்ளது.

துஷ்டவிநாசத்தை ஸங்கல்பத்தால் பெரும்பாலும் ஸாதித்து விடலாம். தர்மஸம்ஸ்தாபனத்தை சாஸ்திர ப்ரதானம் முதலானவற்றால் பெரும்பாலும் செய்து விடலாம். ஸாது பரித்ராணத்தை அவதரித்தலன்று வேறு எவ்வகையாலும் சிறிதும் செய்யமுடியாது. இத்தகைய ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதற்காக எம்பெருமான் அவதாரங்களைச் செய்யாமல் ஸங்கல்பாதிமாத்ரத்தாலே அவர்களை ரக்ஷிக்கத் தொடங்கினானாகில்,

**"மழுங்காத வைந்நுதிய சக்கரநல் வலத்தையாய் *
தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்துதோன்றினையே *
மழுங்காத ஞானமே படையாக * மலருலகில்
தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதிமறையாதே
(திருவாய். 3-1-9)**

என்று நம்மாழ்வார் அருளிச் செய்த ரீதியிலே அவனுடைய திவ்யமங்கள விக்ரஹமே இல்லையாய் விடும். இப்பெரிய தோஷம் தனக்கு வராமல் இருப்பதற்கும், தன் உயிரிலுமினிய ஸாதுக்களின் விருப்பத்தை நிறைவேற்றவும் எம்பெருமான் அவதரித்தே தீர வேண்டியுள்ளது என்று தேறிற்று. ஆக இப்படி அவதாரத்திற்கு ஸாது பரித்ராணமே முக்யப் ப்ரயோஜன மானது.

"யே யதா" (பகவத் கீதை 4/11) என்னும் ஸ்லோகத்தி லும் எல்லா மனிதர்க்கும் தன் ஸௌலப்யத்தின் எல்லை நிலமான அர்ச்சாவதாரத்தின் பெருமையைக் காட்டிக் கொடுப்பது என்பதும் அவதார ப்ரயோஜனம் என்று விளக்கப்பட்டது. ஆக லீலையே அவதாரங்களால் பரமபுருஷன் அடையும் பயன் என்றும், திருமேனியை அநுபவிப்பது முதலானவை பிறர் அடையும் பயன் என்றும் சொல்லிற்றாயிற்று.

**"ய ஏஷோ அந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:"**

(சாந். 1-6-6)

(ஸூர்யனுக்கு நடுவில் பொன்மயமான புருஷன் எவனொரு வன் இருக்கிறனோ) என்னும் வாக்யம் ஸூர்ய மண்டலத்தின் நடுவில் உபாஸகர்கள் உபாஸிப்பதற்காகப் பரமபுருஷனால் எடுத்துக் கொள்ளப்பட்ட திவ்யமங்கள விக்ரஹ மொன்றைக் காட்டுகிறது. "ஆதித்ய வர்ணம் ஹிரண்மய" என்று ஸூர்யன் போலவும், பொன்போலவுமிருப்பவன் என்றது "கதிர் மதியம் போல் முகத்தான்" (திருப்பாவை-1) என்றருளியது போலே ப்ரதிகூலர்க்கு ஸூர்யன் போலப் பொறுக்க வொண்ணா தவனாயிருப்பானென்றும், அநுகூலர்க்குப் பொன் போலே குளிரக் கடாக்ஷிப்பான் என்றும் காட்டுவதற்காகவாகும். ஆகையாலே ஸர்வேஶ்வரனுடைய நிறம் ஸூர்யனையும், பொன்னையும் போலிருப்பது என்று கொள்ள வேண்டிய தில்லை.

"ஹிரண்மய இதி ரூபஸாமாந்யாத் சந்த்ர முகவத்"

- (சந்திரன் போன்ற முகம் என்று கூறுமிடங்களிற் போலே உரு வத்தின் அழகைக் காட்டுவதற்காகப் பொன் மயமானவன் என்கிறது).

பாலின் நீர்மை செம்பொன் நீர்மை பாசியின் பசும்புறம்
போலும்நீர்மை * பொற்புடைத்தடத்து வண்டுவிண்டுலாம்*
நீல நீர்மை என்றிவை நிறைந்த காலம் நான்குமாய்*
மாலின்நீர்மை வையகம் மறைத்ததென்ன நீர்மையே?

(திருச்சந்த - 44)

எம்பெருமான் நான்கு யுகங்களில் நான்கு வர்ணங்களைத் தனக்கு அமைத்துக் கொள்கிறான்.

கிருதயுகத்தில் அனைவரும் சத்வகுணம் படைத்தவர்கள் வெண்மை நிறத்தை விரும்பக் கூடியவர்கள் அதனால் பால் போன்ற வெண்மை நிறத்தை க்ருதயுகத்தில் ஏற்கிறான்.

த்ரேதாயுகத்தில் சிவந்த பொன்னின் நிறத்தை பகவான் ஏற்கிறான்

த்வாபரயுகத்தில் பாசியினுடைய பசுமை நிறத்தை பகவான் ஏற்கிறான்.

கலியுகத்தில் அழகிய தடாகத்திலுள்ள வண்டுகள் நெருங்கப்படிந்து மதுபானத்தைப் பண்ணி அதனால் ஏற்பட்ட ஸந்தோஷத்தாலே சிறகு விரித்து உலாவுகின்ற நீலப் பூவின் நிறத்தை பகவான் ஏற்கிறான்.

இவ்வாறு எம்பெருமான் நான்கு யுகங்களுக்கு நான்கு நிறங்களும், அமையப் பெற்ற ஸௌலப்ய குணத்தை பூலோகத்தில் உள்ளவர் அநாதரித்தது என்ன கொடுமை? "மாலின் நீர்மை வையகம் மறைத்தது என்ன நீர் மையே!" என்று ஸம்ஸாரிகளின் கொடுமையை நினைத்து வருந்தினார்.

"நிகழ்ந்தாய் பால் பொன் பசுப்புக் கார்வண்ணம் நான்கும்"

(நான். திருவ. 24)

"க்ருதே சுக்லஸ் சதுர்பாஹு" த்ரேதாயாம் ரக்தவர்ணோஸௌ
த்வாபரே பகவாந் ச்யாம: கலௌ க்ருஷ்ணம் த்விஷா க்ருஷ்ணம்"

(ஸ்ரீபாகவதம் 11-5-20)

என்றுமிடத்தில் காட்டி, இத்திருமேனியை உடையவன் பிரமனையும், உருத்திரனையும் விபூதியாகக் கொண்ட நாராயணனே என்று நிர்ணயித்தது.

"நீல முண்ட மின்னன்ன மேனிப்பெருமான்"

- (திருவிருத்தம் 29)

என்று வேதம் தமிழ் செய்த மாறனும் இவ்வாக்கியத்தைத் தமிழ்ப்படுத்தினார்.

திருமேனியில் நீலநிறத்தையும், பிராட்டி, திவ்யாயுதங்கள், திருவாபரணங்களில் மின்னல நிறத்தையும், கண், கை, கால, வாய்களில் செந்தாமரை நிறத்தையும் கொண்ட இத் திருமேனியையே

"வித்யுமதீஸர்வ வர்ணா புருஷதை வத்யா"- என்று அதர்வசிகை ஸர்வ வர்ணங்களையுமுடையதாகப் பேசிற்று.

உண்மையான குணங்களை விதிக்கும் போது "பாரூப. ஸத்யஸங்கல்ப ஆகாஸாத்மா ஸர்வகர்மா ஸர்வகாம ஸர்வகந்த: ஸர்வரஸ" (சாந் 3-14-2) என்று விக்ரஹத்தையும் சேர்த்துப் படித்த படியால் இவ்வுருவம் உண்மையானதே என விளங்குகிறது. இப்படி ஒவ்வொரு ஸ்தானத்திலிருக்கும் பரம்பொருளை வர்ணமுடையவனாகவும், புருஷனென்றும், வேத வாக்யங்கள் படிக்கையால் சாந்தோக்ய உபனிஷத்தில் சொன்ன பரம்பொருளான நாராயணனுக்கு அப்ராக்ருதமாய் உண்மையான திருமேனியுண்டென்று தேறிற்று.

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம் ஸ்ததைவ பஜாம்யஹம்:|
மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வஶ:||

(கீதை 4-11)

இந்த ச்லோகத்தில் அவதாரஸௌலப்யத்தின் எல்லை நிலையான அர்ச்சாவதார ஸௌலப்யத்தை அருளிச்செய்கிறான். மாம் என்று க்ருஷ்ணாவதாரத்தைக் கூறிய போதிலும், "யே யதா" முதலான பதஸ்வாரஸ்யத்தாலே அவ்வவதாரத் தோடு [illegible] திருமேனியையும், தன்மைகளையும் உடைய [illegible]மும் இந்த ச்லோகத்தில் கருதப்படுகிறது எனக் [illegible]டும்.

[illegible]சக்திகளில் மிக்க உபாஸகர்களை மாத்திரம் [illegible] இந்த ச்லோகத்தில் அவற்றில் குறைவுடைய [illegible]யும் கருதுகிறான், என்று தெரிகிறது.

"**ப்ரதிமாஸு அப்ரபுத்தாநாம்**" - அறிவில் குறைந்தவர்களுக்கும் அர்ச்சாவதாரத்தில் காட்சியளிக்கிறான் என்று ரிஷிகளும், ஜ்ஞாந சக்தி குறைந்தவர்களுக்கும் காட்சி அளிப்பது அர்ச்சாவதாரத்திலே என்று கூறினார்களன்றோ.

"**அக்நௌ திஷ்டதி விப்ராணாம்**" - என்று வேதாத்யயனம் செய்து, அக்நி கார்யங்கள் செய்யவல்ல அந்தணர்களுக்கு அக்னியில் காட்சியளிக்கிறான் என்றும்,

"**ஹ்ருதி திஷ்டதி யோகிநாம்**" என்று உபாஸனம் செய்யவல்ல யோகிகளுக்கு இருதயத்தில் காட்சியளிக்கிறான் என்றும்,

"**ஸர்வத்ர ஸமதர்சிநாம்**" என்று உபாஸனம் நிறைவேறப்பெற்று நிற்கின்றதெல்லாம் நெடுமால் என்று காணவல்லவர்களுக்கு எல்லாவிடத்திலும் காட்சியளிக்கிறான் என்று இச்லோகத்தின் கடைசி பாதத்தில் அருளிச் செய்கிறார்.

"**அப்ரபுத்தாநாமபி ப்ரதிமஸு**" என்று "அபி" சப்தத்தைக் கூட்டி கொண்டு "அத்தகைய ஜ்ஞாநசக்தி பூர்த்தியற்ற ஸாமாந்யாதிகாரிகளுக்கும். அர்ச்சையில் காட்சியளிக்கிறான் என்றே பொருள் கொள்ள வேண்டும். இப்படியல்லாமல் "**அப்ரபுத்தாநாமேவ ப்ரதிமாஸு திஷ்டதி**" (அறிவு குறைந்தவர்களுக்கே அர்ச்சையில் நிற்கிறான் என்று ஏவகாரத்தைக் கூட்டி கொண்டு பொருள் கொண்டால்,

ஆஸ்தாம் தே குணராசிவத் குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்
ஸங்க்யா பௌம நிகேதநேஷ்வபி குடீகுஞ்ஜேஷு ரங்கேச்வர!
அர்ச்ய: ஸர்வ ஸஹிஷ்ணுரர்ச்சக பராதீநாகிலாத்மஸ்திதி:
ப்ரீணீஷே ஹ்ருதயாலுபிஸ் தவ ததச்சீலாத் ஜடீபூயதே!!
(ஸ்ரீரங்கராஜ ஸ்தவம் 2-74)

(ஸ்ரீரங்கநாதனிடத்தில் உள்ள திருக்கல்யாண குணங்களை அளவிட்டு எண்ண முடியாது. அதே போல் அந்தக்குணங்களுக்கு போக்கு வீடாயிருக்கும், அவதாரங்களுக்கும் எண்ணிக்கை கிடையாது. இது ஒரு புறமிருக்க; இந்நிலவுலகிலுள்ள கோயில்களிலும், வீடுகளிலும், ஆச்ரமங்களிலும்,

ஆராதிக்கவுரியவராகவும், அர்ச்சகர்களுடைய எல்லாக் குற்றங்களையும் ஸஹிப்பவராகவும், அவர்களுக்கு மிகவும் வசப்பட்டிருக்கும் எல்லா நிலைகளையும் உடையவராகவும், அர்ச்சாவதாரமாக எழுந்தருளியுள்ளான். தேவரீருடைய சீலகுணத்தை நினைத்து நன்னெஞ்சினர் மயங்குகின்றனர்). என்று பட்டர் அருளியுள்ளார்.

எம்பெருமான் அறிவு குறைவாளர்களுக்கு மட்டுமே காட்சியளிக்கிறான் என்று கொள்ளில் ஞானிகளில் தலைசிறந்தவர்களான ஆழ்வார்களுக்கும் எம்பெருமான் அர்ச்சாவதாரத்தில் காட்சியளிப்பது பொருந்தாமற் போய் விடும். "ஸர்வத்ர ஸமதர்சிந:" என்று நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்று காணும் ஸமதர்சிகளுக்கு அர்ச்சையுள்ளிட்ட எல்லாவிடத்திலும் காட்சியளிக்கிறான் என்று மேலே கூறியதும் விரோதிக்கும். ஆகையால் அறிவு குறைந்தவர்களுக்கும் அர்ச்சையில் நிற்கிறான் என்றே பொருள் கொள்ள வேண்டும்.

இங்கு சொல்லப்படும் அர்ச்சாவதார ஸமாச்ரயணத் திற்கு அதிகாரி நியமம் கிடையாது என்று "யே" என்னும் பதத்தால் உணர்த்தப்பட்டது. இனி ("யதா மாம் ப்ரபத்யந்தே") என்று அவர்களுக்குப் போலே அநுஷ்டான ப்ரகாரம் முதலான நியமமும் இவர்களுக்குக் கிடையாது என்று கூறப் படுகிறது ("யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம் ததைவ பஜாமி") தம் விருப்பத்துக்கு அநுகுணமாக எவர் எவ்வண்ணமாக என்னை ஸங்கல்பித்து ஆச்ரயிக்கிறார்களோ அவர்களை அவ்வண்ண மாகவே நான் அடைகிறேன். அவ்வண்ணமாக அவர்களுக்கு என்னை நான் காட்டுகிறேன் என்று கருத்து.

கோபிகளையும், நம்மாழ்வாரையும், திருமங்கையாழ் வாரையும் போலே என்னை நாயகனாக அனுபவிக்க நினைப் பவர்களுக்கு நாயகனாகவும் தசரத, வஸுதேவ, நந்தகோபாலர், யசோதை, பெரியாழ்வாரைப் போலே பிள்ளையாக அனுபவிக்க நினைப்பார்க்குப் பிள்ளையாகவும் உன்னையும் உன் ஸஹோதரர்களையும் போலே தூதனாகவும், ஸாரதியாகவும், ஆக்கி என்னை அனுபவிக்க விரும்புவோர்க்கு அவ்வண்

ணமாகவும் ஆகி அவர்களை அநுபவிக்கச் செய்கிறேன் என்று கருத்து. இவ்விஷயம் விஷ்ணுபுராணத்தில்,

"பாபம் ஹரதி யத் பும்ஸாம் ஸம்ருதம் ஸங்கல்பநாமயம்!
தத் புண்டரீகநயநம் விஷ்ணோர் த்ரக்ஷ்யாம்யஹம் முகம்"
(வி.பு 5-17-4).

அடியார்களின் ஸங்கற்பப்படி தன்னை ஆக்கி வைப்ப தாய், அவர்களுடைய திருமுக மண்டலத்தை நான் காணக் கடவேன் எனக் கூறப்பட்டது. அந்தர்யாமிரூபமான அவதாரத் திலும், யோகிகளின் ஸங்கற்பத்திற்கு அநுகுணமாகத் தன்னை ஆக்கி கொள்கிறான் என்பது விஷயம் ஆகும்.

அர்ச்சாவதாரவிஷயமாம் போது தேவ மநுஷ்யாதிரூபத் தோடு அவதரித்து என்னை ஆச்ரயிக்க விரும்புவார்க்கு ரக்ஷணத்தைச் செய்வதோடல்லாமல் அக்காலத்தில் பிறக்காதவர்களும் இழவாதபடி தாம் விரும்பும் எந்த அர்ச்சா ரூபத்தை ஸங்கல்பித்து என்னை ஆச்ரயிக்க விரும்புகிறார் களோ அவர்களுக்கு அவர்கள் விரும்பும் அந்த அர்ச்சாரூபத் திலேயே என்னை நான் காட்டுகிறேன் என்கிறான் கண்ணன்.

பஹிராராதநார்த்தம் து யா மூர்த்திரவதிஷ்டதே!
ததாகாரம் விசிந்த்யாத யஜேத் ஸர்வேச்வரம் ஹரிம்.
(வி.பு 5-17-4)

வெளிப்படையான ஆராதனத்திற்காக யாதொரு அர்ச்சா மூர்த்தியானது எழுந்தருளியிருக்கிறதோ, அதே அமைப்பை உடையவனாக ஸர்வேஶ்வரனான ஹரியை தியானித்து ஆராதிக்க வேண்டியது என்று ஹ்ருத்யோகத்தில் கூறப்பட்ட தாக எங்களாழ்வான் விஷ்ணுசித்த வ்யாக்யானத்தில் காட்டினார்.

"தமருகந்தத்துஎவ்வுருவம் அவ்வுருவம்தானே *
தமருகந்ததுஎப்பேர் மற்றப்பேர் * – தமருகந்து
எவ்வண்ணம்சிந்தித்து இமையாதிருப்பரே *
அவ்வண்ணமாழியானாம்".
(முதல் திருவ. - 44)

என்று பொய்கையாழ்வாரும்,

"தஞ்சமாகியதந்தைதாயொடு தானுமாய்அவையல்லனாய்*
எஞ்சலில்அமரர்குலமுதல் மூவர்தம்முள்ளுமாதியை *
அஞ்சிநீருலகத்துள்ளீர்கள்! அவனிவனென்றுகூழேன்மின் *
நெஞ்சினால்நினைப்பான்யவன் அவனாகும்நீள்கடல்வண்ணனே"
(திருவாய். 3-6-9)

என்று நம்மாழ்வாரும் இதையே விவரிக்கின்றார்.

"யே" - என்றதை "தமர்" என்றும் "உலகத்துள்ளீர்கள்" என்றும் "யதா ததா ஏவ" என்றதை - எவ்வுருவம், அவ்வுருவம், எப்பேர், அப்பேர், எவ்வண்ணம், அவ்வண்ணம், என்றும் , யவன் அவன் என்றும் கூறுகிறார். மாம் - ஆழியான் என்றும் தஞ்சமாகிய ஆதியை நீள்கடல்வண்ணன் என்றும், ப்ரபத்யந்தே - என்றதை உகந்து, "சிந்தித்து இமையாதிருப்பர்" என்றும் "நெஞ்சினால் நினைப்பான்" என்றும், "பஜாமி" என்றதை - "ஆம்", "ஆகும்" என்றும் இவ்விரு ஆழ்வார்களும் (பொய்கை யாழ்வார், நம்மாழ்வார்) இந்த ச்லோகார்த்தத்தைப் பதம்பதமாக விவரித்திருப்பது குறித்துக் கொள்ளத்தக்கது.

இப்பாசுர வ்யாக்யானங்களில் பெரியவாச்சான்பிள்ளை யும், நம்பிள்ளையும் நமக்கு நல்லவர்கள் இன்னாரென்று மில்லை, இன்னபடி பஜிப்பாரென்றுமில்லை; அவர்கள் நின்ற நிலை யிலே அவர்கள் பஜித்தபடியே அவர்களைப் பற்றுவேன் என்கிறது. அடியார்கள் ப்ராக்ருத த்ரவ்யங்களிலே ஒன்றை உனக்குத் திருமேனியாகக் கொள்ள வேணும்" என்றால் அத்தைத் திருமேனியாகக் கொள்ளும் நல்லவர். சதங்கை யழகியார் என்று திருநாமம் சாத்தினாராகில் நாராயணாதி நாமத்தைக் காட்டிலும் அத்தை விரும்பும்.... நல்லவர் உகந்து "யே யதா" என்னும்படி யாதொரு ப்ரகாரத்திலே உகந்து ஸாவதாநராயிருப்பார்கள். அந்த ப்ரகாரத்திலே அத்தை உடையனாம் ...... இவர்களை நினைத்தபடியாகத் தன்னை அமைத்துக் கொடுக்கும். முதல் திருவந்தாதி – 44 வ்யாக்யானம் சில ஐதிஹ்யங்களும் இங்கு காணத்தக்கவை.

1) எம்பெருமானார் உஞ்சவிருத்திக்கு எழுந்தருளும் போது சில பிள்ளைகள் காலாலே கீறி, உம்முடைய

எம்பெருமான் திருமேனி என்று காட்ட பாத்ரத்தை வைத்து தண்டனிட்டருளினார்.

2) கோயிலிலே சில பிள்ளைகள் விளையாடும் போது திருவீதியில் பெருமாளும் நாய்ச்சிமாரும், பெரிய திருமண்டபமும், கற்பித்துப் பெரியதிருப்பாவாடையும் அமுது செய்வித்து எம்பெருமானார் ப்ரஸாதம் என்று மணலைக் கையாலே முகந்தெடுக்க, அப்போது உஞ்சவிருத்திக்கு எழுந்தருளிய உடையவர் அவ்விடத்திலே அது கேட்டருளி தண்டனிட்டு, அவர்கள் கொடுத்த ப்ரஸாதத்தைப் பாத்ரத்திலே ஏற்றார் என்று நஞ்ஜீயர் அருளிச்செய்தார்.

3) நஞ்ஜீயருடைய திருவாராதனப் பெருமாளுக்குப் பெயர் "ஆயர்தேவு" என்பது இப்பெயரைத் தான் மிகவும் உகந்து இருப்பதைக் காட்ட அப்பெருமான் ஓர் ஆச்சரியமான செயலைச் செய்தான். விஷ்ணுபுராண வ்யாக்யாதாவான விஷ்ணுசித்தரென்னும் எங்களாழ்வானுடைய ஸ்வப்னத்திலே இப்பெருமான் தோன்றி நாவற்பழம் வேண்டினான். "நீ யார்" என்று அவர் கேட்க ஜீயர் மகனான "ஆயர் தேவு என்று அருளிச் செய்தான். அவருகந்த பெயரைத் தான் உகந்த தோடன்றி, அப்பெயருக்கேற்ப நாவற்பழமும் இரந்து சென்ற நீர்மையைக் கண்ட எங்களாழ்வான் நஞ்சீயரைக் கண்ட போது, உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்க விடமாட்டேன் என்கிறான். நாவற்பழத்தைக் கொடு, வெண்ணையைக் கொடு, அத்தைக்கொடு, இத்தைக்கொடு என்று துன்புறுத்திக் கொண்டேயிருக்கின்றான் என்று கூறி வியந்தார். இவ்வை திஹ்யங்களில் காணப்படும் அர்ச்சாமூர்த்தியின் ஆச்ரித பாரதந்த்ரியமே "**யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்**" என்று இங்கு கூறப்படுகிறது. எவர் ஏப்பலனை விரும்புகின்றாரோ அவர்க்கு அப்பலனை அளிக்கிறான்.

எம்பெருமானுடைய ஸௌலப்யமாகிற ஸ்வபாவத்தையும், அதோடு சேர்ந்த ஸௌசீல்யம், வாத்ஸல்யம் முதலான குணங்களையும் அவதார விக்ரஹங்களின் சேஷ்டிதங்களையும், கண்டு ஆழ்வார் எத்திறம்! எத்திறம் என்று

மோஹிக்கிறார். அநுவர்த்தந்தே - அநுபவித்து வாழ்கிறார்கள். யோகிகளின் வாக்குக்கும், மனத்துக்கும், எட்டாத இத்தன்மைகளையும், செயல்களையும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் வெளியிந்திரியங்களாக அனுபவித்து வாழ்கிறார்கள். "ஸர்வச: அனுவர்த்தந்தே - விரும்பும் எல்லாப்படியாலும் அனுபவித்து வாழ்கிறார்கள் "முடியானே" - (திருவாய் 3-8) என்னும் திருவாய்மொழி போலே ஒரிந்திரியத்தாலே மற்றோரிந்திரியத்தின் அனுபவத்தையும், பெறுகிறார்கள்.

நாயகனாகவும், தம்பியாகவும், தூதனாகவும், ஸாரதியாகவும் தாங்கள் விரும்பியபடி யெல்லாம் அனுபவித்து வாழ்கிறார்கள். அர்ச்சா மூர்த்தியை அலங்கரிப்பது, வீதிகளில் எழுந்தருளப் பண்ணுவது, உத்ஸவங்களை ஸேவிப்பது முதலான எல்லாப்படிகளாலும், அனுபவித்து வாழ்கிறார்கள், என்று கொள்ளலாம்.அர்ச்சாரூபத்திலேயே யோகிகளுடைய வாக்குக்கும், மனத்துக்கும், அப்பாற்பட்ட பரரூபத்தையும் வ்யூஹரூபங்களையும் விபவரூபங்களையும் அனுபவித்து வாழ்கிறார்கள் என்றும் கொள்ளலாம்.

• • • • • • • • • • •



### 3. அர்ச்சைக்கும் பிற நிலைகளுக்கும் உள்ள வேறுபாடு

பெரும்புறக்கடலும் ச்ருதிஸாகரமும் அலைத்து ஆழ்ந்து ஓடும் இடங்களில், அயோக்கியர்க்குச் சமைத்த மடுவும் சாய்கரகமும் மாநமேயசரமம். (ஆசார்ய ஹ்ருதயம்74ஆம் சூத்திரம்).திருவாய்மொழியின் முந்தைய நிலை-வேதம், பாஞ் சராத்திரம், மனு தர்ம சாஸ்த்திரம், ஸ்ரீராமாயண பாரதங்கள்.

அர்ச்சாவதாரத்தின் முந்தைய நிலை - பரத்துவம் வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம்.

இச்சூத்திரத்தை பெரும்புறக்கடல் அலைத்து நிற்கு மிடத்திலும் ஆழ்ந்து நிற்கும் இடத்திலும், ஓடுமிடத்திலும், அயோக்கியர்க்குச் சமைத்த மடு மேய சரமம் என்றும், சுருதி சாகரம் அலைத்து நிற்குமிடத்திலும், ஆழ்ந்து நிற்குமிடத்திலும், ஓடுமிடத்திலும், அயோக்யர்க்குச் சமைத்த சாய் கரகம் மா சரமம் என்றும் சில சொற்பெய்து தனித் தனியே கூட்டி முடிக்

| | | |
|---|---|---|
| பெரும் புறக்கடல் | - | இறைவன் |
| அலைத்து நிற்குமிடம் | - | வ்யூஹ நிலை |
| ஆழ்ந்து நிற்குமிடம் | - | உயிர்க்குயிராய் (அந்தர்யாமி யாய்) நிறகும் நிலை. |
| ஓடும்மிடம் | - | அவதாரங்கள் |
| அயோக்யர் | - | இம்மூன்று நிலைகளையும் அறிந்து வழிபடும் தன்மை இல்லாதவர்கள் |
| சமைத்த மடு | - | அர்ச்சாவதாரம். |
| மேய சரமம் | - | இறைவனுக்குரிய நிலைகள் |
| ஐந்தனுள் | - | ஐந்தாவதான அர்ச்சாவதாரம். |
| மேயம் | - | பிரமேயம் (பிரமாணத்தால் அறியப்படும் பொருள்பிரமேயம்) |
| சரமம் | - | முடிவு |

எம்பெருமானை பெரும்புறக்கடலாக உருவகித்ததற்கு ஏற்ப அவனுடைய நிலைகளையும் அலைத்து ஆழ்ந்து ஓடும் இடம் என்றும், சமைத்த மடு என்றும் உருவகிக்கிறார் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்.

இச்சூத்திரத்தில் மூன்று விதமான கடல்களை கூறுகிறார். எல்லோரும் காண்கிற உப்புக்கடல் ஒன்று, பெரும்புற கடல் ஒன்று. சுருதிசாகரம் என்று சொல்லப்பட்ட சாஸ்திரமாகிற கடல் ஒன்று. ஆக இம்மூன்று கடல்களிலும் நாம் இறங்க முடியாத சில நிலைமைகளும், இறங்கக் கூடிய ஒரு நிலைமையும் உண்டு. உப்புக் கடலில் அலைத்து ஆழ்ந்து ஓடும் இடங்கள் இறங்குதற்குத் தகுதி இல்லாத இடங்கள். கடல் நீரே மேகம் வாயிலாக வரப்பெற்றுத் தடாகமாகத் தோன்றின இடம் இறங்கிப் பயன் பெறுதற்குத் ததியான நிலைமை. இறைவனாகிற கடலில் அலைத்த இடமான வ்யூஹமும், ஆழ்ந்த இடமான அந்தர்யாமித் வமும், ஓடும் இடமான அவதாரங்களும், நம் போல்வாருக்குக் காண முடியாத நிலைமைகள்;

அர்ச்சாவதாரம் கண்டு வணங்கிப் பயன் பெறக் கூடிய நிலைமை சாஸ்திரமாகிற கடலில் அலைத்த இடமாகிற பாஞ்சராத்திரமும், ஆழ்ந்த இடமான மநு முதலான ஸ்மிருதி களும், ஓடும் இடமான இதிஹாஸங்களும் அனைவரும் கற்றுப் பயன் பெறமுடியாத நிலைமைகளையுடையன; திவ்யப் பிரபந் தம் எல்லாரும் கற்றுப் பயன்பெறக்கூடிய நிலைமையை யுடையது. ஆகவே, உப்புக் கடலின் முடிந்த நிலையான தடாகமும், எம்பெருமானாகிற கடலில் முடிந்த நிலையான அர்ச்சா வதாரமும் போன்று, சாஸ்திரமாகிற கடலில் முடிந்த நிலையாகத் திவ்யப் பிரபந்தத்தை அருளிச் செய்தபடி, இவ்வுலகில் சேதனர்கள் உஜ்ஜீவிக்கவும், பயன் பெற வேண்டும் எனில் தடாகம் சிறந்தது போலவும், அர்ச்சாவதாரம் சிறந்தது போலவும் பயன் பெறுதற்குத் திவ்யப்பிரபந்தமே சிறந்தது எனக் கூறுகிறார் அழகியமணவாளப்பெருமாள் நாயனார்.

பூகதஜலம் போலே அந்தர்யாமித்வம்; ஆவரண ஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே வ்யூஹம்; பெருக்காறு போலே விபவம்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்.

**பூகதஜலம் போலே அந்தர்யாமித்வம்** = தண்ணீர் வேட்கை கொண்டவனுக்கு, வேறு இடங்களுக்குச் செல்ல வேண்டாதபடி தான் நிற்கும் இடத்திலே உண்டாயிருந்தும், (பூகதம் - பூமிக்குள்ளே இருக்கின்ற) கொட்டும், குந்தாலியும் கொண்டு கல்லினால் அல்லது குடிக்கக் கிடைக்காத பூமிக் குள்ளே இருக்கிற தண்ணீரைப் போலே ஆயிற்று, கண்டு பற்ற வேண்டும் என்று ஆசைப்பட்டவனுக்கு மனத்திலே இருந்தும், கண்களால் காண முடியாதபடியே அஷ்டாங்க யோக முயற்சியாலே காண வேண்டும்படியான அந்தர்யாமித்வம்.

**ஆவரண ஜலம் போலே பரத்துவம்** = தண்ணீர் வேட்கை கொண்டவனுக்கு, அண்டத்திற்குப் புறம்பே (ஆவரணம் - மூடிக்கொண்டிருப்பது) பெருகிக்கிடக்கிற ஆவரண ஜலம் போலே ஆயிற்று. கண்டு பற்ற வேண்டுமென்று ஆசைப்பட்ட இவனுக்கு "அப்பால் முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுது" என்கிறபடியே லீலாவிபூதிக்கு அப்பாற்பட்டிருக்கிற பரத்துவம்.

**பாற்கடல் போலே வியூகம்** = அப்படி மிக்க நெடுந்தூரம் அன்றியே இந்த உலகத்திற்குள்ளே இருக்கச் செய்தேயும், தண்ணீர் வேட்கை கொண்ட அவனுக்குச் சென்று அடைய முடியாததான பாற்கடல் போலே ஆயிற்று. கண்டு பற்ற வேண்டும் என்று ஆசைப்பட்ட இவனுக்கு (பெரிய திருவந்தாதி - 34).

"பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்" என்கிறபடியே கேட்டிருக்குமத்தனையல்லது சென்று காண அரிதாம்படியிருக்கிற வியூகம்.

**பெருக்காறு போலே விபவம்** - மிகவும் அண்மையில் இருந்தும் அந்தக் காலத்தில் இருந்தவர்களுக்குப் பருகலாம் படியாய், வேறு காலத்தில் இருந்தவனுக்குப் பருகுதற்கு அரிதாம்படியான பெருக்காறு போலே ஆயிற்று. "மண்மீதுழல் வாய்" என்கிறபடியே பூமியிலே அவதரித்துச் சஞ்சரித்தும் அக்காலத்தில் வசித்தவர்களுக்கு அடையத்தக்கதாய்ப் பிற்காலத்தில் உள்ள இவனுக்குக் கிட்டாதபடியான விபவம்.

**அதில் தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்** - முன்பு சொன்னவை போல அன்றிக்கே, அவனுக்கு விடாய் கெடப் பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலே ஆயிற்று, கண்டு பற்ற வேண்டும் என்று ஆசைப்பட்ட இவனுக்கு, காண்பதற்குத் தேசத்தாலும், காலத்தாலும், கரணத்தாலும், அதிதூரமின்றிக்கே, கோயில்களிலும், வீடுகளிலும் என்றும் ஒக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற **பின்னானார் வணங்கும் சோதி** ஆன அர்ச்சாவதாரம்.

> ஆஸ்தாம் தே குணராஶிவத் குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்
> ஸங்க்யா பௌமநிகேத நேஷ்வபி குடீகுஞ்ஜேஷீரங்கேச்வர!
> அர்ச்ச்யஸ் ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:
> ப்ரீணீஷே ஹ்ருதயாலுபிஸ் தவ ததஶ் ஶீலாஜ் ஜடீபூயதே||
>
> (ஸ்ரீரங்கராஜஸ்தவம்2 - 74)

பட்டர் அர்ச்சாவதார ப்ரஸ்தாபம் பண்ணுகிறார், இதில் எம்பெருமான் செய்தருளின விபவாவதாரங்கள் பத்து என்று பெரும்பாலும் பொதுவாக வழங்குவர். அவதாரங்களும் எண்ணிறந்தவை. "சன்மம் பலபல செய்து வெளிப்பட்டுச் சங்கொடு சக்கரம் வில்" (திருவாய்மொழி-3-10-1) என்று ஆழ்வார் கூறுகிறார். அடியார்களை காப்பதற்காக எம்பெருமான் பல காலும் வந்து திருவவதாரம் செய்து அருளுகிறான். சன்மங்கள் பல செய்து கண்களுக்கு முன்னே வெளிப்படுகிறான்.

எம்பெருமானுடைய திருக்குணங்களுக்கு எப்படி எண்ணிக்கை யில்லையோ, அப்படியே அந்தத் திருக்குணங்களின் பரீவாஹரூபங்களான அவதாரங்களுக்கும் எண்ணிக் கையில்லை என்பதை முதற்பாதத்தில் கூறுகிறார் பட்டர்.

தேவரீர் எண்ணிறந்த விபவாவதாரங்களைச் செய்தருளி யிருக்கும் விஷயம் கிடக்கட்டும்; அதில் எமக்கு ஊற்றமில்லை; அர்ச்சாவதாரச் சிறப்பை நினைத்தால் வேறு எதுவுமே பொருளாகத் தோன்றுவதில்லை என்கிறார் பட்டர். மூன்று பாதங்களிலும் அர்ச்சாவதாரப் பெருமையைப் பேசியருளு கிறார். ஆலயங்களிலும், க்ருஹங்களிலும் மஹர்ஷிகளின் ஆச்ரமங்களிலும் யார் எங்கு விரும்பினாலும், அங்கங் கெல்லாம் பெரிய கோயிலில் ஆர்த்தர்களை நோக்கி குசலபரச்நம் பண்ணுகின்றவையும் க்ருபையினால் சேதநர் களின் குணதோஷ விசாரம் பண்ண மாட்டாதவையுமான, கடாக்ஷங்களினால் குளிரச்செய்கின்றார். தேவரீர் ஜகத்ரக்ஷண சிந்தனையோடு கூடின ஜாகரணரூபமாக திருக்கண் வளர்ந்தருளா நின்றீர் என்கிறார் பட்டர். திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையால் அடி வருட "குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வட திசை பின்பு காட்டித் தென் திசையிலங்கை நோக்கி"- (திருமாலை - 19)என்கிறபடியே ஸம்ஸாரிகள் ஸேவித்து வாழ்வதற்குப் பாங்கானது என்று பெரியபெருமாள் திருவுள்ளம் பற்றினார் என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் அருளிச் செய்கிறார்.

அவதாரங்களின் குணபூர்த்தி எல்லாம் அர்ச்சையினி டத்தில் குறைவற்று நிறைந்து விளங்குகிறது. அவதாரங்களின் திருவுருவுதான் அர்ச்சை வடிவமாகப் பல விடங்களில் மேற் கொண்டிருக்கையாலும் "அதிலே தேங்கின மடுக்கள் போலே" என்கிறார் அழகியமணவாளபெருமாள்நாயனார்.

**ஆகமூர்த்தி**

"அதவா வேத வேத்ய நியாயத்தாலே, பரத்வ பரமுது வேதம் வ்யூஹவியாப்தி, அவதரணங்களில் ஓதின நீதி கேட்டமனு படுகதைகளாய் ஆக மூர்த்திகளில் பண்ணிய தமிழான வாறே, வேதத்தைத் திராவிடமாகச் செய்தாரென்னும்" (ஆ.ஹி-70).

ஆக மூர்த்தி என்பது அர்ச்சாவதாரத்திற்கு திருமழிசை யாழ்வார் வைத்த திருப்பெயர்.

"ஆக மூர்த்தியாய வண்ணம் என் கொல்"

- (திருச்சந்த விருத்தம் - 17)

யாகமூர்த்தி என்பது ஆக மூர்த்தி என மருவிற்று (யாடு - ஆடு, யாறு - ஆறு என்பன போன்று) "ய ஐ - தேவபூஜயாம்" ஆகையாலே அருச்சிக்கத் தக்க மூர்த்தி என்றபடி அன்றிக்கே, இப்படியாக வேண்டும் என்று சங்கல்பித்துக் கொண்டு தோன்றின மூர்த்தி என்னவுமாம்.

அறிவிற் சிறந்த பெரியோர்கள் ஈடுபடும்படி அடியார்களு டைய மனக் கருத்துக்குத் தகுதியாகத் 'தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே' என்கிற திருப்பாசுரத்தின் படியே, திருமேனியாகக் கொள்ளும் பொருள்கள், திருப்பெயர் கள், திருஉருவம், இருக்கை, படுக்கை முதலானவைகளிலும், தேசம், காலம், அதிகாரம் ஆகிய இவை முதலானவைகளிலும் ஒரு வரையறை இல்லாதபடி செய்து கொண்டு மிக்க சுலபனாய் இருக்கும் அர்ச்சாவதார மான நிலையில் அர்ச்சாவதாரத்தின் பெருமையைச் சொல்லும் பொருட்டு "சடகோபன் பண்ணிய தமிழ்" என்னும்படி அர்ச்சாவதாரத்தைப் போலே தானும் எல்லா வகையாலும் சுலபமாய் எல்லாரும் கற்பதற்கு உறுப்பாகத் தமி ழின் வடிவாகக் கொண்டு ஆழ்வார், வடமொழியாயுள்ள வேதத்தைத் தமிழில் செய்தார். "எய்தற்கரிய மறைகளை ஆயிரம் இன் தமிழால் செய்தற் குலகில் வரும் சடகோபனை" - (இராமா. நூற். - 18)என்றும் வழங்கப்படுகிறது.

"மேகம் பருகின சமுத்ராம்பு போலே" அதாவது மேகம் பருகின கடல் நீர், அந்த கடலுக்குள் வசிக்கின்ற மீன் முதலான பொருள்களுக்கு ஒழியப் புறம்பள்ளார்க்கு உள்ளே புகுவதற்கும் அரிதாய் பௌர்ணமி முதலிய பருவகாலங்களில் ஒழிய ஏனைய காலங்களில் தீண்டலாகாது என்கையாலே, முழுகுதற்குக் கால நியதியையுமுடைத்தாய் இருக்கிற கடல் நீரானது மேகம் பருகின மழையாகப் பெய்ய அம் மேகத்தின் சம்பந்தத்தாலே கடல் நீரினது உப்புத் தன்மை நீங்கி எப்பொழுதும் எல்லார்க்கும் பயன்படுமாறு, வேத ரூபமாகச் செய்யப்பட்ட இத்திருவாய்மொழியை பிராமணோத்தமர் களாலும், பெண்களாலும், நான்காம் வருணத்தவர்களாலும், அத்யயனம் செய்யத்தக்கது என்கிறபடியே ஒருகால வரையறை இன்றி எல்லாக்காலமும் எல்லார்க்கும் கற்பதற்கு உரியதாக உள்ளது. இப்படியிருந்துள்ள திருவாய்மொழியும், திருவாய் மொழியில் பேசப்படுகின்ற அர்ச்சாவதாரமும் சரமமான ப்ரமாணமும், ப்ரமேயமும் ஆகும்.

**அர்ச்சாவதார எம்பெருமானின் திருக்கல்யாண குணங்கள்**

"புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்குங் குணங்களை சொல்லுகிறது நாராயண பதம்"- (முமுக்ஷுப்படி - 136)

சேதனர் தாம் செய்த குற்றங்களை நினைத்து அந்தோ! இத்தனை பிழைகளை இழைத்த நாம் எங்ஙனம் அத்துணை உயரிய ஸ்வாமியைச் சென்றடைவது? என அஞ்சி அகலா திருத்தற் பொருட்டே எம்பெருமானின் திருக்கலியாண குணங் களில் ஓங்கி நிற்பதான குணங்களை பிள்ளைலோகாசாரியார் நிர்வஹிக்கிறார். அவையாவன வாத்ஸல்யமும், ஸ்வாமி த்வமும், ஸௌசீல்யமும், ஸௌலப்யமும், ஜ்ஞாநமும், ..க்தியும்.

**வாத்ஸல்யம்**

**கன்றினிடத்தில் பசு காட்டும் பரிவு:** சிறிது அழுக்குக் கலந்த புல் முதலியவற்றையும் தீண்டாத தாய்ப்பசு, தான் ஈன்ற கன்றின் உடலிலுள்ள வழும்பை விருப்புடன் தன் நாவினால் நக்கி, அக்கன்றைத் தூய்மைப்படுத்துகிறது. அஃது அத்துடன் நிற்கிறதா? தன் இனிய பாலையும் அதற்கீந்து அதை வளர்ப்பதுடன், அதன் எதிரில் வருபவரைக் கொம்பினால் முட்டித் தள்ளியும், அதற்கு முன் தான் ஈன்ற கன்று வரினும் அதை உதைத்துத் துரத்தியும் அவ்விளங்கன்றை காக்கின்றது.

இங்ஙனமே பகவானும், தன்னை வந்தடைந்த சேதனனின் குற்றங்களை பாராமல், அவற்றை போக்கியமாய் கொண்டு இன்னருளாகிய பாலை சுரந்து காக்கின்றான். மேலும் தன்னை பற்றின சேதனனுக்கு ஒரு குறைவு நேரின் குற்றங்களை குணமாகக் கொண்டு "கதஞ்சன - நத்யஜேயம்" ஒருபடியாலும் கைவிடுபவனல்லேன் "அப்யம் ஸர்வ பூதேப்ய" (எல்லா பிராணிகளிடத்தும் பயமற்றிருக்கச் செய்வேன்) என்கிறபடியே சேதனனுக்கு பல நன்மைகளைச் செய்யும் இயல்புடையவனா யுமிருக்கிறான். இங்ஙனம் செய்வதற்குப் பசுவிற்குக் கன்றினிடமும், பகவானுக்குச் சேதனனிடமும் இருக்கும் அன்பே காரணமாகும். இதுவே வாத்ஸல்யம் எனப்படும்.

**ஸ்வாமித்வம்** - உடையனாயிருக்குமிருப்பு, சேதனன் ஈஶ்வரனைக் கருதாமலும் நோக்காமலும் பாராமுகமாயிருக் கும் நிலையிலும், எம்பெருமான் இவனை விடாமல் நின்று இவனுடைய சொரூபத்தையே நோக்கிக் கொண்டு போவதற்குக் காரணமாயுள்ள ஒரு பந்த விசேஷமே ஸ்வாமித்வம் ஆகும். சேதனன் உலக பற்றிலேயே இச்சை வைத்து உழன்று திரிகின்றான். இங்ஙனம் சேதனன் பயனற்ற வழியில் தன் காலத்தைக் கடத்தினும் தன் உடைமையான இவனை அங்ஙனமே நலமற்ற வழியில் விட்டு விடுவதற்கு ஈஶ்வரனுடைய

ஸ்வாமித்வமாகிற தொடர்பு இடமளிப்பதில்லை. ஆதலின் அவன் உடைமையான சேதனனை விடாது மறைந்திருந்து, அச்சேதனனுக்கு துவேஷம் அற்றிருக்கும் நிலை தொடங்கி, கைங்கர்யம் புரியும் நிலை ஈறாக உள்ள பல நன்மைகளையும் உண்டாக்குகின்றான். இதற்குக் காரணம் பகவானுக்கும் சேதனனுக்கும் உள்ள சம்பந்தமே யாகும்.

**ஸௌசீல்யம்** - உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கை இந்த ஸௌசீல்யம் இரு வகைப்படும். நித்தியவிபூதி, லீலாவிபூதி இவற்றிற்கு ஸ்வாமியாய் பெரியபிராட்டியாரைப் பிரதான மகிஷியாய்க் கொண்டவனாய்த் தடை சிறிதுமற்ற ஸ்வாதந்த்தரியமாகிற தேஜஸை உடையவனாய் இருக்கும் பரமபுருஷன், தன் பெருமையையும் தன்னோடு கலக்கும் ஜீவனின் சிறுமையையும் நோக்காது, தன் பேறாக அவனுடன் புரையறக் கலத்தல் ஒரு வகை. சேதனன் விரும்பாவிட்டாலும், பகவானே சென்று அவனோடு புரையறக் கலத்தல் மற்றொரு வகை.

முந்தியதற்கு பாத்திரமானவர்கள் ஞானிகள், பிந்திய தற்குப் பாத்திரமானவர்கள் ஸம்ஸாரிகள்.

**ஸௌலப்யம்** - எளியனாயிருக்கும் இருப்பு, இது கண்ணிற்கு விஷயமாகாதிருக்கும் எம்பெருமான், தன் திவ்யமங்கள விக்ரஹத்தை, சேதனன் தன் கண்களாலே கண்டு பற்றுதற்கேற்ப எளியனாயிருத்தல், இறைவன் தான் இருக்கும் பரமபதத்தை விட்டு ஸம்ஸாரிகள் இடையில் வந்தவரித்துத் தன்னை எளியனாக்குகிறான். எம்பெருமான் நம் ஊனக் கண்களுக்குப் புலனாகாதவன். நாம் அவனைப் பற்றுதல் எங்ஙனம்? எனச் சேதனன் பின்னிடாதவாறு எம்பெருமானை நேருக்கு நேரே கண்டு பற்றுமாறு செய்கிறது. இங்ஙனம் செய்வன இராமகிருஷ்ணாவதாரங்களும் அர்ச்சைகளுமாகும்.

**ஞானம்** (அறிவு) - சேதனனுக்குப் போக்க வேண்டிய துன்பங்களையும், ஈய வேண்டிய இன்பங்களையும், அறிகைக்குத் தகுதியாய் எல்லா பொருள்களையும் ஒரே காலத்தில் நேராய்க் காணவல்ல அறிவு. சேதனனுக்குப் போக்க வேண்டுவன ஸம்ஸாரிகள் ஜன்மம் முதலியன. ஈய வேண்டுவன பரமபத கைங்கர்யம் முதலியன.

**சக்தி** (சாமர்த்தியம்) - எம்பெருமான் மாறுபட்ட இருபொருள்களையும் ஒன்று சேர்க்கக் கூடிய தனக்குண்டான இச்சக்தியினால் இரும்பை பொன்னாக்குவாரைப் போன்று தாழ்ந்த நிலையிலுள்ள ஸம்ஸாரிகள், உயர் நிலையிலுள்ள நித்திய சூரிகளோடு சேர்த்து ஒரு கோவையாக்குகிறான். இது சாமர்த்திய கார்யமாகும்.

மேலே குறிப்பிட்ட எம்பெருமானின் ஆறு குணங்களில், முதலில் குறிப்பிட்ட வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் ஆகிய நான்கும், சேதனன் பகவானைப் பற்றுதற்கு உதவி செய்யக் கூடியவை. இவற்றை ஆழ்வார்.

**அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா !***
**நிகரில்புகழாய் ! உலகம்மூன்றுடையாய் ! என்னையாள்வானே !***
**நிகரிலமரர் முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே !***
**புகலொன்றில்லாஅடியேன் உன்னடிக்கீழ்அமர்ந்துபுகுந்தேனே.**

(திருவாய்மொழி 6-10-10)

என்னும் பாசுரத்தில் "நிகரில் புகழாய்" என்பதனால் வாத்ஸல்யத்தையும் " உலகம் மூன்றுடையாய்" என்பதனால் ஸ்வாமித்வத்தையும், "என்னை ஆள்வானே" என்பதனால் ஸௌசீல்யத்தையும் "திருவேங்கடத்தானே" என்பதனால் ஸௌலப்யத்தையும் தெரிவிக்கிறார்.

ஞானசக்திகளைப் போன்றே பிராப்தியும், பூர்த்தியும் சேதனனுடைய காரியம் செய்வதற்கு வேண்டற்பாலனவாகும்.

''ப்ராப்தி'' என்பது அடைய வேண்டியது. பூர்த்தி என்பது வேண்டுவனயாவும் நிறைந்திருக்கை. (நாம் ப்ரபத்தி பண்ணுவதற்கு தேவையான குண பூர்த்தி நிறைந்திருக்கை). எம்பெருமானுக்கு இக்குணங்கள் உதவும் வகை எப்படி? எனப் பகருகிறார் தனது அடுத்த சூத்திரத்தில்,

''குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யஞ் செய்யும் என்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வங் கண்டகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக் கைக்கு ஜ்ஞான சக்திகள்.'' (முமுக்ஷுப்படி - 138)

சேதனனுடைய குற்றங்களையும், போக்கியமாய் கொள்ளும் ''வாத்ஸல்யம்'' எம்பெருமானைப்பற்ற வேண்டு மென்னும் நினைப்புடன் நிற்கும் சேதனன் தன் குற்றங்களைக் கண்டு அஞ்சாமைக்குக் காரணமாய் உள்ளது. உயிர்களுக்கு ஏற்படும் நஷ்டமும் இலாபமுந் தன்னைச் சார்ந்தனவாய்க் கொள்ளுதற்கு இடந்தந்து நிற்கும் ''ஸ்வாமித்வம்'', சேதனன் இறைவன் நம் காரியத்தைச் செய்வானோ, செய்யானோ! என்னும் ஐயத்தைக் கொள்ளாது ''அவன் நமக்கு வேண்டியவைகளை கட்டாயம் செய்தே முடிப்பன்!'' என்னும் நம்பிக்கை பெறுதற்குப் பயன்படுகிறது.

தாழ்ந்தவர்களோடும் யாதொரு வேறுபாடுமின்றிக் கலந்து உறவாடும் ஸௌசீல்யம், நித்தியவிபூதி, லீலாவிபூதி ஆகிய இரண்டிற்கும், உரியனாயிருக்கும் எம்பெருமானின் பெருமை யை (காக்கும் தலைமை நிலையை) நோக்கிச் சேதனன் தனது தாழ்ச்சியை எண்ணி அகலாதிருத்தற்கு உதவி புரிகிறது.

எல்லோருடைய கண்களுக்கும் தன் வடிவை புலப்படுமாறு செய்யும் ''ஸௌலப்யம்'', சேதனன் ''எம்பெருமான் நம் ஊனக்கண்களுக்குத் தோன்றுகின்றவன் அல்லன்'', எனப்

பின்னடையாமல் அவனைக் கண்ணாலே கண்டு பற்றுதற்கு நலமளிக்கிறது.

எல்லா பொருள்களின் எல்லா நிலைகளையும் அறியும் எம்பெருமானுடைய "ஞானம்" சேதனனுக்குப் போக்க வேண்டிய பாவங்களையும் ஈய வேண்டிய நலங்களையும் அறிகைக்கு வேண்டியதாக (கூடாரை வெல்லும் சீராக) உள்ளது.

போக்க வேண்டுவனவற்றைப் போக்கி தர வேண்டு வனவற்றை தருவதற்கு இன்றியமையாதது "சக்தி"ஜீவாத்மா அன்போடு புரியும் அடிமைத் தொழிலை ஏற்றுக் கொள்ளும் போது, அங்ஙனம் ஏற்றுக் கொள்ளுவதற்குக் காரணமாயுள்ளது சேஷத்துவத் தொடர்பு என்னும் பிராப்தி.

எல்லா நலங்களையும் தருவதற்கு உறுப்பாயுள்ளது நிறைவு, அதுவே பூர்த்தியாகும்.

மேற்கூறிய குணங்கள் எட்டினுள், முன்னுள்ள நான்கும், சேதனன் எம்பெருமானைப் பற்றுதற்கு பயன் அளிப்பவை. பின்னுள்ள நான்கும் சேதனன் இரட்சணத்திற்கு உதவி புரிவன.

சேதனன் எம்பெருமானைப் பற்றுதற்கு உதவி புரியும் நான்கு குணங்களுள், ஸௌலப்யமே தலை சிறந்ததாகும். ஏனெனில் சேதனன் எம்பெருமானை கண்ணால் காண்பதற்கு வசதி இருந்தாலன்றி பற்றுதல் உண்டாகாது. அதாவது இந்த அர்ச்சாவதாரம்தான், வேறு தேசமான பரத்வத்துக்கு இடமான பரமபதமும், வ்யூஹத்துக்கிடமான பாற்கடலும், இந்த தேகத்தால் காணமுடியாததாயும், கால வேறுபாட்டாலே இப்போது நாம் காண முடியாதபடிபோன, இராமன், கண்ணன் முதலான விபவாவதாரங்கள் போலல்லாமல், நமக்கு அருகாமையில் நாம் காணலாம்படி திவ்யதேசங்களிலும், இல்லங்களிலும் என்றும் இருப்பது அர்ச்சாவதாரம்.

பகவான் நம் இருதயத்திலேயே இருப்பினும், அவனைப் பற்ற வேண்டுமென்னும் விருப்பமுண்டாகில், அவ்விருப்புக்கள் கட்புலனுக்குத் தோன்றாமையினால் பயன் இல்லை. நீர் வேட்கையுற்றவன், மிக்க தொலைவு சென்று பருக வேண்டாத வாறு தான் நிற்கும் நிலத்தின் அடியிலேயே நீர் இருப்பினும், அந்நீர் அவ்வமயம் பருகுதற்குப் பயன் படாதது போன்றுள்ளது. லீலாவிபூதியைக் கடந்து இருக்கும் பரமபதம், இவ்வண்டத் துக்குப் புறம்பே இருக்கும் ஆவரண நீர் போன்றுள்ளது. (இவ்வண்டத்திலேயே இருக்கும் வ்யூஹம் ஒருவராலும் காணமுடியாத பாற்கடல் போன்றுள்ளது.) அர்ச்சாவதாரமோ, இவைகளைப் போன்றல்லாமல், கால தேசங்களின் வேறு பாடில்லாமல், சந்நிதிகளிலும் இல்லங்களிலும் என்றும் ஒரு படித்தாய் அனைவருடைய கண்களுக்கும் புலனாகுமாறு காட்சியளித்துக்கொண்டு, நீர் விடாய் கொண்டவன் அவ்விடாய் தணியுமாறு பருகுதற்கேற்பப் பெருக்காற்றில் தேங்கிய மடுக்கள் போன்றுள்ளது. ஆதலின் இவற்றுள் அர்ச்சையே சேதனருக்கு நலமளிப்பதெனக் கொள்ள வேண்டும்.

முதலில் குறித்த குணங்கள் யாவற்றையும் அர்ச்சையில் காண இயலுமா? எனில் இந்த குணங்களை ஆழ்வார் அநுபவித்தது "அகலகில்லேன்" பாசுரத்திலன்றோ !.

"இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் ப்க்கலிலே காணலாம்".(முமுக்ஷு.141) மேற்கூறிய முறையில் உள்ள வாத்ஸல்யம் முதலிய குணங்கள், ஞானம் முதலிய குணங்கள் ஆகிய இவை யாவற்றையும் காணவேண்டுமென்னும் விருப்பங்கொண்ட நாம் நம்பெருமாள் பக்கலிலே காணலாம்.

இங்கு நம்பெருமாள் என்பது எந்த பெருமாளைக் குறிக்கும் எனில்? மணவாளமாமுனிகள் நம்பெருமாள் என்னும் சொல், திருவரங்கம் பெரியகோயிலில் எழுந்தருளியுள்ள நம்பெருமாளைக் காட்டும் எனப் பொருள்கொள்ளாமல்,

நம்முடைய பெருமாள் எனக்காரணக் குறியாய்ப் பொருள் செய்துள்ளார். இவர் இங்ஙனம் பொருள் படுத்தியதற்குக் காரணம், வெவ்வேறு தேசங்களிலும் இல்லங்களிலும் எழுந்தருளியிருக்கும் அர்ச்சையில் ஈடுபட்டிருப்பவரும், முற்கூறிய குணங்களை அவரவர் விரும்பிய அந்தந்த அர்ச்சையில் காணலாமென்பதைத் தெரிவித்தற்காகவே ஆகும். மேலும் பெருமாளிடம் இக்குணங்களைப் பிரகாசிக்கச் செய்கின்றவற்றைச் சொல்லி, அவற்றுடன் நிற்கும் நிலையே நமக்குத் தஞ்சம் என்கிறார்.'

"திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்தஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸநபத்மத்திலே யழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்". - (முமுக்ஷுப்படி - 142.)

அர்ச்சையில் சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையனா யிருத்தலை நாம் காண்கின்றோம். இங்ஙனம் ஆயுதங்களை எப்போதும் தாங்கிக் கொண்டிருத்தல் வன்மை வாய்ந்த வீரனுடைய காரியமாகும். தன்னை வந்தடைந்த பக்தர்களின் விரோதிகளைப் போக்குதற்கு இப்படைகள் பயன்படுகின்றன. இவ்வாயுதங்களைத் தாங்கும் வன்மை மட்டும் இருந்தால் போதாது. விரோதிகளையும் அவற்றைப் போக்கும் முறைகளையும் அறிபவனாய் இருத்தல் வேண்டும். இங்ஙனம் இவ்விஷயத்தை உற்று நோக்குங்கால், தன்னைப் பற்றிய சேதனனுடைய காரியத்தைச் செய்யும் போது பயன் படுபவையான ஞான சக்திகளுக்குப் பிரகாசகங்கள் திவ்ய ஆயுதங்கள் என்பது தெரிகிறது.

சேதனர், அகலாதிருத்தற் பொருட்டே, அவருடைய திருக்கரம் அபய முத்திரையுடன் சேவை அளிக்கின்றது. இஃது உங்கள் குற்றங்களை நினைத்து நீங்கள் அஞ்ச வேண்டா; என்னை வந்தடையுங்கள். யான் உங்களை அங்கீகரித்துக்

கொள்ளுவேன் என்னும் அன்பைக் காட்டும் வாத்ஸல்யத்தின் அறிகுறியாகும். எம்பெருமான் சிரசில் கவிழ்த்திருக்கும் இரத்தினமுடி, அவன் எல்லா உலகங்களுக்கும் ஸ்வாமியாய் இருத்தலை அறிவிப்பதாகும். அன்பர்களை காணுங்கால். எம்பெருமானுக்கு உண்டாகும் முகமலர்ச்சியும், புன்சிரிப்பும் அவர்களோடு புரையறக் கலக்கும் சீலத்தைத் தெரிவிக்கும். ஆசனபதுமத்தில் அழுந்தி நிற்கும் எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளும், அனைவரும் பற்றுதற்கு இடந்தந்து நிற்கின்றன. இத்தன்மையானது ஸௌலப்யத்தை வெளிப் படுத்துகின்றது. எம்பெருமானை உபாயமாய்ப் பற்றியிருப் பவன், (உபாயாதிகாரி) எம்பெருமானை பயனாகக் கருதியிருப்பவன் (உபேயாதிகாரி) என இரு திறத்தினருக்கும் வேண்டுவனவாகிய தன்மைகள் இரண்டும், இச்சூத்திரத்தில் கூறுகிறபடியே நிற்கிற எம்பெருமானுடைய திருமேனியிலே தோன்றும் எனக் கூறுகிறார்.

"ரக்ஷகத்வ போக்யத்வங்களிரண்டும் திருமேனியில் தோன்றும்" முமுக்ஷுப்படி - 143. பிரபன்னன் விரும்பும் இரட்சகத்தன்மையும், கைங்கரியபரன் விரும்பும் போக்கியத் தன்மையும் அர்ச்சையாகும் திவ்வியமங்கள விக்கிரகத்தில் காணப்படும்.

எம்பெருமான் அர்ச்சையில் அஞ்சல் என்ற திருக்கரமும், முகமும், முறுவலும், தாமரை இருக்கையில் அழுத்தின திருவடிகளும் ஆகிய ஒவ்வொன்றும் அழகு நிறைந்திருப்பதால் இவனுடைய போக்கியத்தன்மை ஏற்படுகின்றது.

எம்பெருமானை ஸேவிக்கும்போது எல்லாம், திரும்ப திரும்ப பார்க்கத் தூண்டும் மகிழ்ச்சியை ஏற்படுத்துகிறது.

முடிச்சோதியாய் உனது முகச்சோதிமலர்ந்ததுவோ?*
அடிச்சோதிநீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ? *
படிச்சோதியாடையொடும் பல்கலனாய் * நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ? திருமாலே! கட்டுரையே.

(திருவாய்மொழி 3-1-1)

எம்பெருமானுடைய மிக்க பேரழகையும், ஆபரணங்களோடு கூடிய அழகையும் கண்டு அநுபவித்து மகிழ்கிறார். உனது திருமுக மண்டலத்தின் ஒளியானது உயர் முகமாய் வளர்ந்து திருவபிஷேக ஒளியாய், விரிவடைந்ததோ? உனது திருவடிகளின் பேரொளியானது நீ எழுந்தருளியிருக்கும் தாமரை பீடமாய் பரவிற்றோ? உனது விசாலமாயும், பொன்னிறமாயும் உள்ள திருவரையின் பீதாம்பரம் என்ன? பல வகைப்பட்ட ஆபரணங்களின் அழகு என்ன? ஆகிய இவைகளுடன் ஒன்றோடு ஒன்று கலந்ததுவோ? அடியேனுக்குத் தெளிய அருளிச் செய்ய வேண்டும் என்கிறார் ஆழ்வார்.

முமுக்ஷுப்படியில் 136ஆம் சூத்திரத்திலிருந்து 143ஆம் சூத்திரம் வரையிலும், எம்பெருமானின் ஒளிர்கின்ற குணங்களைக் கூறுகின்றன. இவைகள் சேதனருக்கு உதவி புரியும் முறையும், இக்குணங்களுள் சேதனன் கண்ணால் கண்டு பற்றுதற்கு இடமாயும் உள்ள ஸௌலப்யமே சிறந்தது என்றும், அந்த ஸௌலப்யத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரமே என்றும், இந்த அர்ச்சாவதாரம், பரத்துவம், வியூஹம் முதலியன போலல்லாமல், நேராய் கண்டு பற்றுதற்கு இடமாய் இருக்கிறதென்னும், இக்குணங்கள் யாவற்றையும் திருவரங்கம் முதலிய திருப்பதிகளில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களிடம் காணலாமென்றும்; அவ்வர்ச்சையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களிடம் காணலாமென்றும்; அவ்வர்ச்சையில் எழுந்தருளியிருக்கும் நிலையே நமக்கு தஞ்சம் என்றும், இரட்சகத்துவம், போக்கியத்துவம் ஆகிய இரண்டும் பகவானுடைய திருமேனியில் தோன்றும் என்றும் கூறுகிறார் மணவாளமாமுனிகள்.

• • • • • • • • •

## 4. அர்ச்சாவதாரத்தில் ஆழ்வார்கள் ஈடுபாடு

மூன்று ரிஷிகள் கூடி ஒரு வ்யாகரண சாஸ்திரத்திற்குக் கர்த்தாக்களானாற்போலே, முதலாழ்வார் மூவரும் கூடி (பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்) மூன்று திருவந்தாதிகளாலே நிர்ணயித்த அர்த்தம் ஒன்றே என்பர் பெரியவாச்சான்பிள்ளை. முதலாழ்வாரான பொய்கையாழ்வார் "வையம் தகளியா" என்று நித்தியவிபூதியையும் அனுஸந்தித்துக் கொண்டு ப்ரபந்தத்தைக் தொடங்குகை யாலே அப்பரம் பொருள், உபயவிபூதிகளோடு கூடியவன் என நிலைநாட்டினார்.

இரண்டாமவரான பூதத்தாழ்வார் "ஞானச்சுடர் விளக் கேற்றினேன் நாரணற்கு" என்று தொடங்குகையாலே அப்பரம் பொருள் நாராயணனே என்று நிலைநாட்டினார். மூன்றாமவரான பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்குகை யாலே லக்ஷ்மி ஸம்பந்தத்தைக் காட்டிப் பரதத்வ நிர்ணயம் செய்தார்.

மூன்று திருவந்தாதிகளும் முறையே பரமாத்மாவைக் காண்பதாகிற பரபக்தியையும், அதன் முற்றிய நிலையாய் அவனோடு கூடி அனுபவிப்பதாகிற பரஜ்ஞாநத்தையும், அதன் முற்றிய நிலையாய், அவனை பிரியமுடியாமையாகிற பரமபக்தியையும், விளக்குகின்றன என்றும் நிர்வஹிப்பார்கள்.

முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலே மண்டியிருப்பர்கள் என்பது பூர்வாசார்யர்களின் நிர்ணயம், பொய்கையாழ்வார் மங்களாசாஸநம் செய்தருளிய திவ்ய தேசங்கள் ஆறு, இவர் இயற்றிய முதல் திருவந்தாதி (100) நூறு பாசுரங்கள் கொண்டது.

பூதத்தாழ்வார் மங்களாசாஸநம் செய்தருளிய திவ்ய தேசங்கள் பதின்மூன்று. இவரது இரண்டாம் திருவந்தாதி (100) நூறு பாசுரங்களைக் கொண்டது.

பேயாழ்வார் மங்களாசாஸநம் செய்தருளிய திவ்ய தேசங்கள் பதினைந்து. இவரது மூன்றாம் திருவந்தாதி நூறு (100) பாசுரங்களை கொண்டது.

**பொய்கையாழ்வார்**

இவ்வாழ்வார் மங்களாசாஸநம் செய்த திருவேங்கட பாசுரம்

**உணர்வாரார்உன் பெருமை? ஊழி தோறூழி *
உணர்வாரார்உன்னுருவந்தன்னை * – உணர்வாரார்?
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்!*நால்வேதப்
பண்ணகத்தாய்! நீகிடந்தபால்.**

(முதல் திருவந்தாதி - 68)

எம்பெருமானை அளவிட்டு அறிவார் எவருமில்லை என்கிறார். ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருப்பவனே! இவ்வுலகிலும் அவதரித்தவனே! திருவேங்கடமலையிலும் நிற்பவனே! ஸ்வரத்தை பிரதானமாக உடைய நாலு வேதங்களிலும் விளங்குபவனே! உன்னுடைய மேன்மையை அறியவல்லவர் யார்? கல்பங்கள் தோறும் ஆராய்ந்தாலும் உன்னுடைய ஸ்வரூபத்தையும், ரூபத்தையும், யார் அறிய முடியும் என பொய்கையாழ்வார் திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் வேங்கடவனை மங்களாசாஸனம் செய்கிறார்.

எல்லோருக்கும் ஸர்வஸஹிஷ்ணுவாய், அர்ச்சக பராதீனமான ஸ்வரூப ரூப குண விபூதிகளையுடையவனாய் விண்ணோர்க்கும், மண்ணோர்க்கும் பொதுவானவனாய் மேன்மை நீர்மை இவைகள் இரண்டும் வெள்ளமிட வேங்கடத்திலே நீ நிற்கும் பெருமையை யாரால் தான் அறிய முடியும்.

“ஹ்ருத யாலுமி: சீலாத் ஜடீ பூயதே” (ர-ஸ்த) என்கிறபடியே நெஞ்சுடையார் இந்த ஸௌசீல்யத்தைக் கண்டு மோஹத்தை அடைகிறார்கள். இவ்வாறாக திருவேங்கடமலை

யில் எழுந்தருளியிருக்கும் வேங்கடவனை மங்களாசாஸநம் செய்கிறார் பூதத்தாழ்வார்.

**அத்தியூரான் புள்ளையூர்வான் *அணிமணியின்**
**துத்திசேர் நாகத்தின்மேல்துயில்வான் * – முத்தீ**
**மறையாவான் மாகடல்நஞ்சுண்டான்தனக்கும் ***
**இறையாவான் எங்கள்பிரான்.**

(இரண்டாம் திருவந்தாதி - 96)

"**ஆதிராஜ்யமதிகம் புவநாநாம் ஈஶ தே பிஶுநயந் கில மௌலி:**" (வரதராஜஸ்தவம் - 25)

எம்பெருமானே! உன் கிரீடமே நீ எல்லா உலகங்களுக்கும் சக்ரவர்த்தி என்று காட்டித் தருகின்றதோ! என்கிறபடியே திருவத்தியூரில் நின்ற நிலையிலிருந்தும் இவனே வேதஸ்வரூபனான கருடனை வாஹனமாகக் கொண்டதால் இவனே ஸர்வேஶ்வரன் என விளங்குகிறது. எத்தனையோ திவ்ய தேசங்களில் எம்பெருமான் புள்ளையூர்ந்தாலும் அத்தியூரான் புள்ளையூர்ந்து நடத்தும் உத்ஸவமே இவ்வாழ்வார் மங்களாசாஸந பலத்தாலே உலகமேத்த நின்றது.

புள்ளையூர்வான்... நாகத்தின் மேல் துயில்வான் என்று நித்தியஸூரிகளில் தலைவரான திருவடியையும் திருவனந்தாழ்வானையும் சொல்லுகையாலே நித்தியவிபூதியை உடையவன் என்று சொல்லப்பட்டதாயிற்று.

"மாகடல் நஞ்சுண்டான்" என்று ஸம்ஸாரிகளில் தலைவனான உருத்திரனைச் சொல்லி அவனுக்கும் இறைவன் என்கையாலே லீலாவிபூதியை உடையவன் என்று சொல்லப் பட்டதாயிற்று. இரண்டுக்குமிடையில் "மறையாவான்" என்று சொன்னதாலே, இப்படி உபய விபூதிகளை உடையவனாக வேதமே இவனைச் சொல்லுகிறது என்று உணர்த்தப்பட்டது. இப்படி உபய விபூதிகளையும் உடையவனாய் வேதாந்தங்களில் அறிவிக்கப்படுபவன் தன் பெருமை பாராமல் எங்களை விஷயீகரிக்கைக்காகத் திருவத்தியூருக்கு எழுந்தருளினான் என்கிறார்.

எங்கள் பிரான் அத்தியூரான் இப்படியாகப் பெரியவனா யிருப்பவனன்றோ எங்களுக்கு உபகரிப்பதற்காகத் திருவத்தியூருக்கு எழுந்தருளினான், "எங்கள்" என்று "கேசவன் தமர் கீழ் மேல் எமர் ஏழேழு பிறப்பும்" (திருவாய் 2-7-1) என்னும்படி ஸம்பந்தஸம்பந்திகள் அனைவரையும் சொல்லுகிறார். "என் நெஞ்சமேயான் என் சென்னியான்" என்று என்னை விரும்பிய தோடன்றியில் என்னோடு நேரேயும் பரம்பரையாகவும் தொடர்பு பெற்றவர்கள் அனைவர்க்கும் உபகரிப்பதற்காகவே ஹஸ்தகிரியிலே எழுந்தருளினான் என்கிறார் பேயாழ்வார்.

அன்றிவ்வுலகம் அளந்த அசைவேகொல்? *
நின்றிருந்துவேளுக்கைநீள்நகர்வாய் * – அன்று
கிடந்தானைக் கேடில்சீரானை * முன்கஞ்சைக்
கடந்தானை நெஞ்சமே! காண்

(மூன்றாம் திருவந்தாதி - 34)

நாம் அபேக்ஷியாமலிருக்கும் போதே நம்முடைய தலைகளிலே தன் திருவடியை வைத்துத் திருவுலகளந் தருளிய அன்று, இவ்வுலகத்தை நின்று கொண்டே அளந்த சிரமத்தினால் தானோ வேளுக்கையிலே இருப்பதையும் திரு வெஃகாவாகிற பெரிய நகரத்தில் பள்ளி கொள்வதையும் செய்தான்? நீண்ட நேரம் நின்று கொண்டே காடும் மேடுமான இவ்வுலகை அளந்த சிரமம் போவதற்காகவே காஞ்சீபுரத்திலே வேளுக்கை யென்னும், திவ்ய தேசத்திலே வீற்றிருப்பதையும், திருவெஃகா என்னும் நீள்நகரிலே பள்ளி கொள்வதையும் செய்கிறானோ என்று பரிவு காட்டுகிறார்?.

"தாளால்உலகம்அளந்தஅசவேகொல்? *
வாளாகிடந்தருளும்வாய்திறவான் * – நீளோதம்
வந்தலைக்கும்மாமயிலை மாவல்லிக்கேணியான் *
ஐந்தலைவாய் நாகத்தணை"

(நான்முகன்.திரு.35)

நடந்தகால்கள்நொந்தவோ? நடுங்கஞாலம்ஏனமாய் *
இடந்தமெய்குலுங்கவோ? விலங்குமால்வரைச்சுரம் *
கடந்தகால்பரந்த காவிரிக்கரைக்குடந்தையுள் *
கிடந்தவாறு எழுந்திருந்துபேசு வாழிகேசனே!

(திருச்சந்த. 61)

கொடியார்மாடக் கோளூரகத்தும்புளிங்குடியும் *
மடியாதின்னே நீதுயில்மேவிமகிழ்ந்ததுதான் *
அடியாரல்லல்தவிர்த்த அசைவோ?அன்றேல் * இப்
படிதான்நீண்டுதாவிய அசைவோ?பணியாயே.

(திருவாய்மொழி 8-3-5)

என்று நம்மாழ்வாரும் இப்பாசுரத்தையே அடியொற்றிய பரிவு காட்டினார். "இருந்து கிடந்தானை" - இப்படித் திருப்பதிகளிலே களைப்பாற இருப்பதும் கிடப்பதும் செய்தவனை. "கேடில்சீரானை" - குற்றமற்றவையாய், அழிவில்லாதவையான கல்யாண குணங்களை உடையவனை, "முன் கஞ்சனைக் கடந்தானை - முன் பொருநாளிலே தன்னைப் பல வழிகளிலே கொல்லப் பார்த்த தீய புத்திக் கஞ்சனை அழித்து, அவன் நிலையை அவனுக்கேயாம்படி செய்து தன்னை நமக்கு உபகரித்தவனை, "நெஞ்சமே காண்" - நெஞ்சமே !இப்படி பரிவோடு அநுஸந்திக்கப்பார் என இவ்வாறாக பேயாழ்வார் எம்பெருமானை மங்களாசாஸனம் செய்கிறார்.

**திருமழிசையாழ்வார்:-** இவர் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் இரண்டு, நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம். இவருடைய திவ்யப்ரபந்தங்களின் ஸாரப்பொருள் பகவத் பரத்வத்தை நிர்த்தாரணம் செய்து பாஹ்ய,குத்ருஷ்டி மதங்களை நிரஸநம செய்வதிலே ஊற்றமுடையன வாயிருக்கும் இவருக்கு "உறையிலிடாதவர்" என்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், 'ஆசார்ய ஹ்ருதயத்தில்' திருநாமம் சாற்றினார். "வையம் தகளியா" (முதல் திருவ-1) என்றும், "அன்பே தகளியா"..... ஞானச் சுடர்விளக்கேற்றி னேன்

(இரண்.திருவ-2) என்றும் பொய்கை பூதத்தாழ்வார்கள் விளக்கேற்றிக்காட்ட 'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்' (மூன்றாம்-திருவ-1) என்று பேயாழ்வார் தாங்கள் எம்பெரு மானை அநுபவித்தபடிக்குப் பாசுரம் அருளிச்செய்தனர். முதலாழ்வார்களின் மூன்று திருவந்தாதிகளும் பகவதநுபவ பரமாயிருக்கும்.

இவர் அவ்வநுபவமாகிற பயிருக்குக் களைபிடுங்கு கிறார். தமது இரு திவ்யப்ரபந்தங்களாலும், பகவதனுபவத்திற் குக் களையாவது - இதர தேவதைகளிடத்தில் பரத்வ புத்தி பண்ணுகையேயாகும். இந்த களையிருந்தால் வைஷ்ணவப் பயிர் வளராதாகையால், "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று முதற்பாசுரம் தொடங்கி "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்" என்னும் கடைசி பாசுரம் வரையில் முதற்ப்ரபந்தமான நான்முகன் திருவந்தாதியிலும்,

"அன்று நான்முகற்பயந்த ஆதி தேவனல்லையே" - (திருச்சந்த - 5) "மூன்றிரண்டு கண்ணினானு முன்னையேத்த வல்லனே" - (திருச்சந்த - 7) என்று தொடங்கி "காணிலும்" - (திருச்சந்த-69) "குந்தமோடு" (70) "வண்டுலாவு" (71) "போதில்மங்கை" (72) "கேடில்சீர்" (108) "சலங்கலந்த" (113) என்பது ஈறாக சரம ப்ரபந்தமான, திருச்சந்த விருத்தத்திலும், ஐயம் திரிபற பகவத் பரத்வ நிர்ணயம் செய்தார்.

இவ்வாழ்வார் ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கு மஹோபகாரக ராவார். "தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது" - (நான்.முக.-63) என்று தம் காலக்ஷேப ப்ரகாரத்தை அநுஸந்திக்கும் இவ்வாழ் வாரின் அருளிச்செயல் நமக்குக் காலக்ஷேபத்திற்கு, (போது போக்கிற்கு) வழிகாட்டியாகத் கொள்ளத்தக்கது. திருக்குடந்தை யில் அரவணைமேல் பள்ளிகொண்டிருக்கும் ஆராவமுத னுடைய ஏரார் கோலத்தையும் கண்டு, அவ்வநுபவம் உள்ளடங் காமல்.

நடந்தகால்கள்நொந்தவோ? நடுங்கஞாலம்ஏனமாய் *
இடந்தமெய்குலுங்கவோ? விலங்குமால்வரைச்சுரம் *
கடந்தகால்பரந்த காவிரிக்கரைக்குடந்தையுள் *
கிடந்தவாறுஎழுந்திருந்துபேசு வாழிகேசனே!

(திருச்சந்த-61)

என்று விண்ணப்பம் செய்ய எம்பெருமானும் பக்த பரதந்த்ரனாகையாலே அர்ச்சாவதார ஸமாதியையும் கடந்து எழுந்திருக்கப்புக, ஆழ்வாரும் அந்த நீர்மைக்குத் தோற்று "வாழிகேசனே" என்று மங்களாசாஸனம் பண்ண, எம்பெருமானும் கிடந்தவாறு எழுந்திருக்க முற்பட்ட அந்த உத்தான சாயித்திருக்கோலத்துடனே ஸேவை ஸாதித்தருளினான்.

திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கும் ஆராவமுத எம்பெருமான், ஆழ்வார் அமுது செய்த ப்ரஸாதத்தையே அமுது செய்வது என்னும் நியமத்தை மேற்கொள்வதன் மூலம் தனது பக்த பாரதந்த்ரியத்தைக் காட்டியருளினான் என்றும், அதனாலேயே திருமழிசையாழ்வாருக்குத் திருமழிசைப்பிரான் என்றும், ஆராவமுதனுக்கு ஆராவமுதாழ்வார் என்றும் திருநாமங்கள் வழங்கி வருகின்றன என்றும் பெரியோர்கள் பணிப்பர்.

திருமழிசையாழ்வார் எம்பெருமானின் பெருமைகளை நினைத்து அநுபவித்து மகிழ்பவர். இவர் இவ்வுலகிலுள்ள மக்கள் எம்பெருமானை நினைக்காமல் இப்படித் துன்பப்படுகிறார்களே; இத்துன்பம் நீங்கி இன்பம் அடையவழியேது என்று சிந்தித்தார். சமண, பௌத்த நூல்களைக் கற்று, அதனால் மக்கள் மனம்மாறி ஸ்ரீமந்நாராயணனைத் தவிர மற்ற தெய்வங்களை நாடுவதே இவர்களின் துன்பத்திற்கு காரணம் என்பதை அறிந்து உலகோர் உண்மைப் பொருளை அறிந்து உய்யத் திருச்சந்தவிருத்தம் எனும் ப்ரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளினார்.

பகவானின் பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களில் அவன் காட்டிய பெருமைகளை வாசித்தும்

கேட்டும், அவனையே வணங்கி வழிபட்டும், பொழுது போக்கும் பாக்கியத்தை பகவான் எனக்குக் கொடுத் திருக்கிறானே! என்னே அவன் கருணை! என்று எம்பெருமானிடமிருந்து தாம் அடைந்த நற்பயன்களை திருச்சந்த விருத்தத்தில் பேசி மகிழ்கிறார்.

பூநிலாயஐந்துமாய்ப் புணற்கண்நின்றநான்குமாய் *
தீநிலாயமூன்றுமாய்ச் சிறந்தகாலிரண்டுமாய் *
மீநிலாயதொன்றுமாகி வேறுவேறுதன்மையாய் *
நீநிலாயவண்ணம்நின்னை யார்நினைக்கவல்லரே?
(திருச்சந்தவிருத்தம் -1)

எம்பெருமான் அண்டங்களுக்குக் காரணம். அவன் குணங்களோடு கூடிய நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம் என்கிற ஐந்து பூதங்களுக்கு அந்தராத்மா. அதனால் அவனே உலகுக்கு உபாதாந காரணம். வேதம் கற்ற மறையோர்க்குத் தவிர மற்றவர்களுக்கு இந்த அர்த்தம் நினைக்க முடியாது.

எம்பெருமானே! நீ பூமியில் உள்ள சப்தம், ஸ்பர்சம, ரூபம், ரஸம், கந்தம் என்கிற குணங்கள் ஐந்துமாயிருக்கிறாய்; இப்படி பஞ்ச பூதங்களும் அவற்றின் பூதங்களும் நீ இட்ட வழக்காக இருக்கின்றன. மேலும் நீ ஒன்றுக்கொன்று விலக்ஷணமான தேவாதி பதார்த்தங்களுக்கும், ஆத்மாவாய் இருக்கின்றாய். இப்படி உயிர்ப் பொருள்களுக்கும் (சித்) உயிரல்லாத பொருள்களுக்கும் (அசித்) ஆத்மாவாயிருந்தும், அவற்றின் குணங்களான ஞானமின்மை, துக்கம், பெருத்தல், சுருங்குதல் முதலியன உன்னை அடையாமலிருக்கும் தன்மையை நினைக்க வல்லவர் யார்? என ஆழ்வார் கூறுகிறார்.

## நம்மாழ்வார்

ஆழ்வார்கள் ரிஷிகள் போலத் தாமாக மிக முயன்று தத்துவ ஞானத்தைப் பெறவில்லை. எம்பெருமான் தானே வந்து தன்னைக் காட்டிக் கொடுக்கக் கண்டு, ஞான பக்தி விரக்திகளை எளிதில் பெற்றவர்கள் ஆழ்வார்கள்.

திருப்புளியாழ்வார் அடியிலே எழுந்தருளியிருக்கும் ஆழ்வாருக்கு பரவாஸுதேவனும், வ்யூஹமூர்த்திகளும், விபவமூர்த்திகளும், அந்தர்யாமி எம்பெருமானும், திவ்யதேசங் களில் எழுந்தருளியிக்கும் அர்ச்சாமூர்த்தி எம்பெருமான்களும், ஆழ்வாருடைய நெஞ்சென்னும் உட்கண்ணுக்கு ஸேவை ஸாதித்தார்கள். அவ்வெம் பெருமான்களுடைய ஸ்வரூப, ரூப, குண விபூதிகளை அவ்வநுபவத்தால் உண்டான ப்ரீதி உள்ளடங்காமல் வழிந்து, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நாலு திவ்யப் ப்ரபந்தங்களாக வெளிப்பட்டது.

இந்த ப்ரபந்தங்கள், சிலர்க்கு விலக்காக மறுக்கப்படுகிற வேதம் போலன்றி யாவர்க்கும் ஒருங்கே உதவும்படி ஸகல வேத வேதாந்த ரஹஸ்யார்த்தங்களைத் தமிழ்த் திவ்யப்ரபந்தங் களாக அருளிச்செய்தார்.

பிறந்தது முதல் இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபடாமல், தாய்ப்பாலும் குடிக்காமல், திருத்துழாய் மணத்தோடேயே முளைப்பது போலே எம்பெருமான் அருளிய மயர்வற்ற மதி நலங்களாகிற ஜ்ஞாந பக்திகளுடன், இவர் அவதரிக்கையாலே, "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" (கீதை 6-19) [வாஸுதேவனே பரமப்ராப்யமும், ப்ராபகமும், தாரகபோஷக போக்யங்களுமாவான். வேறு எதையும் விரும்பாது என்னையே பற்றுகின்றவனே மஹாத்மா; அவன் மிகவும் கிடைத்தற்கு அரியவன்] என்று கீதையில் கண்ணனாலும் கொண்டாடப் பட்டவர் இவரே என விளங்கும். இதனாலேயே இவர் ப்ரபந்நஜந கூடஸ்தராகவும், ஆழ்வார்களில் தலைவராகவும், மற்றை யாழ்வார்களை அவயவங்களாகக் கொண்டவ ராகவும், முன்னோர்களால் கொண்டாடப்படுகிறார்.

இங்ஙனம் உருவகப்படுத்தும் இடத்தில் நம்மாழ்வாருக்கு, பூதத்தாழ்வாரைத் திருமுடியாகவும், பொய்கை பேயாழ்வார் களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை திருமுகமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும்

திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும், தொண்டரடிப் பொடியாழ்வாரை திருமார்பாகவும், திருமங்கையாழ்வாரை கொப்பூழாகவும், மதுரகவியாழ்வாரைத் திருவடியாகவும் உரைத்தனர். எம்பெருமானரைத் திருவடி நிலைகள் என்னும் பாதுகையாகவும் வழங்குவது மரபு. இப்படி ஒப்புயர்வற்ற இவ்வாழ்வார் எம்பெருமானுடைய திருவடிநிலையாகவே இருப்பது பற்றி எல்லா விஷ்ணு ஆலயங்களிலும் பெருமாளுடைய பாதுகை "சடாரி" என்றும் "சடகோபன்" என்றும் வழங்கப்படுகிறது.

இனி இவருடைய திவ்யப்ரபந்தங்களின் பொருள் சுருக்கமாக விவரிக்கப்படுகிறது. இவருடைய திவ்யப்ரபந்தங்கள் நாலுமே ரஹஸ்யத்ரய விவரணமாகவும், அர்த்த பஞ்சக விவரணமாகவும் இருப்பதால் "தமிழ் வேதம்" என்று குலாவப் படுகின்றன. முதல் ப்ரபந்தமான "திருவிருத்தம்" அடியேன் செய்யும் விண்ணப்பமே என்று சேஷத்வ ஸ்வரூபத்தை விளக்கிக் கொண்டு தொடங்கி, அதை விசேஷமாக விளக்கிக் கொண்டு சென்று "ஞானப் பிரானையல்லால் இல்லை" நான் கண்ட நல்லதுவே என்று உபாயம் எம்பெருமானே என்று நிஷ்கர்ஷித்துத் தலைக் கட்டுகையால், முதல் ரஹஸ்யமான திருவஷ்டாக்ஷரத்தில் ஸ்வரூபத்தை விளக்கும் முதல் பதமான பரணவத்தையும், உபாயத்தை நிஷ்கர்ஷிக்கும் இரண்டாவது பதமான நமஸ்சப்தத்தையும் விவரிப்பதாகிறது.

இரண்டாவது ப்ரபந்தமான திருவாசிரியம் "செக்கர்மா முகிலுடுத்து" என்று தொடங்கி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதிகளையும் "நேரிய காதல் அன்பில் இன்பீன் தேறல் அமுதவெள்ளம்" (2) என்று ஸ்வயம் ப்ரயோஜந பக்தியையும் "தனிமாத்தெய்வத்தடியவர்க்கு இனி நாம் ஆளாகவே இசையுங்கொல்" (3) என்று சரமபர்வமான பாகவதர்கள் விஷயத்தில் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்தத்தையும், "ஊழிதோறூழியோவாது வாழிய வென்று யாம் தொழ இசையுங்கொல் மாயக்கடவுள் மாமுதல் அடியே "(4) என்று

ப்ரதம பர்வமான எம்பெருமான் விஷயத்தில் மங்களா சாஸனமும், கைங்கர்யமுமாகிற புருஷார்த்தங்களையும், விரிவாக விளக்குகையாலே முதல் ரஹஸ்யமான திருமந்திரத்தில் புருஷார்த்தத்தை விளக்கும் மூன்றாவது பதமான நாராயணா என்னும் நலந்தரும் சொல்லை விவரிப்பதாகிறது. ஆக முதல் இரண்டு ப்ரபந்தங்களாலே முதல் ரஹஸ்யமான திருமந்திரம் விளக்கப் பட்டது.

மூன்றாவது ப்ரபந்தமான பெரியதிருவந்தாதி "நெறி காட்டி நீக்குதியோ"(6) "ஒருவரையே மாறாகக் காத்தானை" (19) "நாய் தந்து மோதாமல் நல்குவான்" (23) "மனத்தலை வன் துன்பத்தை மாற்றினேன், வானோர் இனத்தலைவன் கண்ண னால் யான்"(25) "நீங்காத மாகதியாம் வெந்நரகில் சேராமல் காப்பதற்கு நெஞ்சே! நீ செங்கண்மால் கதியா நினை" (46) "வெந்நரகில் சேராமல் காப்பதற்கு இல்லை காண் மற்றோரிறை" (60) நின்னன்றி மற்றிலேன் கண்டாய் எனதுயிர்க்கு ஓர் துணை (77) என்று பற்பல பாசுரங்களில், உபாயாந்தரங்கள் தன்னை விட்டு நீங்குவதற்காக அவனால் ஏற்படுத்தப்பட்டவை யாகையாலே கைவிடத்தக்கவை என்றும் அவனே உபாயம் என்றும், அவனை உபாயமாகக் கொண்டார்க் குப் பாபங்கள் பறந்தோடிப்போம் என்றும், அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப் ப்ராப்தியுமான இரண்டையும் தன் அடியார்க்குச் செய்யும் உபாயமாயிருக்கும், அவனைப் பற்றினார்க்கு வருத்தமில்லை என்றும் விரிவாகச் சொல்லுகை யாலே, இவ்வர்த்தங்களைச் சுருங்கச் சொல்லும் சரம ஸ்லோகத்தை விவரிக்கிறது.

நாலாவது ப்ரபந்தமான திருவாய்மொழி மந்த்ரரத்ன மானது, த்வயத்தை விவரிக்கிறது. "த்வயார்த்தம் தீர்க்க சரணா கதி என்றது ஸாரஸங்க்ரஹத்திலே" (ஆசார்ய ஹ்ருதயம்210) என்னும் ஆசார்ய ஹ்ருதயசூர்ணையிலும், அதற்கு மாமுனி கள் அருளிய வ்யாக்யாநத்திலும் திருவாய்மொழியானது பத்துப் பத்துக்களாலும், த்வயத்திலுள்ள பத்து அர்த்தங்களையும்,

விவரிக்கையாலே தீர்க்க சரணாகதியாய் இருப்பது என்று பிள்ளைலோகாசாரியர் "ஸாரஸங்க்ரஹம்" என்னும் ரஹஸ்யத் திலே விளக்கியருளினார் என்று காட்டப்பட்டது. ஆக இவ் வண்ணமாக, நம்மாழ்வார் அருளிய நாலு திவ்யப்ரபந்தங் களும் ரஹஸ்யத்ரய விவரணமாயிருக்கின்றன என்று விளங்குகிறது. முதல் மூன்று ப்ரபந்தங்களிலும் சுருக்கமாகச் சொல்லப்பட்ட அர்த்த பஞ்சகத்தையும், திருவாய்மொழியில் இருபது பதிகங்களாலே தெளிவாக்கி மற்ற எண்பது பதிகங் களாலே விஸ்தரிக்கிறார் என்கிற அர்த்தம் "மூன்றில் சுருக்கிய" (211) ஆசார்ய ஹ்ருதய சூர்ணையிலும், அதன் வ்யாக்யானங் களிலும் காணலாம். திருவாய்மொழியின் பத்துப் பத்துக் களிலும், 1. பரத்வம், 2. காரணத்வம், 3. வ்யாபகத்வம், 4. நியந்தருத்வம், 5. காருணிகத்வம், 6. சரண்யத்வம், 7. சக்த கத்வம், 8. ஸத்யகாமத்வம், 9. ஆபத்ஸகத்வம், 10. ஆர்த்தி ரத்வம் என்னும் குணங்களோடு கூடிய எம்பெருமான். எம்பெருமான் ஆழ்வாருக்குப் பிறப்பித்த நிலைகள் என்னெ ன்ன என்பதனை "பரத்வ காரணத்வ" (218) என்று தொடங்கும் ஆசார்ய ஹ்ருதய சூர்ணையில் காணலாம்.

திருவாய்மொழியின் முதல் வரியில் "உயர்வற உயர் நலம் உடையவன் எவனவன்"(1-1-1) என்கிறார். உயர் என்னுஞ் சொல்லுக்கே 'வருத்தமென்று' பொருள் உண்டு என்றும் உயர்வு என்பதற்கு அப்பொருளில்லை என்றும் கூறுவர் பூருவா சாரியர்களின் வ்யாக்கியானங்களில் இவ் வர்த்தம் உள்ளது.

கூரத்தாழ்வான் இம் முதலடியிலே மிகவும் ஈடுபட்டிருப் பராம். எம்பெருமானுக்குக் குணமில்லை, விபூதியில்லை என்கிற குத்ருஷ்டிகளின் மிடற்றைப பிடித்தாற்போல உபக்ரமத்தில் தானே "உயர்வற உயர்நலம் உடையவன்" என்ற அழகு என்னே! என்று உருகிப்போவாராம்.

பரசமயவாதிகள் பரப்ரஹ்மத்திற்குக் குணமென்பதே கிடையாது, அது நிர்க்குணம் என்று பிதற்றுகின்றார்களே, அவர்

களது மிடற்றைப் பிடித்தாற்போலே ஆழ்வார் முதலடியிலே உயர்வற உயர்நல முடையவன் என்ற படி என்னே! என்றாய்த்து மோஹித்து விழ்ந்தாராம் கூரத்தாழ்வார்.

இனி நம்மாழ்வார் அர்ச்சாவதாரத்தில் ஈடுபட்டதனை பார்க்கலாம். கைங்கர்யம் செய்வதற்குப் "பர", "வ்யூஹ" விபவங்களைக் காட்டிலும் "அர்ச்சாவதாரமே" எளிதென்று செய்யத் தாமரை பதிகத்தில் அருளிச்செய்கிறார்.

செய்யதாமரைக்கண்ணனாய் உலகேழும்உண்டஅவன்கண்டீர்*
வையம்வானம்மனிசர்தெய்வம் மற்றும்மற்றும்மற்றும்முற்றுமாய்*
செய்யசூழ்சுடர்ஞானமாய் வெளிப்பட்டிவைபடைத்தான்* பின்னும்
மொய்கொள்சோதியோடாயினான் ஒருமூவராகியமூர்த்தியே .

(திருவாய்மொழி3-6-1)

முதற் பத்தில் பத்துடையடியவர்க்கெளியவன் என்ற திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஸௌலப்ய குணம் பேசப்பட்டிருந்தாலும் இப்போது இங்கு பேசும் ஸௌலப்ய குணம் அதனிலும் விலக்ஷணமானது. அங்கு சொன்னது விபாவதார ஸௌலப்யம்; இங்கு சொல்வது அர்ச்சாவதார ஸௌலப்யம் இந்த வாசியை மணவாளமாமுனிகளும் நூற்றந்தாதியில் விளக்கியுள்ளார் "பத்துடையோர்க் கென்றும் பரனெளியனாம் பிறப்பால்" என்றதையும் "செய்ய பரத்துவ மாய்........"இந்நிலத்தில் அர்ச்சாவதாரம் எளிதென்றான் என்றும் கூறியுள்ளார்.

பகவத்விஷயத்தில் விமுகரானவர்களுங்கூட அபிமுகர் களாக வேணுமென்னும், ஆசையினால் உபதேசம் செய் கின்ற ஆழ்வாருடைய கருணையின் திறம் மிகவும் பாராட்டவுரியது.

இப்பதிகத்திற்கு உயிரான பாசுரம் "தஞ்சமாகிய தந்தை தாயொடு" என்பதாம். அர்ச்சாவதார எளிமையினை நிரூபிக்கும் பாசுரம் அதுவேயாம்.

**தஞ்சமாகியதந்தைதாயொடு தானுமாய்அவையல்லனாய் •**
**எஞ்சலில்அமரர்குலமுதல் மூவர்தம்முள்ளுமாதியை •**
**அஞ்சிநீருலகத்துள்ளீர்கள்! அவனிவனென்றுகூழேன்மின் •**
**நெஞ்சினால்நினைப்பான்யவன் அவனாகும்நீள்கடல்வண்ணனே.**

(திருவாய்மொழி 3-6-9)

எம்பெருமான் ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் இருப்பு எங்களுக்கு உபயோகப்படுவதன்று; ராம க்ருஷ்ணாதி அவதாரங்கள் பண்ணின காலத்தில் நாங்கள் அணுகியிருந்து வாழப் பெற்றிலோம்; ஆனபின்பு எங்ஙனே அவனைக் கண்டு ஆச்ரயிக்கும்படி? என்று ஸம்ஸாரிகள் வினவுவதாகக் கொண்டு அவர்களுக்கு உத்தரமுரைக்கிறார்.(மறுமொழி)

உலகத்தவர்களே! ரக்ஷிக்குந் தன்மை பொருந்திய தந்தையும், தாயுமாய் அவ்வளவோடும் நில்லாத ஸகலவித பந்துவுமாய் பகவதநுபவத்தில் குறைதல் இல்லாத நித்ய ஸூரிகளின் திரளுக்கு தலைவனாய், மும்மூர்த்திகளுள்ளும், முதல்வனான எம்பெருமானைக் குறித்து நீங்கள் மேன்மை கண்டு கலங்கி, எல்லை கடந்த மஹிமையையுடைய அந்த எம்பெருமான் வேறு, அர்ச்சாரூபியான எம்பெருமான் வேறு என்று கொண்டு கலங்கியிருக்க வேண்டா; நெஞ்சாலே நினைந்து உகந்தருள்விக்கப்பட்டவன் யவன் அவனே விசாலமான கடல் போன்ற நிறத்தையுடைய ஸர்வேச்வ ரனாவன்.

### தாத்பர்யம்

தாய் என்று தந்தை என்று நாம் என்று கருமம் காரணமாக ஆகியிருக்கிறோம். அவனோ நிருபாதிகமாகவே எல்லாம் ஆயினவன். ஆகையால் அவனை தஞ்சமாகிய தாயும், தந்தையும் நாமும் என்பதாம். இப்படிச் சொன்ன தல்லாத மற்றும் எல்லா உறவுமாய், இப்படியானவன் நித்ய சூரிகள் திரளுக்கு முதல்வனாய், பிரம, ருத்ர இந்திராதிகளுக்குக் காரணனாய் இப்படி எல்லாவற்றாலும் உயர்ந்த அவன் எங்கே? தாழ்ந்த நாம் எங்கே? என்று உலகத்தவரே அஞ்சாதீர். நீங்கள் உங்களுக்கு விருப்பமான ஏதேனும் ஒன்றால் ஏதேனும் ஒரு

திருமேனியாக்கிக் கொண்டு நீங்கள் சாத்தினது, பூசினது, உடுத்தது, நிவேதித்தது, உயர்ந்த தேனும் தாழ்ந்ததேனும் அதையிட்டுப் பாராமே அநந்யபாவனையோடு அடைவதையே விரும்பி ஏற்பான் என்கிறார். 'தந்தைதாய்' என்னாது 'தஞ்சமாகிய' என்று விசேஷித்துக் கூறியதற்கு இரண்டு வகையான கருத்து அருளிச்செய்கிறார்.

மாதாபிதாக்கள் தம் நலத்தையே கருதுகின்றவர் களாகையாலே தஞ்சமல்லர் என்பது ஒன்று; கர்மங் காரணமாக வந்த சம்பந்தமுடையவர்களாகையாலே அழிந்து போகின்ற வர்கள் என்பது மற்றொன்று.

பிராதாக்கள், புத்திரர்கள், மாதா பிதாக்கள் பிரஹ்ம ருத்ராதிகள் தொடக்கமானவர்கள் ரக்ஷகராகக் குறை என்? என்னில், பிராதாக்கள் (தமையன்மார்கள்) ரக்ஷகரல்லரென்னு மிடம் வாலிபக்கலிலும் இராவணன் பக்கலிலும் காணலாம்.

புத்திரர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் சிவன் பக்கலிலும், கஞ்சன் பக்கலிலும் காணலாம்.

மாதாபிதாக்கள் ரக்ஷகரல்லர் என்னுமிடம் கைகேயி பக்கலிலும் இரணியன் பக்கலிலும் காணலாம் (அஷ்டாதச ரஹஸ்யம் பிரபந்த பரித்ராணம்)

ஸர்வேபர்வரன் எல்லா ஆத்மாக்களுக்கும், அழிவற்ற தந்தையாய் இருக்கின்றான்; உலகத்தில் இருக்கிற எல்லாப் பிராணிகளுக்கும் திருமகள் கேள்வன் தந்தையும், தாயுமாய் இருக்கிறான்; என்கிறபடியே நெஞ்சினால் நினைப்பான் எவன்? அவன் நீள்கடல் வண்ணன் ஆகும். என்கிறார். நம்மாழ்வார் அருளிச்செய்த பாசுரங்கள் நான்கு நிலைகளில் அமைந்து ள்ளன.

| | |
|---|---|
| தாமான கூற்றுப் பதிகங்கள் | 73 |
| தலைவி கூற்றுப் பதிகங்கள் | 17 |
| தாய் கூற்றுப் பதிகங்கள் | 7 |
| தோழி கூற்றுப் பதிகங்கள் | 3 |
| **மொத்தப் பதிகங்கள்** | **100** |

நம்மாழ்வார் விரும்பிய புருஷார்த்தத்தை எம்பெருமான் தந்தருள இசையவும், இங்கே இவ்வுடம்புடனே பெற வேணும் என்று அவர் கேட்கிறார். எம்பெருமானும் இவர்க்குத் தெற்குத் திருமலையாகிய திருமாலிருஞ்சோலை மலையைக் காட்டு கிறான். உடனே ஆழ்வாரும் திருப்தியுற்றவராய், இனி அடிமைதான் வேணுமோ? திருமலைதானே எனக்கு மிகவும் வேண்டிய பயனும் இடமும் என்று கிளரொளி பதிகத்தில் அருளிச்செய்கிறார்.

தாம் கீழ் நிஷ்கர்ஷித்த புருஷார்த்தத்தைப் பெறும் பொருட்டுத் திருமாலிருஞ்சோலைமலையை ஆச்ரயிக்கும் படி பிறர்க்கு உபதேசிக்கிறார்.

**கிளரொளியிளமை கெடுவதன்முன்னம் ***
**வளரொளிமாயோன் மருவியகோயில் ***
**வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை ***
**தளர்விலராகில் சார்வதுசதிரே.**

(திருவாய்மொழி 2-10-1)

மேன்மேலும் கொழுந்துவிட்டுக் கிளர்கின்ற ஞான வொளியையுடைய இளம்பிராயம் அழிவதற்குள்ளே குன்றாத தேஜஸ்ஸையுடையவனான, எம்பெருமான் நித்திய ஸந்நி தானம் பண்ணியிருக்கிற ஆலயமாய் வளர்கின்ற இளஞ் சோலைகளால் சூழப்பட்டதான திருமாலிருஞ்சோலை மலை யை தளர்ச்சியில்லாதவராகி அடைவது தான் ஸ்வரூபாநு ரூபம்.

திருமாலிருஞ்சோலைமலையைச் சென்று சேர்வதே இவ்வாத்மாவுக்குப் பரம புருஷார்த்தம் என்கிறார். '**தஸ்மாத் பால்யே விவேகாத்மா யதேத ச்ரேயஸே ஸதா**' என்று நன்மைகளைப் பெறுவதற்கு இளம் பிராயத்திலேயே முயல வேண்டும் என்று சாஸ்த்ரங்கள் சொல்லுகையாலே, இளமை கெடுவதற்கு முன்னமே நன்மையை ஸம்பாதித்துக் கொள்ளப் பாருங்கள் என்கிறார். '**வாள்களாகி நாள்கள் செல்ல நோய்மை குன்றி மூப்பு எய்தி மாளும் நாள்**' என்று திருமழிசைப்பிரான்

அருளிச்செய்கிறபடி அந்த காலம் வந்து விட்டால், திருமலையை நினைக்கவும் நேராதாதலால் **கிளரொளி யிளமை** கெடுவதன் **முன்னம்** திருமாலிருஞ்சோலையை சார்வதுசதிர் என்கிறார்.

புத்திகொழுந்து விட்டுச் செல்லுவது இளம் பிராயத்திலே யாதலால் கிளரொளியிளமை எனப்பட்டது. விஷயாந்தர ப்ராவண்யம் விளைவதற்கு முன்னே! என்பதாகும்.

வளரிளம்பொழில் சூழ்மாலிருஞ்சோலை யென்பதைக் கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் அப்படியே மொழி பெயர்த்தருளியிருக்கின்றார்.

'வர்த்திஷ்ணு பாலத்ருமஷண்ட மண்டிதம் வநாசலம்' (வரதராஜஸ்தவம் 35) என்று கூறுகிறார். திருமாலிருஞ்சோலை நூற்றெட்டுத் திருப்பதிகளுள் பாண்டிநாட்டுத் திருப்பதி பதினெட்டில் ஒன்றும், 'வநகிரி' என்று வடமொழியிற் கூறப்படுவதும், கோயில் திருமலை, பெருமாள் கோயில், அழகர் திருமலை என்று சிறப்பாக எடுத்துக் கூறப்படுகிற நான்கு திருப்பதிகளுள் ஒன்றும், இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை என்னும் பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர் என்றபடி ஆன்றோர் கொண்டாடப் பெற்ற மகிமை உடையதுமான தொரு திவ்யதேசம்.

**தென்கொள்திசைக்குத்திலதமாய்நின்ற திருமாலிருஞ்சோலை**
**நங்கள்குன்றம்கைவிடான் நண்ணாஅசுரர்நலியவே.**

(திருவாய்மொழி 10-7-4)

தம்முடைய திருமேனியோடு திருமலையிலே சேர்ந்து பரிமாற அவனுக்குத் திருமலையிலுண்டான வேட்கையை அருளிச் செய்கிறார்.

**ஒருவனைப் பிடிக்க ஊரை வளைப்பாரைப் போல என்னைப்** பெறுகைக்காக என்கிறார் ஆழ்வார்.

தெற்கு திக்கிற்கு ஓர் ஆபரணமான திருமாலிருஞ் சோலை அடியார்கள் அனுபவிக்கும் மலை, "நங்கள் குன்றம்

கைவிடான் நன்கு என் உடலம் கைவிடான்'' திருமலையை பிராபகமாகவும், ஆழ்வார் திருமேனியைப் பிராப்பியமாகவும் நினைத்திரா நின்றான். உத்தேசியம் ஆழ்வார் திருமேனியாய் அது பெறுகைக்கு திருமலையில் நிற்கிறான்.

திருமலையில் நிலை இவர்க்காக ஆகில் ''நண்ணா அசுரர் நலியுமாறு'' எங்ஙனம் என்ன? அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

அசுரக் கூட்டம் முடிந்து போயிற்று என்றது சர்வேச்வரனுக்குத் திவ்யமங்கள விக்ரஹம் இல்லை; திருக்கல்யாண குணங்கள் இல்லை என்று இப்படிப்பிதற்றும் அசுரக் கூட்டம் எல்லாம் திருமாலிருஞ்சோலையில் எம்பெருமான் நின்ற நிலை கண்டவாறே தொலைந்தன; மேலும் எம்பெருமான் ஆழ்வார் திருமேனியில் பண்ணும் காதல் இப்படிப்பட்டது என்று அறிந்தவாறே, ஆழ்வாரிடத்தில் குறைகளை எண்ணு கின்ற அசுரக்கூட்டமும் அழிந்தது.

திருமலை சாதனமும், ஆழ்வார் திருமேனி சாத்தி யமும் என்னுமிடம் தோன்றப் பாசுரத்துக்கு அந்வயம் காட்டு கிறார்.

உலகும் உயிரும் தானேயாய், ஞாலத்தூடே நடந்து உழக்கி, தென்கொள் திசைக்குத் திலதமாய் நின்ற திருமாலிருஞ்சோலை நங்கள் குன்றம், நண்ணா அசுரர் நலியக்கைவிடான் நன்கு என் உடலம் கைவிடான், அம்மான் திருவருள்கள் என் கொல்? என்று கூட்ட வேண்டும்.

**நண்ணாஅசுரர்நலிவெய்த நல்லஅமரர்பொலிவெய்த ***
**எண்ணாதனகளெண்ணும் நன்முனிவர்இன்பம்தலைசிறப்ப ***
**பண்ணார்பாடலின்கவிகள் யானாய்த்தன்னைத்தான்பாடி ***
**தென்னாவென்னும் என்னம்மான் திருமாலிருஞ்சோலையானே.**

(திருவாய்மொழி 10-7-5)

வேதம் எம்பெருமானுடைய குணங்களைச் சொல்ல ஆரம் பித்து, மநுஷ்யாநந்தத்தைப்போன்ற ஆயிரக்கணக்கான மடங்கு

தேவாநந்தம் அதைப்போல் பன்மடங்கு ப்ரம்மாநந்தம் இதை மநுஷ்யாநந்தம் என்று வைத்து அதிலிருந்து படிப்படி யாக ப்ரும்மாநந்தம் வரைசொல்லி எவ்வளவுமுறை சொன்னாலும் உள்ள ஆநந்ததைச் சொல்ல முடியாமல் "யாதோவசோ நிவர்த்தந்தே" என்று தன்னுடைய இயலாமையை வெளியிட் டது. ஆழ்வார் திருமொழி ப்ரசாரமானதும், வேதமறிந்தவர்கள் அடாடா எம்பெருமானுக்கு இன்னும் சில குணங்களும், இன்னும் சில விபூதிகள் இருக்கப் பெற்றிலோமே என்று ஆழ்வார் பாசுரங்களின் பெருமையில் சூழ்ந்தனராம் எண்ணாதனகள் எண்ணினர் வேதத்தால் சொல்ல முடியாத இன்பத்தை ஆழ்வார் திருவாய்மொழியில் மட்டுமே சொல்ல முடிந்ததாம். திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்பு எம்பெருமானுக்குள்ள குண விபூதிகளைக் கூறுவதற்குத் தக்க பிரபந்தம் ஒன்று அவதரிக்க வில்லையே! என்று இழவு பட்ருந்தார்கள். திருவாய்மொழி அவதரித்த பின்பு அந்த இழவு தீர்ந்து எம்பெருமானுக்குக் குண விபூதிகள் போரா இன்னம் வேண்டும் என்று இழவு உற்றார்கள்.

தென்னாதெனா என்று பண்பொருந்தத் திருவாய்மொழியைப் பாடுவித்த அந்த பகவான் திருமாலிருஞ்சோலை மலையிலே உள்ளவன் ஆவான் திருவாய்மொழியென்றும், ஸ்ரீராமாயணம் என்றும் வலியன இரண்டு மகாபிரபந்தங்கள் உண்டாயிருக்க அத்தரிசனம் குலைந்ததாமோ என்று கூறினானாம் ஒருவன் அசுரர் நலிவு எய்த அமரர் பொலிவு எய்த முனிவர் இன்பம் தலை சிறப்பத் தன்னைத்தான் பாடித்தென்னா என்னும் என் அம்மான் திருமாலிருஞ்சோலை மலையானை, அவனுடைய உதாரகுணத்தை கால தத்துவமெல்லாம் கலந்து பருகினாலும் தெவிட்டுதல் உடையவனாவேனோ என்கிறார் நம்மாழ்வார்.

**குலசேகராழ்வார்**

எம்பெருமானுடைய அனந்தகல்யாணகுணங்களாகிய பெருங்கடலில் ஆழ்ந்து நெஞ்சுருகி ஈடுபட்ட இக்குலசேகராழ் வார் எம்பெருமானுடைய விபவாவதாரங்களில் ஸ்ரீராமவதார,

க்ருஷ்ணாவதாரங்களிடத்திலும், அர்ச்சா அவதாரங்களில் திருவரங்கம், திருவேங்கடம், திருக்கண்ணபுரம், திருச்சித்திர கூடம், திருவித்துவக்கோடு முதலான திவ்யதேசத்து எம்பெருமான்கள் இடத்திலும் ஆராதகாதல் கொண்டவராய், ஸ்ரீராமாயண காலக்ஷேபத்தையே எப்பொழுதும் பொழுது போக்காகப் பெற்றவராய் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் எதிர்கொண்டழைத்து வந்து விசேஷமாய் உபசரிக்கும் பாகவத நிஷ்டையை உடையவர்.

## பெருமாள்திருமொழியின் பொருள்:

பரமகாருணிகனான எம்பெருமான் மயர்வறமதிநலம் அருள, அந்த பக்திரூபமான ஞானத்தாலே அவனை அப்போதே காணவேணுமென்று விடாய் பிறக்க, பரமபதத்தில் சென்று அநுபவிக்கும் வரை ஆறியிருக்க இயலாமல், அங்குள்ள பரத்வத்திற்கு மேன்மைக்கு உறுப்பான குணங்களோடு, ஸௌலப்யத்திற்கு (எளிமைக்கு) உறுப்பான சீலம், நீர்மை முதலான குணங்களும், நிறைந்திருக்கும் திருவரங்கம் பெரியகோயிலுடையானை அநுபவிக்கப் பாரித்து, ராஜகார்யத்தாலும் பாகவத ததீயாராதனத்தாலும், தடைகள் உண்டாகையாலே அணியரங்கத்தில் பள்ளி கொள்ளும் கருமணியை அடியேன் கண்டு களிப்பது எந்நாளோ? என்று தம் ஆசையை வெளியிடுகிறார். முதல் திருமொழியில் எம்பெருமானிடம் ஈடுபட்டவர்களுக்குப் படிப்படியாக நேரக் கூடிய

(1) அநுகூல்ய ஸங்கல்பம்

(2) ப்ராதிகூல்ய வர்ஜநம்

(3) உடையவனான பரமன் நம்மை ரக்ஷிப்பான் என்னும் உறுதி (மஹாவிச்வாஸம்)

(4) அவனையே ரக்ஷகனாக மதிப்பது,

(5) அவனிடம் தன் ஆத்மாவை ஸமர்ப்பிப்பது, (ஆத்ம ஸமர்ப்பணம்)

(6) தன்னிடம் அவனை அடைய எந்த கைம்முதலும் இல்லாமையை விண்ணப்பிப்பது.

(1) ப்ரபன்ன ஸ்வபாவங்களில் பகவதாநுகூல்ய ஸங்கல்பம் ஏற்பட்டிருப்பதை "இருளிரிய" என்னும் முதல் திருமொழியிலே வெளிப்படுத்தினார்.

(2) அவனடியார்கள் விஷயத்தில் ஆநுகூல்யம் பிறந்த படியை "தேட்டரும்" என்னும் இரண்டாம் திருமொழியில் வெளிப்படுத்தினார்.

(3) எம்பெருமானிடம் ஈடுபாடு அவனடியார்களளவும் உண்டான பிறகு தேஹாத்மாபிமானிகள் (தேஹமே ஆத்மா என்றிருப்பவர்) விஷயப் பிரவணர் (விஷயங்களிலே மண்டியிருப்பார்) ஆகிய பிரதிகூலரோடு தமக்குத் தொடர்பு அற்றமையாகிற ப்ராதிகூல்ய வர்ஜனம் ஏற்பட்டது என்கிறார். "மெய்யில்" என்கிற மூன்றாம் திருமொழியில்.

(4) இப்படி பகவத் பாகவத விஷயத்திலே ஆநுகூல் யமும், ப்ரதிகூலரோடு பற்றற்றமையும் ஏற்பட்ட பின்பும், எம்பெருமானை அடையக் காணாமையாலே "நமக்கு மண்ணரசில் பற்று இருப்பதாக நினைத்து தன்னை அடைவிப்பதில் தாமதிக்கிறான் போலும்" என்று எண்ணி முதல் மூன்று திருமொழிகளில் அநுபவிக்கப்பட்ட அரங்கன் நிற்குமிடமான திருமலையிலே திருவேங்கடமுடையானிடம் தமக்கு இம்மண்ணரசிலும், வானாளும் செல்வத்திலும் பற்றின்மையை விண்ணப்பித்து, அவனுடைய திருமலையில் ஏதேனும் ஒருபொருளாகி அவன் பவளவாய் காண வேணும் என்னும் ஆசையை வெளிப்படுத்து கிறார். ஊனேறு என்னும் நாலாம் திருமொழியில்.

(5)இவ்வளவு பிறந்த பின்பும் பேறு கிட்டாமையாலே ஆகிஞ்சன்யம் (கைம்முதலில்லாமை) "அநந்யகதித்வம்" (வேறு எவரையும் புகலாகக்கொள்ளாமை) ஆகிற ஸ்வபாவங்கள் தமக்கு ஏற்பட்டிருக்கிறபடியைப் பலதிருஷ்டாந்தங்களைக் காட்டி, திருவித்துவக்கோட்டம்மான் திருவடிகளிலே விண்ணப் பம் செய்கிறார். "தருதுயரம்" என்னும் ஐந்தாம் திருமொழியில்.

(6) எம்பெருமானை அடையப்பெறாமையாலே துன்பத்தின் எல்லையை அடைந்து, பிராட்டிமார் நிலையைப் பெற்று, கூடுவது பிரிவது, ஊடுவதாம் படியாகி, மின்னிடை மடவாரில் நம்மாழ்வாரைப்போலவும் காதில் கடிப்பில் திருமங்கை ஆழ்வாரைப்போலவும், பாசுரம் அருளிச் செய்கிறார், "ஏர்மலர்" என்னும் ஆறாம் திருமொழியில்.

(7) "பகவத் விஷயத்தை அநாதிகாலமாக இழந்திருக்கிறோமே" என்கிற வருத்தம் தலையெடுக்கையாலே பிள்ளைப் பிராயத்தில் அநுபவங்களையெல்லாம் இழந்த தேவகி கம்ஸவதத்திற்குப் பின் கண்ணனைக் கண்டவுடன் தான் இழந்ததைஎல்லாம், சொல்லிப் புலம்பிய பாசுரத்தாலே, தான் அநாதிகாலமாக இழந்ததனால் ஏற்பட்ட வருத்தத்தை வெளிப் படுத்துகிறார். "ஆலைநீள்" என்னும் ஏழாம் திருமொழியில்.

(8) இவ்வாறு தேவகி பாவனையில் பாடிய பின்பு, ஸ்ரீகௌசல்யா பாவனையை அடைந்து, திருக்கண்ண புரத்திலே ஸ்ரீராமனுக்குத் தாலாட்டு பாடுகிறார், "மன்னுபுகழ்" என்னும் எட்டாம் திருமொழியில்.

(9) கௌசல்யா பாவனையில் இப்படி அநுபவித்த தசரத பாவனையை அடைந்தவராய் இளமையில் அநுபவித்த இராமனுடைய யௌவநப் பருவ வீர சரித்திரங்களை அநுபவிக்க முடியாதபடி நானே அவனைக் காட்டிற்கு ஓட்டும் படி ஆகி விட்டதே என்னும் தசரதன் புலம்பல் பாசுரத்தின் மூலம் தன் இழவைப் பேசுகிறார், "வண்தாளிணை" என்னும் ஒன்பதாம் திருமொழியில்.

(10) பிறந்த இழவுகள் எல்லாம் தீர சக்கரவர்த்தித் திருமகன் நித்யவாஸம் பண்ணுகிற திருச்சித்திர கூடமாகிற திருப்பதியிலே, திருவவதாரம் தொடங்கித் தன்னடி சோதிக்குச் சென்றது ஈறாக, ஸ்ரீவால்மீகி பகவான் பேசி அநுபவித்தாற் போலே தம்முடைய ஞானத் தெளிவாலே ஸம காலத்திற் போலே அநுபவித்துப் பிரபந்தத்தைத் தலைகட்டுகிறார், 'அங்கணெடுமதிள்' என்னும் பத்தாம் திருமொழியில்.

இப்படிச் சக்ரவர்த்தித் திருமகனாகிற பெருமாளிடமே தம் வாழ்க்கையிலும் ப்ரபந்தத்திலும் மிகுந்த ஈடுபாட்டைக் காட்டுகையாலே குலசேகரப் பெருமாள் என்று வழங்கப் படுபவரானார். எம்பெருமானுடைய கல்யாண குணங்கள் பரமபதத்திற் காட்டில் திருவரங்கம் பெரிய கோயிலில் இருட்டறையில் விளக்கு போல விளங்குகையாலே அக்கோயி லிலே அநுபவிக்க ஆசைக் கொண்டார். அழகியமணவாள னுடைய நித்யானுபவமும், அவ்விடத்துக் கைங்கர்யபரர் களோடு நித்யவாஸமும், தமக்கு விரைவில் கிடைக்குமாறு முதல் திருமொழியில் பிரார்த்திக்கிறார்.

**இருளிரியச்சுடர்மணிகள் இமைக்கும்நெற்றி**
**இனத்துத்தியணிபணம்ஆயிரங்களார்ந்த ***
**அரவரசப்பெருஞ்சோதி அனந்தனென்னும்**
**அணிவிளங்கும்உயர்வெள்ளையணையைமேவி ***
**திருவரங்கப்பெருநகருள்தெண்ணீர்ப்பொன்னி**
**திரைக்கையால்அடிவருடப்பள்ளிகொள்ளும் ***
**கருமணியைக்கோமளத்தைக்கண்டுகொண்டு என்**
**கண்ணிணைகள்என்றுகொலோகளிக்கும்நாளே?**
(பெருமாள் திருமொழி 1-1)

ஸ்ரீரங்கமென்னும் பெரிய நகரத்திலே இருளானது சிதறிப்போம்படி ஒளிவிடுகின்ற மணிகள் விளங்கா நிற்கப்பெற்ற நெற்றியையும், சிறந்த புள்ளியையும், அழகாகவுடைய ஆயிரம் படங்களைப் பூர்ணமாகவுடையவனாய், நாகங்களுக்குத் தலைவனாய், மிக்க தேஜஸ்ஸையுடைய திருவனந்தாழ்வா னாகிய, அழகு மிகுந்த உயரமான வெண்ணிறமான திருப் படுக்கையிலே பொருந்தி, தெளிந்த தீர்த்தத்தையுடைய காவேரியானது அலைகளாகிற கைகளாலே திருவடிகளைப் பிடிக்கத் திருக்கண் வளர்ந்தருளும் நீலரத்நம் போன்றவராய், ஸௌகுமார்யமே வடிவெடுத்தவரான பெரிய பெருமாளை என் கண்களானவை ஸேவிக்கப் பெற்று ஆநந்தம் அடையும் நாள் எந்நாளோ? என அனுபவிக்கிறார்.

குலசேகராழ்வார் ஸ்ரீரங்கநாதனை மூன்று திருமொழிகளில் அநுபவித்தார். 4ஆம் திருமொழியில் திருமலையோடு ஸம்பந்த முடைய யாதானுமொரு பிறப்பை ஆழ்வார் வேண்டுகிறார்.

**ஊனேறுசெல்வத்து உடற்பிறவியான்வேண்டேன் ***
**ஆனேறேழ்வென்றான் அடிமைத்திறமல்லால் ***
**கூனேறுசங்கமிடத்தான்தன் வேங்கடத்து ***
**கோனேரிவாழும் குருகாய் பிறப்பேனே.**

(பெருமாள் திருமொழி 4-1)

(நப்பின்னைப் பிராட்டியை மணம் புரிவதற்காக) பலம் பொருந்திய ஏழு எருதுகளையும், ஜயித்து எம்பெருமானுக்கு, அடிமை செய்வதையே விரும்புவதல்லால், (நாளுக்கு நாள்) மாம்ஸம் அதிகரிப்பதாகிற செல்வத்தையுடைய இம்மானிடப் பிறவியை யான், விரும்பமாட்டேன்: வளைந்திருக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, இடது திருக்கையிலே உடையவனான எம்பெருமானுடைய திருவேங்கடமலையில் புஷ்கரிணியில் நாரையாகவாவது பிறக்கக்கடவேன் என்கிறார்.

விரஜையைப்பற்றி அமாநவன் வசத்திலே வர்த்திக் குமாப்போலே, திருக்கோனேரியைப் பற்றி வர்த்திக்கும் குருகாய்பிறப்பேனென்கிறார்.

**செடியாயவல்வினைகள் தீர்க்கும்திருமாலே!**
**நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின்வாசல் ***
**அடியாரும்வானவரும் அரம்பையரும்கிடந்தியங்கும் ***
**படியாய்க்கிடந்து உன் பவளவாய்காண்பேனே.**

(பெருமாள் திருமொழி 4-9)

பாபபலமான, கொடிய ஸம்ஸார ஸம்பந்தத்தை போக்கியருள்கின்ற ஸ்ரீயபதியான எம்பெருமானே! ஆச்ரித பக்ஷபாதத்தில் எல்லை காண வொண்ணாதவனே! திருவேங்கட முடையானே! உன்னுடைய கோயிலின் வாசலிலே, அநந்ய ப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களும், ப்ரயோஜநாந்தர பரரான தேவர்களும், பிறர்க்கு அடிமை பூண்டுள்ள ரம்பை முதலிய

தேவஸ்த்ரீகளும், கூடி ஸஞ்சரிக்கப்பெறும் படியாய்க் கிடந்து உனது பவளம் போன்ற திருவதரத்தைக் காண்பேனாக என்கிறார்.

"படியாய்கிடந்துன் பவளவாய் காண்பேனே" என்று எம்பெருமானை அநுபவித்துக் கைங்கர்யம் செய்யும் போது தமக்கு ப்ரதாந போகமில்லை என்பதை "படியாய்க்கிடந்து" என்றும் அவனுக்கே ப்ரதாநபோகம் என்பதை "உன் பவளவாய்" என்றும், அவனுடைய போகத்தை வளர்ப்பதற் குறுப்பான அப்ரதான போகம் தமக்கு உண்டு என்பதனை "காண்பேனே" என்றும் ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்துத் திருவேங்கடமுடையானிடம் பிரார்த்திக்கையாலே பகவத் ஸந்நிதிகள் எல்லாவற்றிலும் எம்பெருமான் திருமுன்பேயுள்ள வாயிற் குலசேகரன்படி என்று வழங்கப்படுகிறது. ஆழ்வார் சேவிப்பதால் உண்டாகும் இன்பம் எம்பெருமானுக்கேயா தலால் நான் அசேதனம் போல் (படியாய்) காண்பேன். (இன்புறுவது உனக்கேயாகட்டும்)

அரசர், அரசர்கள், நான், எனது, என்று அஹங்கார மமகாரத்துடன் இருப்பவர்கள். ஆனால் குலசேகரர் தன் அரசகுலத்துக்கு மாறாக தமது செல்வத்தையும், அதிகாரத் தையும் வெறுத்தவர். பாகவத விஷயங்களில் அன்பும், ஆதரவும் கொண்டவர். ஜீவாத்மா, பரமாத்மாவுக்கு எல்லா விதத்திலும் அடிமைப்பட்டவன். பரமாத்மா அந்த ஜீவாத்மாவை வாழ்விப்பதற்கு எவ்விதத்திலும் கடமைப்பட்டவன். இதனை நன்கு அறிந்த ஆழ்வார் ஸ்ரீமந் நாராயணனையன்றித் தமக்கு வேறு சரணமி ல்லாமையை அநேக உதாரணங்கள் காட்டி ஸ்ரீ வித்துவக் கோட்டம்மான் முன்னிலையில் விண்ணப்பஞ் செய்கிறார்.

**தருதுயரம்தடாயேல் உன்சரணல்லால்சரணில்லை ***
**விரைகுழுவும்மலர்ப்பொழில்சூழ் விற்றுவக்கோட்டம்மானே !***
**அரிசினத்தால்ஈன்றதாய் அகற்றிடினும் * மற்றவள்தன்**
**அருள்நினைந்தேயழும் குழவியதுவேபோன்றிருந்தேனே.**

(பெருமாள் திருமொழி 5-1)

பரிமளம் மிக்குள்ள புஷ்பங்களையுடைய, சோலை களாலே சூழப்பட்ட, திருவித்துவக் கோட்டில் எழுந்தருளி யிருக்கிற ஸர்வேச்வரனே! நீயே தரும் ஸம்ஸாரமாகிய இந்த துக்கத்தை, போக்காவிட்டாலும், உன்னுடைய திருவடி களல்லது வேறு உபாயமில்லை; பெற்ற தாயானவள் அன்பையே எண்ணி, அழுகின்ற சிறு குழந்தையையே ஒத்திருந்தேன் என்கிறார் ஆழ்வார்.

**வெங்கண்திண்களிறடர்த்தாய்! விற்றுவக்கோட்டம்மானே!***
**எங்குப்போய்உய்கேன்? உன்னிணையடியேஅடையலல்லால் ***
**எங்கும்போய்க்கரைகாணாது எறிகடல்வாய்மீண்டேயும் ***
**வங்கத்தின்கூம்பேறும் மாப்பறவைபோன்றேனே.**

(பெருமாள் திருமொழி 5-5)

நடுக்கடலில் ஒரு பறவை அகப்பட்டுக் கொண்டது. எங்கும் தண்ணீர் கரையோ, காடோ, பாதையோ, தென்படவில்லை. அங்கு ஒரு கப்பல் வந்து கொண்டிருப்பது அதன் கண்ணில் பட்டது. விரைந்து பறந்து கப்பலைச் சுற்றி சுற்றி வந்தது. ஆயினும் அது நாடாகவோ, இடமாகவோ அதற்குப்படவில்லை. கப்பலை விடுத்துச் சற்றுத் தொலைவே சென்றது எங்கும் கடல் ஒன்றும் புரியவில்லை. மீண்டும் கப்பலை நோக்கி வந்தது. கப்பலின் உச்சியில் போய் மரக்கம்பத்தில்) மேலே உள்ள கூம்பு பகுதியை மீண்டும், மீண்டும் சுற்றி வந்தது. ஆம் அதற்கு வேறு வழியில்லை. அந்த நடுக்கடலில் கப்பலின் கூம்பை விட்டால் அதற்கு கதி இல்லை.

பயங்கரமான கண்ணையும் வலியநெஞ்சையுமுடைய குவலயாபீடமென்னும் யானையைக் கொன்றவனே! வித்துவக் கோட்டம்மானே! எம்பெருமானே! நின் திருவடியைப் புகலிடமாகக் கொண்ட நான் அதை விடுத்து எங்குபோய் உய்வேன். எங்கு போனாலும் எதைக்கண்டாலும் அவை யெல்லாம் நிலையற்றதாயும், பொருளற்றதாயும், போகிறதே கூம்பினை நாடிச் செல்லும் நடுக்கடல் பறவை போல மானிடக்

கடலில் சிக்கித் தவிக்கும் ஜீவாத்மாவாகிய நான் நின் திருவடியே சரணாகதியென்று புகாமல் வேறு எங்கு சென்று புகுவேன். வித்துவக் கோட்டம்மானே, நீயே எனக்குப் புகலிடமென்று நாட்டையும், அரச பதவியையும், தூக்கியெறிந்த குலசேகராழ்வார் வித்துவக் கோட்டம்மானிடம் சரண் புகுகிறார்.

**பெரியாழ்வார் :-**

பரம்பொருள் இன்னார் என்பதனை ஐயமற அறிந்து கொள்ள வல்லபதேவ பாண்டியன் கூட்டிய புலவர் பட்டி மண்டபத்தில், விஷ்ணு சித்தர் திருமால் அருளால், "மயர்வற மதிநலம்" அருளப்பெற்று, எல்லா வேத நூல்களாலும், திருமாலான ஸ்ரீமந் நாராயணனே பரதெய்வம் என்பதை நிர்ணயித்தவுடன், (வெற்றி கொள்பவருக்குப் பரிசாக) கல் தோரணத்தில் கட்டப்பட்டிருந்த பொற்கிழி, "இவருடைய வெற்றிபரம்பொருளாலும் இசையப்பெற்றது" என்று விளங்கும்படி இவர் முன்னே தானே தாழவளைந்து வந்தது.ஆழ்வாரும் எம்பெருமானுடைய கருணையைக்கண்டு உகந்து விரைந்து கிழியறுத்தான் என்று தனியனில் அநுஸந்திக்கப்பட்டபடியே, அந்த பொற்கிழியை அறுத்துக் கொண்டு அருளினார்.

இதனைக் கண்ட வித்வான்களும் அரசனும் மற்றவர் களும், வியப்புற்று இவர் திருவடிகளில் பணிந்து வணங்கினர். ஸ்ரீவல்லபதேவன் ஆழ்வாரை தன் பட்டத்து யானை மேல் ஏற்றி "வேதப் பயன் கொள்ளவல்ல விஷ்ணுசித்தர் வந்தார்". "மெய்ந்நாவன் வந்தார்" "மெய்யடியார் வந்தார்" முதலான விருதுகளை வழங்கினான். வித்வான்கள் அனைவரும் தங்களுக்கு விஷ்ணுசித்தரே தலைவர் என்பது தோற்றப் "பட்டர்பிரான்" என்று திருநாமம் சாத்திக் கொண்டாடிக்குடை, கொடி, சாமரம் திருஆலவட்டம் முதலானவற்றைத் தாங்களே பணிமாறிக் கொண்டு உடன் வந்தனர்.

இப்படி ஆழ்வார் நகர்வலம் வருகையில், மகனுடைய மஹோத்ஸவத்தைக் காணவரும் மாதா பிதாக்கள் போலே, கருடாரூடனாய், ஸ்ரீபூமிஸமேதனாய், ஸ்ரீமந்நாராயணன் பூமியிலுள்ள அனைவரும் காணும்படி ஆகாயத்திலே தோன்றினான்.

தம்முடைய உத்ஸவத்தைக் காண வந்த திருமாலைக் கண்ட ஆழ்வார் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் அந்த தேவாதி தேவனுடைய ஸர்வசக்தித்வம் முதலிய திருக்குணங்களை அநுஸந்திப்பதற்கு முன்னே ஸௌந்தர்ய, ஸௌகுமார்யங்களிற் கண் செலுத்தி அவற்றையே ஸேவித்து ஈடுபட்டு ஆழ்ந்து பக்தி பரவசராய், அதனால் தம்முடைய நிலைமையையும், எம்பெருமானுடைய நிலைமையையும் மறந்து "காலம் நடையாடாத பரமபதத்திலே இருக்கும் இப்பரமபுருஷன், காலம் நடையாடுகிற இந்த லோகத்தில் வந்து நிற்கிறானே, இவனுக்கு என்ன தீங்கு வருமோ!" என்று மிகவும் அஞ்சி, இந்த திவ்ய மங்கள விக்ரஹத்துக்கு எவ்விதமான அவத்யமும் நேரிடாதிருக்க வேணும் என்று "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பல கோடி நூறாயிரம்" என்று தொடங்கி, முதல் இரண்டு பாசுரங்களினால் மங்களாசாஸனம் செய்தார். இப்படித் தாம் ஒருவராகப் பல்லாண்டு பாடியதில் திருப்தி கொள்ளாமல் தம்மைப்போன்ற அநந்யப்ரயோஜனர் களைச் சேர்த்துக் கொண்டும், ஐஸ்வர்ய, கைவல்யார்த்தி களைத் திருத்திச் சேர்த்துக் கொண்டும், எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடியபடியை மேல் ஒன்பது பாசுரங்களாலே காட்டிப் பரமபதத்திலும், பல்லாண்டு பாடுவதே பரமபலமாகும் என்று பயன் சொல்லி "திருப்பல்லாண்டு" என்னும் திவ்யப்ரபந்தத்தை தலைக்கட்டினார். இவருடைய பொங்கும் பரிவைக் கண்ட எம்பெருமானும் இவருக்குப் "பெரியாழ்வார்" என்னும் பட்டம் சூட்டி மறைந்தருளினான். "பொங்கும் பரிவாலே வில்லிப்புத்தூர் பட்டர்பிரான் பெற்றான் 'பெரியாழ்வார்' என்னும் பெயர்".(உபதேசரத்தின மாலை - 18)

வல்லப தேவனுக்கு உபதேசித்து அவனைத் திருத்திப் பணிகொண்டு ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி, பொற்கிழி யிலுள்ள பெரும் தனத்தைக்கொண்டு, வடபெருங்கோயிலு டையானுக்கு அரிய பெரிய திருப்பணிகளைச் செய்வித்துத் தான் ஏற்கனவே செய்து வந்த திருநந்தவன கைங்கர்யத்தைத் திருமாலை செய்பவராய் தினந்தோறும் வடபெருங்கோயிலு டையானுக்குத் திருமாலை கட்டி ஸமர்ப்பித்து வந்தார். அப்போது தாம் மிகவும் ஈடுபட்ட க்ருஷ்ணவதாரத்தை, அவதாரம் தொடங்கி, பால்யலீலைகளை ஒன்றும் விடாமலும், மற்ற ஆனைத்தொழில்களையும், விஸ்தாரமாக அநுபவிக்கும் பெரியாழ்வார் திருமொழியை பாடினார்.

இப்படிக் கிருஷ்ண குண சேஷ்டிதங்களை யசோதா பாவனையிலே ஒன்று விடாமல் அநுபவிக்கையாலே "போகத்திலே வழுவாத புதுவையர்கோன்" என்று பெற்றெடுத்த பெண்பிள்ளையான ஆண்டாளாலும் புகழப் பெற்றார்.

**குற்றமின்றிக்குணம்பெருக்கிக் குருக்களுக்குஅனுகூலராய் ***
**செற்றமொன்றுமிலாத வண்கையினார்கள் வாழ்திருக்கோட்டியூர்***
**துற்றியேழுலகுண்ட தூமணிவண்ணன்தன்னைத்தொழாதவர் ***
**பெற்றதாயர்வயிற்றினைப் பெருநோய்செய்வான்பிறந்தார்களே.**
**(பெரியாழ்வார் திருமொழி 4-4-2)**

குற்றமில்லாமல், சமம், தமம் முதலிய குணங்களை வளரச் செய்துகொண்டு தம், தம் ஆசாரியர்களுக்கு கைங்கரியம் பண்ணுவதற்கு பாங்காயிருப்பவர்களும், பொறாமையென்பது சிறிதும் இல்லாதவர்களும், உதாரமான கையையுடையவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழுமிடமான, திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருப்பவனும், ஸப்தலோகங் களையும் ஒரு கவளமாகத் திரட்டியுண்டவனும், பழிப்பற்ற நிலமணி போன்ற நிறத்தையுடையனுமான எம்பெருமானை வணங்காதவர் தங்களைப் பெற்ற தாய்மாருடைய வயிற்றை மி கவும் நோவுபடுத்துகைக்காகப் பிறந்தார்கள், என்று

எண்ணலாம் என்று ஆழ்வார் திருக்கோட்டியூர் எம்பெருமானை மங்களாசாசனம் செய்கிறார்.

**வடதிசைமதுரைசாளக்கிராமம் வைகுந்தம்துவரைஅயோத்தி *
இடமுடைவதரியிடவகையுடைய எம்புருடோத்தமனிருக்கை *
தடவரையதிரத்தரணிவிண்டிடியத் தலைப்பற்றிக்கரைமரம்சாடி *
கடலினைக்கலங்கக்கடுத்திழிகங்கைக் கண்டமென்னும்கடிநகரே.**

(பெரியாழ்வார் திருமொழி 4-7-9)

இப்பாசுரத்தில் ஏழு திவ்யதேசங்களை மங்களாசாஸனம் செய்கிறார்.

வடக்கு திசையிலுள்ள மதுரை, ஸ்ரீஸாளக்ராம க்ஷேத்ரம், ஸ்ரீவைகுண்டம், ஸ்ரீமத் த்வாரகை, திருவயோத்யை, இடமகன்ற ஸ்ரீபத்ரி ஆகியவற்றை வாஸஸ்தானமாக உடையவனான எம்முடைய புருஷோத்தமன் இருப்பிடம் எது என்னில்; பகீரதன் தவ வலிமையால் இறக்கிக் கொண்டு வருகிறபோது பெரிய மலைகளும், அதிரும்படி பூமி விண்டு இடிந்து விழக் கரையிலுள்ள மரங்களை மோதி முறித்துக், கடலும் கலங்கும் படியான வேகத்துடன் பாய்கின்ற கங்கையின் கரைமேல் "கண்டம் என்னும் கடிநகர்" என்னும் சிறப்புடைய நகரமேயாகும்.

வடதிசையிலுள்ள அனேக திவ்ய தேசங்களில் உண்டான விருப்பத்தையெல்லாம் ஒருசேரப் பண்ணிக் கொண்டு திருக்கண்டங்கடிநகரில் அவதார குண சேஷ்டி தங்களோடு எழுந்தருளியிருப்பதையும், அந்த திவ்யதேசத்தின் சிறப்புக் களையும், அநுபவித்து மகிழ்ந்தார் ஆழ்வார்.

இனி பரத்வாதிகளிலுண்டான குணங்கள் எல்லாம் ப்ரகாசிக்கும் படி வாழ்கின்ற இடமாய், உபயவிபூதிகளான விண்ணுலகு, மண்ணுலகுகளை இருந்து ஆள்கின்ற ஸ்தானம் போல் பெருமையுடையதாய் திவ்ய தேசங்களுக்கெல்லாம் வேர்ப்பற்றான ஸ்தலமாய், அடியார்களைக் காத்தருள்வதற்கு ஏகாந்தமான இடமென்று நித்யவாசம் பண்ணுகிற திருவரங்கம்

திருப்பதியில் எல்லாத் தேசத்தவர்களும், வந்து அனுபவிக்கும் படியாகவும், அன்போடு தென்திசை நோக்கி இனிதாகத் திருக்கண் வளர்கின்ற திருவாளனாம் பெரிய பெருமாளை அநுபவிக்க முற்பட்டு அவர் விரும்பிக் கண் வளர்ந்தருள்கிற திருவரங் கத்தின் சிறப்புக்களை "மாதவத்தோன் பதிகத்தில்" பல்வகையாக பாடி மகிழ்கிறார்.

மாதவத்தோன்புத்திரன்போய் மறிகடல்வாய்மாண்டானை*
ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தானூர் *
தோதவத்தித்தூய்மறையோர் துறைபடியத்துளும்பிஎங்கும் *
போதில்வைத்ததேன்சொரியும் புனலரங்கமென்பதுவே.

(பெரியாழ்வார் திருமொழி 4-8-1)

அத்யயனத்தை (வேதம் ஓதுதல்) பூர்த்தி செய்ததும் கண்ணன் எம்பெருமான் ஸாந்தீபினிக்கு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்க நினைத்த போது, ஸமுத்திரத்தில் விழுந்து இறந்து போன தன் புத்திரனைக் கொண்டு வந்து தர வேணுமென்று, ஸாந்தீபினி அபேக்ஷிக்க, நெடுங்காலத்துக்கு முன் அலைகள் மறித்து விழுகின்ற கடலிலே புகுந்து மடிந்தவனை அத்யயனம் செய்து வைத்ததற்கு தக்ஷிணையாக முன்பிருந்த சரீரத்தில் ஒன்றும் உருக்குலையாது கொண்டு வந்து கொடுத்தவனுடைய ஊர் எது என்னில், தூய்மையாகத் தோய்த்து உலர்த்தின வஸ்த்ரங்களை அணிந்து கொண்டிருப்பவராய்க்குற்றமற்ற வேதங்களையே தமக்கு நிரூபகமாய் (அடையளம்) உடையவர்கள் திரள், திரளாகக் காவிரித் துறையில் படிந்து நீராட, அதனால் எங்கும் அலை கிளம்பி மலர்களை அசைக்கத் தேன் சொறியும் படியான புனலையுடைய திருவரங்கம் என்பதுவேயாகும்.

பெரியாழ்வார் மங்களாசாஸநம் செய்தருளிய திவ்ய தேசங்கள் பத்தொன்பது (19) இவர் அருளிச் செய்த ப்ரபந்தங்கள் "திருப்பல்லாண்டு", "பெரியாழ்வார் திருமொழி" ஆகும்.

**ஆண்டாள்:-**

உலகெல்லாம் வியக்கும்படி இளமையிலேயே எம்பெருமானிடத்திலே பக்திப் பெருங்காதல் கொண்டு பிஞ்சாய்ப் பழுத்தவளாய், அவனையே மணம் செய்து கொள்ளக் கருதி, அப்பெருமானது பெருமைகளையே எப்பொழுதும், நினைத்தல் துதித்தல் முதலியன செய்து நின்றாள் அச்சுரும்பார் குழற்கோதை, விஷ்ணுசித்தர் வடபெருங்கோயிலுடையானுக்குச் சாத்துவதற்காக கட்டி வைத்த திருமாலையை அவரில்லாத ஸமயம் பார்த்து எடுத்து தன் குழலிலே தரித்துக்கொண்டு, சிறந்த ஆடை ஆபரணங் களையும் அணிந்து கொண்டு அப்பெருமானுக்கு நான் பொருந்தியிருக்கிறேனோ? இல்லையோ? என்று தன் அழகைக் கண்ணுடியிலே காண்பாளாம்.

ஒரு நாள் வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில் மீண்டு வந்த போது, கோதை சூடியிருப்பதைப் பார்த்துக் கோபம் கொண்டு "பெண்ணே! நீ செய்த இக்காரியம் எம்பெருமா னுக்கு அபசாரமாகும். இனி இப்படிச் செய்வதற்கு நினைவும் கொள்ளாதே" என்று கூறிவிட்டு, அன்று பெருமாளுக்கு மாலை சாத்தாமல் அக்கைங்கர்யத்திற்கு இடையூறு நேர்ந்த தற்கு மி கவும் மனம் வருந்தியிருந்தார். அன்றிரவு வடபெருங் கோயிலுடையான் ஆழ்வாருடைய கனவிலே தோன்றி "கோதை சூடிக் கொடுத்த மாலையே காணும் நறுமணம்மிக்கு நமக்கு மிக உகப்பாயிருப்பது ! ஆகையால் இனி நாள்தோறும் அவள் சூடிக்களைந்த மாலையையே நமக்குக் கொண்டு வருவீர்" என்று அருளிச்செய்தார்.

உடனே கண்விழித்த பெரியாழ்வார் தாம் பெற்றெடுத்த பெண்பிள்ளை எம்பெருமானுடைய தேவிகளில் ஒருத்தியின் அவதாரமேஎன்று அறுதியிட்டு அவளுக்கு அது காரணமாக "ஆண்டாள்" என்றும், எம்பெருமானுக்குரிய மலர்மாலை யைத் தான் சூடிக்கொண்டு பார்த்த பின்பு எம்பெருமானுக்கு

கொடுத்தது காரணமாக "சூடிக்கொடுத்த நாச்சியார்" என்று திருநாமம் இட்டு அழைத்து வந்தார்.

பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாகிற ஆண்டாளுடைய ஜ்ஞான பக்திகள் க்ஷணந்தோறும் பகவத் விஷயத்திலே கைவளர்ந்துவந்தன. ஒரு கொள்கொம்பிலே சேர்க்க வேண்டும் பருவத்தையடைந்தாள். "மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்னும்படியான உறுதியையுடையவளானாள்.

ஸ்ரீவில்லிபுத்தூரைத் திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்களை இடைப்பெண்களாகவும், தன்னை அவர்களிலே ஒருத்தியாகவும்,வடபெருங்கோயிலை ஸ்ரீநந்தகோபர் திரு மாளிகையாவும், வடபெருங்கோயிலுடையானை க்ருஷ்ண னாகவும் பாவித்து இடைப் பெண்கள் 'நோற்ற நோன்பைத்' தான் நோற்கிறாள். நினைவின் முதிர்ச்சியாலே இவளுக்கு இடைநடையும், இடை முடியும், இடைப்பேச்சும், முடை நாற்றமும் உண்டாயின.

திருவாய்ப்பாடியில் மழைபொழிய வேண்டும் என்று நோன்பு நோற்கும்படி ஆயர்களால் நியமிக்கப் பெற்ற ப்ரகாரத்தை அநுகரித்து, பாதகங்கள் தீர்ப்பதாய், பரமனடி காட்டுவதாய், வேதம் அனைத்துக்கும் வித்தாவதான திருப்பாவையைப் பாடியருளினாள் ஆண்டாள். திருப்பாவையில் "நாராயணனே நமக்கே பறைதருவான் " என்று முதற்பாட்டிலும் ,கறவைகள் பின் சென்று - (28) "சிற்றம் சிறுகாலே" - (29) என்னும் கடைசிப் பாசுரங்களிலும் எம்பெருமானே உபாயம் என்றும், அவன் உகப்புக்கான அடிமை செய்வதே ப்ராப்யமென்றும், தன் உறுதியை அறுதியிட்டு கூறுகின்றாள்.

தான் விரும்பியபடி எம்பெருமானைப் பெருமையாலே அவனைப் பெற வேண்டும் என்னும் மிகுந்த த்வரை ஏற்பட்டு "நாச்சியார் திருமொழி" என்னும் மற்றொரு ப்ரபந்தத்தையும் அருளிச் செய்தாள்.

இப்படி பகவதநுபவம் செய்து கொண்டு ஆண்டாள் வாழ்ந்து வருகையில், இவளுக்கு விவாஹத்துக்கேற்ற பருவம் வந்ததைக் கண்டு, பெரியாழ்வார் இவளுக்கேற்ற கணவனைக் காணப்பெறாமல் கவலைப்பட்டு, இவளைய ழைத்து "நீ யாருக்கு வாழ்க்கைப் பட விரும்புகிறாய்?" என்று கேட்க, ஆண்டாள் "மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்று சொல்லி "பெருமானையே மணம் புரிய விரும்புகிறேன்" என்று உரைத்தாள்.

ஆழ்வாரும் நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்களில் "யாருக்கு வாழ்க்கை பட விரும்புகிறாய்?" என்று கேட்க, ஆண்டாளும் "அவரவர்களுடைய குணங்களையும் பெருமை களையும் செல்லியருள வேணும்" என்று பிரார்த்திக்க, ஆழ்வாரும் வடபெருங்கோயிலுடையான் வைபவம் தொடக்கமாகப் "பாண்டிய நாட்டு திருப்பதிகள்", "மலை நாட்டுத் திருப்பதிகள்","வடவேங்கடம் தொடங்கி திருப்பிருதி" ஈறாக வடநாட்டுத் திருப்பதி எம்பெருமான்களின் வைபவங் களையும், தொண்டைநாடு, நடுநாடு, சோழநாட்டு எம்பெருமான்களின் ஏற்றங்களையும், சீர்மைகளையும், அருளிச் செய்ய, அது கேட்டு ஆண்டாளும் ஆனந்தக் கண்ணீர் துளிக்க, அரங்கத்தின்ன முதருடைய குழலழகு, வாயழகு, கண்ணழகுகளைக் கேட்டுப் பெருங்காதல் கொண்டு மோஹித்து "வந்தானோ திருவரங்கன் வாரானோ என்றென்றே வளையும் சோரும்" என்கிறபடியே அழகிய மணவாளனையே "மையலேற்றி மயக்கவுன்முகம் மாய மந்திரந்தான் கொலோ" (நாச்சியார் திருமொழி 2-4) எங்களை காமமயக்கம் கொள்ளச்செய்து அறிவு கெடுக்கைக்கு காரண மான அழகிய மணவாளனையே காமுற்று அணியரங்கத் தம்மானுக்கே அற்றுத் திர்ந்த காதலையுடைவளானாள்.

பெரியாழ்வாரும் "கோதைக்குத்தக்க மணாளன் கோயிற்பிள்ளையான நமபெருமாளே" என்று அறுதியிட்டார். ஆண்டாள் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் 'திருப்பாவை',

'நாச்சியார் திருமொழி', ஆகும். ஆண்டாள் மங்களாசாஸனம் செய்த திவ்யதேசங்கள் பதினொன்று ஆகும்.

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை*
தூய பெருநீர் யமுனைத் துறைவனை *
ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கை *
தாயைக் குடல் விளக்கஞ்செய்த தாமோதரனை *
தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது *
வாயினாற்பாடி மனத்தினால் சிந்திக்க *
போய பிழையும் புகுதருவானின்றனவும் *
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய் *

- திருப்பாவை - 5

மாயச் செயல்களையுடையவனும், பகவத் ஸம்பந்தம் நித்யமாகப் பெற்றுள்ள வடமதுரைக்குத் தலைவனும், பரிசுத்தமாய் ஆழம் மிக்கு இருக்கின்ற தீர்த்தத்தையுடைய யமுனையாற்றங்கரையை நிரூபகமாக உடையவனும், ஆயர்குலத்தில் தோன்றிய மங்கள தீபம் போன்றவனும், தாயாகிய தேவகிப் பிராட்டியின் வயிற்றை விளங்கச் செய்தவனுமான கண்ணபிரானை, அடியோமாகிய நாம் பரிசுத்தியுள்ளவர்களாய்க் கிட்டி நல்ல மலர்களைத் தூவி வணங்கி வாயாரப்பாடி நெஞ்சார தியானம் பண்ணினால், (சேஷ சேஷிபாவ ஜ்ஞான முண்டாவதற்கு) முன்பு கழிந்த பாவங்களும், பின்பு தன்னை அறியாமல் வரக்கூடிய பாவங்களும், நெருப்பிலிட்ட பஞ்சுபோல உருமாய்ந்து போய் விடும். அதனால் எம்பெருமானின் திருநாமங்களை சொல்லுங்கள் என்கிறாள் ஆண்டாள்.

நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலைநம்பிக்கு * நான்
நூறுதடாவில்வெண்ணெய் வாய்நேர்ந்துபராவிவைத்தேன் *
நூறுதடாநிறைந்த அக்காரவடிசில்சொன்னேன் *
ஏறுதிருவுடையான் இன்றுவந்துஇவைகொள்ளுங்கொலோ?

(நாச்சியார் திருமொழி 9-6)

பரிமளம் மிகுந்த பொழில்கள் மணங்கமழா நிற்கப் பெற்ற, திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுக்கு அடியேன் நூறு தடாக்களில் நிறைந்த வெண்ணெய் வாயாலே சொல்லி ஸமர்ப்பித்தேன்; இன்னமும் நூறு தடாக்களில் நிறைந்த அக்காரவடிசிலும், வாயாலே ஸமர்ப்பித்தேன். இந்த வெண்ணெயையும் அக்கார வடிசிலையும், (நாட்செல்ல நாட்செல்ல) ஏறி வருகின்ற ஸம்பத்தையுடையரான அழகர் இன்று எழுந்தருளி திருவுள்ளம் பற்றுவரோ? என்கிறாள் ஆண்டாள்.

நூறு தடாவில் வெண்ணெயும், நூறு தடா நிறைந்த அக்கார வடிசிலும் அழகருக்கு ஸமர்ப்பிக்க ஆசைப் படுகிறாள். பிற்காலத்தில் எம்பெருமானார் இதை நிறைவேற்றி வைத்து ஸ்ரீவில்லிபுத்தூர் எழுந்தருளியபோது, ''கோயிலண் ணர்'' என்று ஆண்டாளால் கொண்டாடப் பெற்றார் என்பது ப்ரஸித்தம்.

**எழிலுடைய அம்மனைமீர்! என்னரங்கத்தின்னமுதர்**
**குழலழகர் வாயழகர் கண்ணழகர் * கொப்பூழில்**
**எழுகமலப்பூவழகர் எம்மானார் * என்னுடைய**
**கழல்வளையைத் தாமும்கழல்வளையேயாக்கினரே.**

- (நாச்சியார் திருமொழி 11-2)

அழகையுடைய தாய்மார்களே! திருவரங்கத்திலெழுந் தருளியிருக்கிற என்னுடைய இனிய அமுதம்போன்றவராய், அழகிய திருக்குழற்கற்றையையுடையவராய், அழகிய திருவ தரத்தையுடையவராய், அழகிய திருக்கண்களையுடையராய் திருநாபியிலுண்டான தாமரைப்பூவாலே அழகு பெற்றவராய், எனக்கு ஸ்வாமியான அழகியமணவாளர், என்னுடைய கழல்வளை என்று இடுகுறிப்பெயர் பெற்ற கைவளையை, அவர் தாம் கழன்றொழிகிற வளை என்று காரணப் பெயர்பெற்ற வளையாக ஆக்கினார்.

**உண்ணாது உறங்காது ஒலிகடலையூடறுத்து ***
**பெண்ணாக்கையாப்புண்டு தாமுற்றபேதெல்லாம் ***
**திண்ணார் மதிள் சூழ் திருவரங்கச் செல்வனார் ***
**எண்ணாதே தம்முடைய நன்மைகளே எண்ணுவரே.**

(நாச்சியார் திருமொழி 11-7)

மஹாப்ரளயத்துக்கும் அழியாதபடி திண்மை பொருந்திய மதிள்களாலே சூழப்பட்ட கோயிலிலே எழுந்தருளியிருக்கும் ஸ்ரீயபதியான பெருமாள், (ஸ்ரீராமனாய்த் திருவவதரித்த போது) சீதையென்கிற ஒரு பெண்ணின் சரீரத்தில் ஆசைப்பட்டு உண்ணாமலும், உறங்காமலும் (வருந்தி) கோஷிக்கின்ற கடலை அணைகட்டி இப்படி தாம் அடைந்த எளிமைகள் எல்லாம் மறந்து போய், இப்போது தம்முடைய பெருமைகளையே எண்ணாநின்றார்.

**தொண்டரடிப்பொடியாழ்வார் :-**

இவர் மங்களாசாஸனம் செய்த திவ்யதேசங்கள் நான்கு (4) 1) திருவரங்கம் 2)பாற்கடல் 3) பரமபதம் 4) அயோத்தி இவர் அருளிச்செய்த ப்ரபந்தம் 'திருமாலை', 'திருப்பள்ளி யெழுச்சி'.

இவர் அருளிச் செய்த முதல் ப்ரபந்தமான திருமாலை ஸ்ரீசௌநக பகவான் அருளிய விஷ்ணு தர்மத்தை ஒத்தது. முதல் இரண்டு பாசுரங்களில் பெரிய பெருமாளின் திருநாமத்தைக் கற்றதனால் தமக்குண்டான பெருமையை அவரிடமே அருளிச்செய்து, திருநாம ஸங்கீர்த்தனச் சுவை தவிர பரமபத இன்பமும் தமக்கு வேண்டியதில்லை என்றார். மூன்றாம் பாசுரத்தில் "ஸம்ஸாரத்தில் பிறவியும் தமக்கு வேண்டிய தில்லை" என்று கூறி மூன்றாவது விபூதியான ஸ்ரீரங்கத்தில் வாழ்ச்சியே போதுமானது என அறுதியிட்டார்.

அதற்கு மேல் பதினோரு பாட்டாலே ஸ்வரூபத்திற்குத் தகுந்ததாய் மிக எளியதான பகவத் விஷயத்தை ஸம்ஸாரிகள் இழப்பதைக் கண்டு பொறுக்கமாட்டாமல், பெரிய பெருமாளுடைய பெருமையை அவர்களுக்கு உபதேசித்தார்.

ஸம்ஸாரிகள் அதை ஏற்காமையாலே, பெரிய பெருமாள் தமக்கு (சேதனர்க்கு ஏற்படும் ஐயப்பாடுகளை அறுப்பது) முதலாக பரபக்தி, பரஜ்ஞாந பரமபக்தி ஈறாக நிர்ஹேதுகமாக விளைத்த மஹோபாரங்களை மேல் பத்துப்பாட்டாலே அருளிச் செய்தார். அதற்குமேல் பத்துப்பாட்டுக்களாலே ஒரு தேச விசேஷத்தில் சென்று அனுபவிப்பதற்கு உறுப்பான ஸாதநாந்தரங்கள் எதுவுமே தம்மிடம் இல்லை என்று உபாய ஸூந்யதையை அருளிச்செய்தார்.

முப்பத்தைந்தாம்பாட்டில் "ஒருகைம் முதலுமற்ற நாம் பகவத் விஷயத்தை இழக்க வேண்டியதே" என்று அகலப்புகுந்த தம்மைத் தன் செல்லாமையைக் காட்டிப் பெரியபெருமாள் சேர்த்துக்கொண்டமையை அருளிச் செய்தார். மேல் இரண்டு பாட்டுக்களாலும் விசேஷ கடாக்ஷம் பண்ண வேணுமென்று கதறி, அது பெறாமல் பெரு வருத்தமுற்றதை அருளிச்செய்தார்.

திருமாலைக்கே உயிர்ப்பாட்டான முப்பத்தெட்டாம் பாசுரத்தில் "ப்ராப்ய", "ப்ராபக" நிஷ்கர்ஷம் செய்து, ப்ராப்ய த்வரையையும் உடைய ரஹஸ்யத்ரயநிஷ்டர்களிடத்திலே பெரிய பெருமாளுக்குள்ள ஈடுபாட்டைக் காட்டினார் மேல் ஐந்து பாட்டுக்களாலே இத்தகைய பாகவதர்களுடைய பெருமையையும், அவர்களைக் குறைய நினைப்பாருடைய தாழ்வையும் காட்டினார்.

நாற்பத்து நாலாம் பாட்டில் "பிரமன், சிவன் முதலான ஸ்வப்ரவ்ருத்தி நிஷ்டர்கள் பெற முடியாத பேற்றை, " தன்னையே உபாயமாகக் கொண்ட கஜேந்த்ரனுக்கு அருளியதை அருளிச் செய்தார். நாற்பத்தைந்தாம் பாட்டில் இப்ப்ரபந்தம் 'கற்றார்க்குப் பலம்' சொல்லித் தலைக்கட்டினார்.

திருமாலையில் தொண்டரடிப்பொடியாழ்வாருக்கு "ஆதலால் பிறவி வேண்டேன்" - (3) என்னும்படி ப்ரக்ருதி ஸம்பந்தம் தாழ்ந்தது என்னும் ஞானத்தையும், "போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதம்" - (4) என்னும்படிபாகவத

சேஷத்வமளவாக ஸ்வரூப யாதாத்ம்ய ஞானத்தையும், "காவலிற் புலனை வைத்து" (1) என்னும்படி "இந்த்ரிய நிக்ரஹத்தையும், குளித்து முன்றனலை" - (25) என்னும்படி அநந்யோபாயத்வ ஜ்ஞானத்தையும், "உன்னருளென்னும் ஆசை தன்னால்" (33) என்னும்படி உபாய யாதாத்மய ஜ்ஞானத்தையும் விளைத்து, ஸம்ஸாரமாகிற பெருந்தூக்கத் திலிருந்து அவரை எழுப்பிய பெரிய பெருமாள் "சோம்பரை யுகத்திபோலும்" - (38) என்கிறபடியே மிகவும் உகந்து இவரை இவவளவு தூரம் புகுர நிறுத்தின தன் பெருமையை அநுஸந்தித்துக் கொண்டு "எல்லாரையும் இவரைப்போலே நம்மிடம் ஈடுபடச் செய்ய வழி என்ன?" என்று சிந்தித்துக் கொண்டு யோகநித்திரை (அறிதுயில்) செய்யத் தொடங்கினார். அப்படி உறங்கும் பெரிய பெருமாளை "உத்திஷ்ட்ட புருஷ ஹரீ லோஹித பிங்களாக்ஷி" - (தை - நா) - (செந்தாமரை போல்சிவந்த கண்ணனே! புருஷனே! ஹரியே! எழுந்தருள்வாய்) என்று பரம புருஷனுக்கு அஸாதார ணமான இரண்டு திருநாமங்களையும், புண்டரீகாக்ஷத் வமாகிற (அடையாளத்தையுமிட்டு அழைத்து, அவனுக்கு திருப்பள்ளியெழுச்சி பாடின வேதபுருஷனைப் போலவும், "உம்பர் கோமானே!" "உறங்காதெழுந்திராய்" - (திருப்பாவை-17) என்ற ஆண்டாளைப் போலவும், "அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே" என்றுதம்முடைய ப்ராப்யத்வரையாலே பாசுரந்தோறும் திருப்பள்ளியுணர்த்தி "அடியார்க்காட்படுத்தாய்"-(திருப்பள்ளி-10) என்று ப்ராப்யத்தின் எல்லையான பாகவத கைங்கர்யத்தைப் பிரார்த்தித்து தலைக்கட்டுகிறார் தமது சரம ப்ரபந்தமான திருப்பள்ளி யெழுச்சியிலே.

திருமங்கையாழ்வார் இவர் நந்தவனமிருக்குமிடத்தை ஒதுக்கித் திருமதிள் கட்டினார் என்றும், இவர் தாம் பூக்கொய்யும் ஆயுதத்திற்கு "அருள்மாரி" என்னும் திரு மங்கையாழ்வார் திருநாமத்தை இட்டார் என்றும், "அன்பர் தாள் தூளி நற்பாணன் நற்கலியன்" என்று உபதேசரத்தின மாலையில் மாமுனிகள்

இவர்கள் தோற்றத்தின் அடைவை அருளிச் செய்கையாலே மூவருமே ஒரு காலத்திலிருந் தவர்கள் என்று விளங்குகிறது.

நாட்டினான் தெய்வம் எங்கும் நல்லதோரருள் தன்னாலே *
காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும் வண்ணம் *
கேட்டீரே நம்பிமீர்காள் கெருடவாகனனும் நிற்க *
சேட்டை தன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே
- (திருமாலை - 10)

எல்லா இடங்களிலும்பல ராஜஸ, தாமஸ தெய்வங்களை, நிலை நிறுத்தினான். உஜ்ஜீவிக்க விருப்ப முள்ளவர்களுக்கு, கடைத்தேறலாம்படி தனது ஒப்பற்ற தயாகுணத்தினால் திருவரங்கத்தை, காண்பித்துக் கொடுத்தான். பூர்ணமான பற்றுள்ளவர்களே! இவ்வர்த்தத்தைக் கேட்டீர்களா? கருடனை வாகனமாகவுடைய எம்பெருமான் இருக்கச் செய்தேயும், மூத்த தேவியின் பக்கலிலே ஐஸ்வர்யம் வேண்டி நிற்கின்றீர்களே.

"தண்துழாய்மாலைமார்பன்" (3) என்கிறபரமபத நாதனைச் சென்றடைய முடியாதாகையாலே "சிலையினா லிலங்கை செற்ற தேவனே" (7)என்று இங்கு அவதரித்த ராமாவதாரத்தை அருளிச்செய்தீர். அந்த அவதாரத்திலும் எளிதான க்ருஷ்ணாவதாரத்தை "கற்றினம் மேய்த்த எந்தை" -(9) என்று சென்ற பாசுரத்தில் அருளிச்செய்தீர். இரண்டு அவதாரங்களுக்கும் பிற்பட்ட எங்களுக்கு இவையும் அடைய அரிதாயன்றோவுள்ளன - என்று ஸம்ஸாரிகள் கேட்க, "தேசத் தாலும் காலத்தாலும் அடைய முடியாத பரவாஸுதேவனையும், ராமக்ருஷ்ணர்களையும் போலல்லாமல் நீங்கள் அனைவரும் வந்து அடையலாம்படி இத்திருவரங்கத்திலே பெரிய பெருமாள் சயனித்திருக்கிறார். இங்கே வந்து இவரைப் பற்றுங்கள். இவரைத் தவிர வேறொரு தெய்வத்தை மோக்ஷத்தின் பொருட்டு பற்றுவது செல்வம்வேண்டுமென்று மூத்ததேவியைப் பற்றுவது போலேயாகும்" என்கிறார் ஆழ்வார்.

இப்படி ஸௌலப்யத்தின் (எளிமையின் எல்லை) நிலத்தைக் காட்டிய பின்பும் திருவரங்கத்தில் சிறிதும் ஈடுபாடில்லாமலிருக்கும் ஸம்ஸாரிகளைக் கண்டு "ஆச்ரயிக்கத் தக்கவனாக நான் சொன்ன சக்ரவர்த்தித்திருமகன் அவ்வவதாரத்துக்குப் பிற்பட்ட உங்களுக்கும் உதவுவதற்காக இங்கே வந்து சயனித்திருக்கும்போது அவனுடைய திருநாமத்தைச் சொல்லி உய்ந்து போகும் பாக்யமில்லாமல் காலத்தை வீணுக்குகின்றீர்களே" என்று வருந்துகிறார்.

ஒரு வில்லால் ஓங்குமுந்நீரடைத்து உலகங்களுய்ய *
செருவிலே அரக்கர் கோனைச் செற்ற நம் சேவகனார்*
மருவிய பெரிய கோயில் மதிள் திருவரங்கமென்னா *
கருவிலே திருவிலாதீர்! காலத்தைக் கழிக்கின்றீரே.
(திருமாலை - 11)

கைக்கெட்டியதொரு வில்லாலே, கொந்தளிக்கும்படி யான கடலிலே அணைகட்டி, எல்லா உலகங்களும் உஜ்ஜீவிக்கும்படி யுத்தத்திலே, ராக்ஷஸர்களின் அதிபனான இராவணனை, அழித்து நமக்கு உதவிய அழகிய மணவாளன் நித்யவாஸம் பண்ணுகிற பெருமைபொருந்திய கோவிலாவது மதிள்களை யுடைய ஸ்ரீரங்கம் என்று சொல்ல மாட்டாதவராய், கர்ப்பத்திலும் பகவத் கடாக்ஷமில்லாதவர்களா யுள்ளவர்களே! பகவானை சரணமடைந்து தொண்டு புரிய வேண்டும்படியான காலத்தை வீணுக்குகின்றீர்களே என்கிறார்.

குடதிசைமுடியைவைத்துக் குணதிசை பாதம் நீட்டி *
வடதிசை பின்பு காட்டித் தென்திசைஇலங்கைநோக்கி *
கடல்நிறக் கடவுளெந்தை அரவணைத்துயிலுமாகண்டு *
உடலெனக்கு உருகுமாலோ என் செய்கேன்? உலகத்தீரே!
(திருமாலை - 19)

உலகத்திலுள்ளவர்களே! கடல்போன்ற கருநிறத்தையுடைய கடவுளான என் ஸ்வாமி மேற்குத் திக்கில் திருமுடியை

வைத்தருளியும், கிழக்குத் திக்கில் திருவடிகளை நீட்டியும், வடக்குத் திக்கிலே தனது பின்புறத்தைக் காட்டியும் தெற்குத் திக்கில் விபீஷணன் வாழுமிடமான லங்கையை அன்போடு பார்த்துக் கொண்டும் திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே கண் வளர்ந்தருளும் அழகைக் கண்டு என் ஸரீரமானது உருகா நின்றது ஐயோ ! என்ன செய்வது? "குடதிசை" என்று தொடங்கி இரண்டடிகளாலே தம்மை உருக்கின விஷயம் எது என்பதைக் காட்டுகிறார் ஆழ்வார் புண்ணியமும், பாபமும் கலந்தவர் களான மனிதர்களையும், பாபம் மிகுந்தவர்களான திர்யக்குகள் எனப்படும் விலங்கினத்தையும், ஸ்தாவரம் எனப்படும் மரஞ்செடி கொடிகளையும் வாழச் செய்வதற்காக, கீழேயுள்ள பூமியை ஸ்ருஷ்டித்தான் என்றும், புண்ணியம் மிக்கிருந்துள்ள தேவர்கள் வாழ்வதற்காக ஆகாயத்தைப் படைத்தான் என்றும், நடுவேயுள்ள கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ஆகிய திசைகளுக்கு இப்படி ஒரு பயன் இல்லாமையாலே அவற்றைப் படைத்தது வீண் என்றும் இது வரை நினைத்திருந்தார். ஆழ்வார் இப்போது இந்த நாலு திக்குகளைப் படைத்ததற்கும் பயன் உண்டு என்று உணர்ந்து கொண்டார்.

சேதனர்களை ஸ்ருஷ்டிப்பது மோக்ஷமடைவதில் விருப்ப முடையவர்களை உண்டாக்குவதற்கே ஆனாற் போலேயும், அச்சேதனர்களுக்கு ருசியையுண்டாக்கும் தன்னுடைய முடி வைத்தல், "அடிநீட்டல்" முதலான செயல்களைச் செய்வதற் காகவே திக்குகளைப் படைத்தான் என்று கண்டு கொண்டார்.

**மேம் பொருள் போகவிட்டு மெய்ம்மையைமிகவுணர்ந்து***
**ஆம்பரிசறிந்து கொண்டு ஐம்புலனகத்தடக்கி ***
**காம்பறத்தலைசிரைத்து உன்கடைத்தலையிருந்து * வாழும்**
**சோம்பரை உகத்தி போலும் சூழ்புனலரங்கத்தானே**
**(திருமாலை - 38)**

**காவேரி சூழ்ந்த கோயிலிலே கண்வளர்ந்தருளு கிறவனே ! மேன்மையை விளைப்பதாக ப்ரமிக்கச் செய்யும் இவ்வுலக விஷயங்களை வாசனையுடன் விட்டு ஆத்ம ஸ்வரூபத்தை**

உள்ளபடி உணர்ந்து ஸ்வரூபானுரூபமான பலனாகிய பகவத் கைங்கர்யத்தை தெரிந்து கொண்டு ஐந்து இந்திரியங்களையும், (ஸ்வபோக்த்ருத்வபுத்தி ஏற்படாமல்) அடக்கி உபாயாந்தரங் களில் உள்ள பற்று ஒழியும்படி தலையிலுள்ள சுமைகளைப் போக்கி உன் திருவாசலிலே காவல் புரிந்து, உஜ்ஜீவிக் கின்றவராய், தங்கள் நலத்தில் சோம்பியிருப்பவர்களான பக்தர்களை உகக்குமவனல்லையோ நீ? என்கிறார் ஆழ்வார். இப்பாட்டு கீதாசரமச் லோகத்தை அடியொற்றிய பாட்டு.

மஹாபாரதத்துக்கு கீதா சரமச்லோகம் அமைந் திருப்பது போலே திருமாலையாகிற திவ்யப்ரபந்தத்துக்கு இப்பாட்டு அமைந்திருக்கிறது. ஸர்வேச்வரன் திருப்பாற்கடலைக்கடைந்து தேவர்களுக்கு அம்ருதத்தைக் கொடுத் தான். வேதவ்யாஸ மஹர்ஷி வேதமாகிற கடலைக்கடைந்து அனைவர்க்கும் ஆனந்தத்தை விளைக்கும் மஹாபாரத மாகிற சந்திரனை ஸம்ஸாரிகளுக்கு உய்வுபாயமாக அளித்தார். தேவர்களுக்கு எம்பெருமான் கொடுத்த அமுதம் நல்வாழ்ச்சி அளிப்பதல்ல. துன்புற்றபோது சாகவும் முடியாதபடி அவர்களுக்குக் கால்கட்டாயிருப்பது. ஸ்ரீவேதவ்யாஸ மஹரிஷி ஸம்ஸாரி களுக்கு அளித்த மஹாபாரதமோ வெனில் ஸம்ஸாரத்தைப் போக்கடிக்கக் கூடியது. அந்த மஹாபாரதம் "சக்கை" என்னும்படி, ஸாரமாயிருப்பது கீதை.

அதில் ஸாரமாயிருப்பது சரமச்லோகம் சரமச்லோ கத்தைக் கேட்பதற்கு உறுப்பாக உபாயாந்தரங்களின் பலவகைத் தாழ்வுகள் நெஞ்சில்பட்டு சோகம் உண்டாவ தற்காக கீதாசார்யன் சரமச்லோகத்துக்கு முன்புள்ளதெல்லாம் சொன்னான்.

த்வயத்தில் பூர்வகண்டத்தின் அர்த்தத்தை "அகலகில்லேன்" (திருவாய் 6-10-10) என்று ஒரு பாசுரத்திலே அருளிச்செய்தார் நம்மாழ்வார். த்வயத்தின் உத்தரகண்டத்தின் அர்த்தத்தை "சிற்றஞ் சிறுகாலே" (திருப்பாவை-29) என்கிற ஒரு பாசுரத்திலே அருளிச் செய்தாள் ஆண்டாள்.

த்வயத்தின் இரண்டு கண்டத்தின் அர்த்தத்தையும் இங்கு ஒரே பாசுரத்தில் சேர்த்து அநுஸந்திப்பவர் தொண்டரடிப்பொடியாழ்வார் ஒருவரே ஆவர்.

**திருப்பாணாழ்வார் :-**

இவர் மங்களாசாஸனம் செய்தருளிய திவ்யதேசங்கள் மூன்று (3) திருவரங்கம், திருவேங்கடம், பரமபதம். இவர் அருளி செய்த ப்ரபந்தம் "அமலனாதிபிரான்".

கை குழந்தைக்குத் தாய் முலை கொடுப்பது போலே சேஷபூதனுக்கு தாரக, போஷக போக்யமாய் இருக்கும் திருவடிகளின் அழகு தம்மை அடிமை கொண்டதைப் பேசினார் முதற் பாசுரத்தில்.

கடலலைகளால் அலைக்கப்பெற்று ஓரலையிலிருந்து மற்றோர் அலைக்குச் செல்வது போலே கடல்வண்ணனுடைய திருவடிகளிலிருந்து சிவந்த ஆடையின்மேல் தம் சிந்தை சென்றதைப் பேசினார் இரண்டாம் பாசுரத்தில். திருப்பீதாம்பரத்தின் அழகு திருநாபிகமலத்திலே வீசினபடியைப் பேசினார் மூன்றாம் பாசுரத்தில். திருநாபி கமலத்தோடு சேர்ந்த திரு உதரபந்தத்தை அநுபவித்தார் நாலாம் பாசுரத்தில். எனக்குத் தஞ்சமான பெரியபிராட்டியார் இருக்கும் திருமார்பன்றோ என்னை ஸ்வரூபாநுருபமான கைங்கர்யம் கொண்டது என்றார் ஐந்தாம் பாசுரத்தில்.

"எல்லா உலகையும் அமுது செய்தருளின கண்டத்தின் அழகு என்னை உண்டாக்கிற்று" என்பதன் மூலம் திருமார்பின் அழகு திருக்கழுத்திலே ஏற்றினபடியைப் பேசினார் ஆறாம் பாட்டில்.தெப்பக்கட்டையைப் பற்றிக் கொண்டு நீந்தப் புக்கவன் தெப்பத்தை இழந்தேன் என்பது போலே, சிந்தையைக் கொண்டு ஒவ்வொரு அவயவமாக அநுபவித்து வந்தவர் வாயின் அழகைக் கண்டவுடன் சிந்தையிழந்தேன் என்கிறார் ஏழாம் பாசுரத்தில் திருக்கண்கள் என் அறியும் அழிந்துவிட்டன என்கிறார் எட்டாம் பாசுரத்தில். திருமேனி தன்னிடம்

உள்ளதையெல்லாம் காட்டி, என்னிடம் உள்ளதையெல்லாம் கொண்டு சென்றது என்றார் ஒன்பதாம் பாசுரத்தில். இவ்வொன்பது பாசுரங்களும் ஆழ்வார் கர்ப்ப க்ருஹத்தில் புகுவதற்கு முன்பு பெரிய பெருமாளுடைய வடிவழகை அவர் கண்ணால் கண்டு பாடியவை.

லோக ஸாரங்க மஹாமுனிகளின் தோளில் எழுந்தருளி யிருப்பவராய் கர்ப்ப க்ருஹத்தில் புகுந்து, "பெரிய பெருமாளைக் கண்ணாலே கண்டு பெரியபெருமாளது அழகைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணா" என்று பெரிய பெருமாளோடு அந்தர்பவித்தபடியைப் பேசினார் பத்தாம் பாசுரத்தில். இப்பத்துப் பாசுரங்களிலும் ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தமும், அர்த்த பஞ்சகங்களும் நிறைந்திருக்கின்றன. ப்ரமாணஸாரமான ப்ரணவத்தில் அடங்கியுள்ள அகார, உகார மகாரங்களிலே முதல் மூன்று பாசுரங்களைத் தொடங்குவதின் மூலம் இப்ப்ரபந்தம் ப்ரணவ ஸாரமாயிருப்பது என்று ஆழ்வாரே உணர்த்தினார். ப்ரமேயஸாரம் எம்பெருமானுடைய திருக்கமல பாதுகையே என்பதனை ஐந்து, ஆறு ஏழாவதான நடுப்பாசுரங் களில் முதல் எழுத்துக்களாலே உணர்த்தினார். இவ்வண்ண மாக எல்லாப் பொருள்களையும் தன்னுட் கொண்டிருப்பது இந்த திவ்யப்ரபந்தம்.

திருப்பாணாழ்வார் பத்துப்பாசுரங்களாலே தம் அநுபவ த்தை உலகுய்ய வெளியிட்டருளி, திருமணத் தூணுக்குள்ளே உகப்போடுநிற்க, பெரியபெருமாளும் "வேர்சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றாதாற்போலே" ஆழ்வாரைத் திருமேனி யோடுஅங்கீகரித்தருள, ஆழ்வாரும் அனைவரும் காணும்படி அணியரங்கன் திருவடிகளிலே ஆண்டாளைப்போல அந்தர்பவித்தருளினார். (மறைந்தருளினாார்)

**அமலனாதிபிரான் அடியார்க்கு என்னையாட்படுத்த**
**விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன் ***
**நிமலன்நின்மலன் நீதிவானவன் நீள் மதிளரங்கத்தம்மான் * திருக்**
**கமலபாதம் வந்து என்கண்ணினுள்ளன வொக்கின்றதே.**

**(அமலனாதிபிரான் - 1)**

பரிசுத்தனாய், உலகுக்கெல்லாம் காரண பூதனாய், எனக்கு உபகாரகனாய், உலகியலில் மயங்கிக் கிடக்கும் என்னை, தன்னுடைய தொண்டர்க்கு அடிமையாக்குகை யாலே வந்த பேரொளியை உடையவன், நித்ய சூரிகளுக்கும், தலைவனாயிருந்து கொண்டு இந்நிலவுலகிலுள்ளாரை அடிமை கொள்ளுகைக்காக, பரிமளம் மிகுந்துள்ள, சோலையை உடைய, திருமலையிலே வந்து தங்கினவனாய், நான் விரும்பாமலேயே எனக்கு உபகாரம் செய்ததனால் ஒளிமிக்கவனாய், தன்னடியார்க்கு என்னை அடிமையாக்கு கையால் வந்த பேரொளி உடையவனாய், "உடையவன், உடைமை" என்கிற முறை தப்பாத பரமபதத்திலே உள்ளவ னாய், உயர்ந்த திருமதிள்களை உடைய, கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற, எல்லார்க்கும் தலைவனாய் விளங்கும வனுடைய, பெரிய பிராட்டியாரும் கூசிப் பிடிக்கத் தக்கதாய், செந்தாமரை போன்ற, திருவடிகளானவை, தானே வந்து என் கண்ணுக்கு இலக்காய், பழைய நிலைமை குலையாதி ருந்ததே என்று ஈடுபடுகிறார்.

சதுரமாமதிள்சூழ் இலங்கைக்கிறைவன்தலைபத்து
உதிரவோட்டி * ஓர்வெங்கணையுய்த்தவன் ஓதவண்ணன்*
மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான் * திருவயிற்று
உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்று உலாகின்றதே.

(அமலனாதிபிரான் - 4)

நற்சதுரமாய், உயர்ந்திருக்கிற மதிள்களாலே சூழப்பட்ட இலங்கை மாநகரத்துக் அரசனான இராவணனை, முதல் நாள் போரிலே பின்னிட்டோடும்படி செய்து, அவனுடைய பத்துத் தலைகளையும் பனங்காய்கள் போலே உதிரும்படி, ஒப்பற்ற கொடிய பிரம்மாஸ்திரத்தை, செலுத்தியவனாய் (அடியார் களின் விரோதியைப் போக்கினோம் என்ற மகிழ்ச்சியாலே) கடல் போலே குளிர்ந்த வடிவை உடையவனாய், வண்டுகளானவை, இனிதாகக் கானம் பண்ண, பெரிய சிறகை உடைய மயில் களானவை நர்த்தனம் பண்ணுகிற கோயிலிலே கண் வளர்ந்தருளுகிற, பரம்பொருளான, அழகிய மணவாள னுடைய

திருவயிற்றில் கட்டப்பெற்ற பந்தமானது என் நெஞ் சிலே நிலைப்பெற்று ஸஞ்சரியா நின்றதே என்று ஈடுபடுகிறார்.

கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ
யுண்டவாயன் * என்னுள்ளம் கவர்ந்தானை *
அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக்
கண்டகண்கள் * மற்றொன்றினைக் காணாவே.

(அமலனாதிபிரான் - 10)

நீருண்ட மேகம் போலே இருக்கிற நிறத்தை உடையவனாய், இடையர்குலத்திலே வந்து அவதரித்து, வெண்ணெயை அமுது செய்த திருப்பவளத்தை உடையவனாய் சதிரிளமடவாரை மதித்துப் போந்த என் மநஸ்ஸை அபஹரித்த அண்டத்தினுள்ளிருக்கும் ஆத்மவர்க்கத்துக்கு நிர்வாஹகனாய், ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுமவனாய், எனக்கு அம்ருதம் போலே பரம யோக்யனானவனைக் காணப்பெற்ற கண்கள் வேறொன்றைக் காணா என்கிறார்.

இவர் அனுபவித்த பெரியபெருமாளின் பெருமையாவது, அழகும் ஐச்வர்யமும் பரமபதத்தில் முளைவிட்டிருக்கும். ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் இரண்டிலை விட்டிருக்கும். திருவரங்கத்திலன்றோ தழைத்திருக்கும். எங்ஙனேயென்னில் "பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதும் சோராமே யாள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வன்" என்று மற்றவிடங்களில் எல்லாம் அளவுபட்டிருப்பவர் இங்கேயன்றோ அளவிறந்து காட்சியளிக்கிறார்.

தன்னை விரும்பியவர்கள் அனுபவிப்பது மட்டுமின்றி "பகவான்" என்றால் முகத்தை மாற வைத்துக் கொள்பவரும் கண்டவாறே அனுபவிக்கலாம்படி எளிமையாயிருக்கும் ஏற்றம் இங்குண்டு. "யாதோவாசோ நிவர்த்தந்தே" என்று வேதங்களுக்கும் எட்டாத ஸர்வேச்வரனை ஆற்றிலே தண்ணீரை

காணுமாப்போலே இக்காவிரி ஆற்றினிடையே கண்டு அனுபவிக்கலாம் படியிருக்கிற இடமாகும். உபயவிபூதி யையும், மண்ணுலகச் செல்வம் விண்ணுலகச் செல்வம் ஆகிய இரண்டையும் நிர்வஹிப்பவர் திருவ்ரங்கத்தெம்பெருமான். இப்படி எல்லாரிலும் மேம்பட்டவராய் எல்லாரையும் அடிமை செய்வித்துக் கொள்ளக்கூடிய தலைவராய், ஸர்வரக்ஷகராய், எல்லாரும் பற்றத்தக்க வகையில் எல்லையற்ற இன்பமயமாக இருப்பவரன்றோ பெரியபெருமாள்.

"சேஷ்யே புரஸ்தாச் சாலாயாம் பாவந்மே ந ப்ரஸீததி" என்று ஸ்ரீபரதாழ்வான் என் தலையிலுள்ள ராஜ்யமாகிய பெருஞ்சுமையை எடுத்தாலல்லது ஏழுந்திரேனென்று கிடந் தாப்போலே ஸம்ஸாரிகளாகிய உங்கள் துன்பங்களை யெல்லாம் என் தலையில் வைத்தாலல்லது நான் எழுந்திரேன் என்று படுகாடு கிடக்கிறார்."யோக க்ஷேமம் வஹாம்யஹம் " என்று கிடக்கின்றான் திருவரங்கத்து எம்பெருமான்.

**திருமங்கையாழ்வாரின் அர்ச்சாவதார ஈடுபாடு :-**

நம்மாழ்வார் அருளிச் செய்த நாலு ப்ரபந்தங்களும் நாலு வேதங்களையொக்கும் என்றும், திருமங்கையாழ்வார் அருளிச்செய்த ஆறு ப்ரபந்தங்களும் அவ்வேதத்தின் ஆறு அங்கங்களையொக்கும் என்றும், மற்றை எண்மருடைய நன்மாலைகள் அவ்வேதத்தின் உபாங்கங்களையொக்கும் என்றும் ஆசார்யர்கள் அருளிச்செய்வர்.

இவர் அருளிச்செய்த ப்ரபந்தங்கள், பெரியதிருமொழி திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என ஆறு பிரபந்தங்கள் ஆகும்.

சுகர் முதலான மஹரிஷிகளும், முதலாழ்வார்களும் பரத்வத்திலே ஊன்றியிருப்பார்கள்.ஸநகர் முதலானாரும் திருமழிசைப்பிரானும், அந்தர்யாமியிடம் ஊன்றியிருப்பார் கள். வால்மீகி முதலான மஹரிஷிகளும் குலசேகரப்பெரு மாளும்,

ஸ்ரீராமாவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள். பராசரர் அவர் குமாரர் வ்யாஸர் முதலான மஹரிஷிகளும், நம்மாழ்வாரும் பெரியாழ் வாரும், ஆண்டாளும், க்ருஷ்ணவதாரத்திலே ஊன்றியிருப் பர்கள். நராதாதிகளும், தொண்டரடிப்பொடியாழ்வாரும், திருப்பாணாழ்வாரும் கோயிலிலே (திருவரங்கத்திலே) ஊன்றி யிருப்பார்கள். ஸ்ரீ சௌநகபகவானும், கடைசி யாழ்வாரான இத்திருமங்கையாழ்வாரும், அர்ச்சாவதாரத்திலே ஊன்றியிருப் பார்கள்.

திருமங்கயாழ்வார் '86' திவ்யதேசங்களுக்கு மங்களா ஸாசனம் செய்துள்ளார்."ஒரு நல் சுற்றம்" பதிகத்தில் பரமபதத்திற்குச் செல்லக் காலம் நெருங்கிற்று, என்று எண்ணிய ஆழ்வார், புது மணப் பெண் புக்ககத்திற்குப் போகும் போது பிறந்த ஊரில் உள்ள உற்றார், உறவினர் களிடம், சொல்லிக்கொள்வது போலே, பல திருப்பதிகளைச் சேர்த்து அநுபவித்தார்.

பெருமானை அநுபவிக்க வேண்டுமென்று விரும்பும் ஆழ்வார், இவ்விருப்பம் கைகூடாவிட்டால் இதைக் கைவிடும் இயல்புடையவரல்லர். பெருமானும் திவ்யதேசங்களிலே உறைந்தருள்வது தனது அடியார்க்கு அருள் செய்வதற்கே யாதலால் ஆழ்வார் ஆங்காங்கே சென்று பகவானை அநுபவிக்கப்பாரிக்கிறார். அரசர் பல இடங்களில் சென்று தனது குடிமக்களுக்கு முகம்கொடுப்பது போலே ஸர்வேச்வரன் பல திவ்ய தேசங்களிலே நித்யவாசஞ் செய்கிறான். "அடியேன் உள்ளம் புகுந்த ஒருவன்" என்று பாராட்டி மகிழ்கிறார் ஆழ்வார். எம்பெருமானின் திருவடிகளுக்கு கைங்கர்யம் செய்வதற்குத் தடங்கலாக இருப்பவற்றைப் போக்கி அடிமை கொள்ள வேண்டுமென்று எம்பெரு மானை பிரார்த்திக்கிறார்.

ஏனமீனாமையோடு அரியும் சிறுகுறளுமாய் *
தானுமாய தரணித் தலைவனிடமென்பரால் *
வானும்மண்ணும்நிறையப் புகுந்துஈண்டிவணங்கும் * நல்
தேனும்பாலும்கலந்தன்னவர்சேர் தென்னரங்கமே.

(பெரிய திருமொழி 5-4-8)

எம்பெருமான் அவதாரங்கள் பல செய்து உபகரித்தவன் என்கிறார். பரமபதத்திலுள்ள நித்யசூரிகளும், பூமியிலுள்ளவர்களும், யாவரும் திரண்டு வந்து உள்ளே புகுந்து வணங்குவதாய், இனிய தேனும், பாலும் ஒன்றாகக் கலந்தது போலே பக்தர் அடையும் திருவரங்கமாகிய திவ்யதேசம் : வராகமாகவும், மீனாகவும், ஆமையாகவும், நரசிங்கமாகவும், அவதரித்தவனாய்ப் பின்னும் பூர்ணாவதாரமாக பூமிக்குத் தலைவனாகிய சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்த ஸர்வேச்வரன் நித்யவாஸம் செய்யுமிடம் ஸ்ரீரங்கம் ஆகும் என்கிறார்.

எம்பெருமானுடைய திருவடிகளை பற்றியவர்களுக்கு அருள் செய்வதற்கென்றே ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீவைகுண்டத்தை விட்டுத் திருவிந்தளூரிலே எழுந்தருளியிருக்கிறான். நாம் அங்கே போய் நன்றாக அநுபவிக்கலாம் என்று பாரித்தார் திருமங்கையாழ்வார். அக்ரூரன் போலே ஆர்வமுடன் செல்லும் இவரைப் பெருமான் திருக்கண்களால் நோக்கவுமில்லை, அணைத்துக் கொள்ளவுமில்லை, வந்த காரியம் யாதென்று கேட்கவுமில்லை. ஆதலால் திருவடி களில் அடிமை செய்ய வேண்டுமென்கிற பாரிப்பு பயனற்றது கண்டு ஆழ்வார், தலைவி தலைமகனோடு ஊடுவது போலப் பெருமானிடம் ஈடுபடுகிறார்.

**ஆசைவழுவாதேத்தும் எமக்கிங்கிழுக்காய்த்து* அடியோர்க்குத்**
**தேசமறிய உமக்கேஆளாய்த்திரிகின்றோமுக்கு ***
**காசினொளியில்திகழும்வண்ணம் காட்டீர் எம்பெருமான்! ***
**வாசிவல்லீர்! இந்தளூரீர் வாழ்ந்தேபோம்நீரே!**

- (பெரிய திருமொழி 4-9-4)

உமது திருமேனியைக் காண ஆசையுடைய எங்களுக்குக் காட்டாமல் தேவரீர் எவ்வாறு இருப்பீர் ? என்கிறார் ஆழ்வார்.

ப்ரேமத்தால் தேவரீரை சேவிக்க வேண்டும் என்ற ஆசை குறையாமல் துதிக்கும் இயல்புடையோம் அடியோங்கள். உமக்கு தாஸபூதரான எங்களுக்கு ஸ்தோத்ரம் செய்வதே

குற்றமாயிற்று. தேசமெல்லாம் அறியும் படியாக சேஷியான தேவரீருக்கே, தாஸபூதராய் திரிகிற எங்களுக்கு உருக்கின பொன்காசினுடைய ப்ரகாசத்தைக் காட்டிலும் விளங்குகிற வடிவழகைக் காட்டமாட்டீர்.எமக்கு ஸ்வாமியாய் கொண்டு திருவிந்தளூரில் எழுந்தருளியிருக்குமவரே! வாசியற முகங் கொடுத்து வந்த நிற்கிற விடத்தே வாசி வையா நின்றீர். உம்முடைய உடம்பு உம்மை ஆசைப்பட்டார்க்காக என்றிருந் தோம். அங்ஙன் இல்லையாகில் அத்தை நீரே கட்டிக்கொண்டு வாழும் என்கிறார்.

**சிந்தை தன்னுள் நீங்காதிருந்ததிருவே! மருவினிய *
மைந்தா! அந்தணாலிமாலே! சோலைமழகளிறே! *
நந்தாவிளக்கின்சுடரே! நறையூர்நின்றநம்பீ! என்
எந்தாய்! இந்தளூராய்! அடியேற் கிறையு மிரங்காயே.**

(பெரிய திருமொழி 4-9-2)

என் உள்ளத்துள் நீங்காது உறைந்தாய் நான் செய்வ தொன்றில்லை. நீயே குறையை நீக்க வேண்டும் என்கிறார். நெஞ்சிலே எப்போதும் பிரியாமல் உறையும் எங்கள் செல்வமே! அனுபவிக்க இன்பந் தரும் இளங் காளையே! அழகியதாய் குளிர்ந்துள்ள திருவாலியில் வாழும் திருமாலே! சோலைகளிலே சஞ்சரிக்கும் யானைக் குட்டி போன்றவனே! அணையாத விளக்கின் சோதி போன்றவனே! திருநறையூரில் எழுந்தருளி யிருக்கும் பூர்ணனே! திருவிந்தளூரில் எழுந்தருளியி ருப்பவனாய், எனக்கு ஸ்வாமியானவனே! தாஸனான எனக்கு கைங்கர்யத்தை அருள வேண்டும் என்கிறார்.

**தீஎம்பெருமான் நீரெம்பெருமான் திசையும் இருநிலனு
மாய்*எம்பெருமானாகி நின்றால் அடியோம் காணோமால்*
தாயெம்பெருமான் தந்தை தந்தையாவீர் * அடியோமுக்
கே எம்பெருமானல்லீரோ? நீர் இந்தளூரிரே!**

(பெரிய திருமொழி4-9-5)

தேவரீர் அக்நிக்கு அந்தர்யாமியாய் அதை நிர்வகிப்பீர்; நீருக்கு அந்தர்யாமியாய் நிர்வகிப்பீர்; திசைகள், பரந்த பூமி

இவற்றுக்கும் அந்தர்யாமியாகி நிர்வகிப்பீர், இவ்வாறு எழுந்தருளியிருந்தீராகிலும் அடியோங்கள் சேவியாதொழிந்தால் உமக்கு என்ன பலனுண்டு? தாயாகவும், ஸ்வாமியாகவும், தந்தைக்குத் தந்தையாகக் குலநாதனுமாய்க் கொண்டு திருவிந்தளூரில் எழுந்தருளியிருக்கும் தேவரீர் வேறு புகலில்லாதவர்களான நாங்கள் செய்யும் கைங்கர்யம் கொள்ளும் ஸ்வாமியன்றோ? என்று திவ்ய மங்கள விக்ரகத்தை ஸேவிக்க வேண்டும் எனப்பாரிக்கிறார்.

முன்னைவண்ணம் பாலின் வண்ணம் முழுதும் நிலை நின்ற*
பின்னை வண்ணம் கொண்டல் வண்ணம் வண்ணமெண்ணுங்கால்*
பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம் புரையும் திருமேனி*
இன்ன வண்ணமென்று காட்டீர் இந்தளூரிரே!

(பெரிய திருமொழி -4-9-8)

நினைத்தவாறெல்லாம் பெருமானோடு பரிமாறப் பெற்றிலோம் என்று கலங்கிய ஆழ்வாரிடம் பெருமான் "யாவரோடும் நினைத்தவாறெல்லாம் பழகுவதற்கன்றோ நாம் இராமனாகவும், கண்ணனாகவும், அவதரித்தோம் இந்த எளிமையுடன் நாம் திருவிந்தளூரில் உறைந்துள்ளோம் நினைத்தவாறு பழகவல்லோம்" என ஆழ்வார் களித்துப் பெருமானின் குணங்களை அநுபவிக்கிறார்.

இப்பாசுரத்தில் ஆழ்வார் தேவரீருக்குத்தனிப்பட்ட வண்ணம் மேகத்தின் வர்ணம் என்று சாஸ்திரங்கள் கூறும், அந்த வடிவைக் காட்ட வேணும் என்கிறார்.

திருவிந்தளூரில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியே! தேவரீருடைய வடிவழகை நினைக்கப்புகில்; முன்பு கிருதயுகத்தில் வடிவழகு பாலின் நிறமான வெண்மை நிறம்; பின்பு திரேதாயுகத்தில் வடிவழகு பொன்னின் சிவந்த வர்ணத்தையுடையது. பின்பு துவாபரயுகத்தில் வடிவழகு நீல மணியினுடைய வர்ணத்தையுடையது. எல்லாக்காலத்திலும் நிலையாக இருக்கும் வடிவானது மேகத்தினுடைய நிறமாகும்.

இவ்வாறு நான்கு வர்ணங்களோடு சேர்ந்திருக்கிற தேவரீருடைய திருமேனி இப்படிப்பட்ட நிறமுடையது என்று காட்டியருள வேணும் என்கிறார்.

மூன்று யுகங்களிலும் வடிவு; பால், பொன், மணி நிலை நின்ற வடிவு கொண்டல்

**பொன்னானாய்! பொழிலேழும் காவல் பூண்ட**
**புகழானாய் ! இகழ்வாய தொண்டனேன் நான் ***
**என்னானாய்! என்னானாய் ! என்னலல்லால்**
**என்னறிவன் ஏழையேன்?* உலகமேத்தும்**
**தென்னனாய்! வடவானாய்! குடபாலானாய்!**
**குணபாலமதயானாய்! இமையோர்க்கு என்றும்**
**முன்னானாய்! பின்னானார் வணங்கும் சோதி**
**திருமூழிக்களத்தானாய் ! முதலானாயே!**

(திருநெடுந்தாண்டகம் -10)

பக்தர் உள்ள இடத்திலே வந்து முகங்காட்டும் இயல்புடையவன் ஸர்வேச்வரன் எனினும் தமக்கு முகங் காட்டாததற்குக் காரணம் முன்பு மந்திரத்தால் வாழுதியேல் வாழலாம் என்று உபாயமாகச் சொல்லிய தாலோ என்று ஆழ்வார் கலங்குகிறார். நமது முயற்சியாலே நாம் பெருமானைப்பெற முடியாது. ஆனால் இவ்வாறு கூறியது உபாயமாகக் கொண்டன்று. உபாயமாக பற்றுவது பெருமானையே; உபாய பலமும் பெருமானே! ஆதலால் நமக்கு நலன்கள் அளிப் பதற்குத் தானே முந்துவன் பெருமான் என்கிறார் ஆழ்வார்.

உலகத்தார் தோத்திரம் செய்கின்ற தெற்குத் திருமலையான திரு மாலிருஞ்சோலையில் நின்றருளியவனே! வடக்கிலுள்ள திருவேங்கட மலையில் நின்றாள்பவனே! மேல் திசையில் திருவரங்கத்தில் கண்வளர்தருள்பவனே? கீழ்த்திசையில் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளி இருபப வனாய் மதயானை போல் செருக்குடையவனே! நித்தியசூரிகள் எக்காலத்திலும் கண்டு அநுபவிக்குமாறு முன்னேயிருப்பவனே!

அவதாரங்களுக்குப் பிற்பட்டவர் களும் வணங்கவென்று சோதி மயமாய்த் திருமூழிக் களத்தில் உறைவனே! உலகங்களுக் கெல்லாம் காரண மானவனே! எல்லாபடியாலும் பொன்போலே எனக்கு உபகரிக்கு மவனே! ஏழு உலகங்களையும் காப்பாற்றுவதால் கொண்ட புகழுடையவனே! இகழ்வே உருவமாய்த் தாஸபூதனான நான் என்னுடைய ஆனையே! என்னுடைய ஆனையே! என்று சொல்லுமித்தனையல்லால் உன் விஷயத்தில் அதிக சபலமுடையேனானேன். எனினும் உன்னுடைய குண சேஷ்டிதங்களில் எத்தை அறிவேன்?

பொழில் - உலகம், குணபாலமதயானாய்! நாதமுனிகளி டம் ஈடுபாடு கொண்ட உடையவர். கீழ்த் திசையிலுள்ள காட்டுமன்னார் கோயில் என்பர். தென்னானாய் முன்னானாய் என் ஆனாய் என்று சொல்லுவதோடு ஆழ்வார் நான்கு திசை களுக்கும் திக்கஜங்களாக நான்கு திவ்யதேசத்து எம்பெருமானைக் கூறுகிறார்.

..........................................................

காரார் புரவியேழ் பூண்ட தனியாழி
தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டு புக்கு
ஆராவமுதமங்கெய்தி – அதினின்றும்
வாராதொழிவதொன்றுண்டே? அது நிற்க
ஏரார் முயல் விட்டுக் காக்கைப்பின் போவதே?

சிறிய திருமடல்

கார் - மேகபதம், புரவி - குதிரை, ஆழி - சக்கரம்.

வீடு என்ற புருஷார்த்தம் உங்களுக்கு உண்டென்று தோன்றுகிறதோ! மேக மண்டலத்தில் குதிரைகளின் சஞ்சாரம், அவை ஏழு பூட்டிய தேர் ஒரே சக்கரம்; அதில் நிறைந்து விளங்கும் உஷ்ண கிரணங்களையுடைய சூரியனின் மண்டலத்தைக் கீண்டு மேலே பரமபதத்தில் புகுந்து அங்கே திருப்தி பிறவாதவாறு அமுதமாகிய பரம் பொருளை அடைந்து

அவ்வனுபவத்தினின்றும் திரும்பி வராாமலிருத்தல் என்பது ஒன்று உண்டோ? அஃதிவ்வாறிருக் கட்டும்.

நிலத்திலுள்ள முயலைத் தொடராமல் வானிற் மரக்கிளை களில் சஞ்சரிக்கிற பரக்கும் காக்கை கைப்படுவதானாலும் அது உபயோக யோக்ய முள்ளதோ? உபயோகமில்லாத காக்கையின் பின்னே வில்லெடுத்து திரிவதோ?

அர்ச்சா நிலை பற்றுதற்கு எளிதாயிருக்க அதைவிட்டுப் பரத்துவத்தை நாடுவதோ! என்பது கருத்து.

---

**முதலியாண்டானின் அர்ச்சாவதார ஈடுபாடு :-**

எம்பெருமானாரின் நியமனத்தினால் முதலியாண்டான் நபெருமாளின் திருமேனி உபசாரத்தையும், திருப்பவள உபசாரத்தையும் ஆராய்ந்து நடத்துகையிலே திருப்பாணரால் "கோவலனாய் வெண்ணையுண்டவாயன்" (அமலனாதி பிரான்10) என்னபட்டமையால் கண்ணனான இவனுக்கு நாவல் பழம் புசிப்பதில் அதிக ஆசையுண்டு என்று நல்ல ஏட்டுத் தயிர் சேர்த்துக் கலந்த ததியோதநத்தையும், நல்ல கனிந்த நாவல் பழங்களையும், அமுது செய்விக்கப் பண்ணினார். அன்று உடையவர் நம்பெருமாளைத் திருவடி தொழுதபோது பெருமாள் திருமுகம் வாடி யிருக்கக் கண்டு, பெருமாள் என்ன அமுது செய்தார் என்று விசாரித்த அளவில் தத்யோதனத் துடன் நாவல் பழம் அமுது செய்ததால் தான் முகவாட்டம் என்று கண்டு இப்படி அமுது செய்வித்த ஆண்டானை முனிந்தார். கருடவாஹன பண்டிதர் என்னும் வைத்தியரை அழைத்து பெருமாளுக்கு கஷாயமிட்டுச் சிகித்ஸை பண்ண பெருமாளும் பண்டு போல ஸேவை ஸாதித்தார். அதன் பின்பிறே தந்வந்தரி ஸந்நிதி ஏற்பட் டது.

இதனால் அர்ச்சாவதாரத்தில் எம்பெருமானின் ஸௌ குமார்யத்தையும் ப்ரத்யக்ஷமாக் கண்டறிந்த ஆண்டான். அங்கு

அதிகமான பரிவையுடையவர் ஆனார்.(இந்தச் சரித்திரம் கோயிலொழுகில் உள்ளது. உடையவரின் திக்விஜயத்திற்கு முன்னர் நடந்தது)

திருவாய்மொழியில் (3-6-9) "நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும் நீள் கடல் வண்ணனே" என்ற சொற்றொடர்க்கு ஏனைய ஆசார்யர்களும் "நெஞ்சினால் நினைப்பான் யவன் நீள் கடல் வண்ணன் அவனாகும்" என்று அந்வயித்துப் பொருள் கொண்டனர். செஞ்சினால் நினைப்பான் என்றது பக்தன் தன் ருசிக்கேற்ப ஏற்றியமைத்துப் பூசிக்கும் அர்ச்சையான எம்பெருமானை நீள் கடல் வண்ணன் அவன் ஆகும் - அதாவது பரமபுருஷன் அந்த அர்ச்சா வடிவில் தன்னை அமைத்துக் கொள்கிறான் என்றபடி "நெஞ்சினால் நினைப்பான் யவன் அவன் நீள் கடல் வண்ணனாகும்." என்று அந்வயித்துப் பொருள் கூறுவர் முதலியாண்டான் பக்தன் ஏறியருளப் பண்ணிய அர்ச்சை, எம்பெருமான் நீள்கடல் வண்ணனான பரம புருஷன் ஆகும் என்றபடி.

நம்மால் அமைக்கப்பட்ட திருமேனி தானே என்ற எண்ணம் அர்ச்சா விஷயத்தில் கூடாது. இது பரம் புருஷனுடைய பஞ்சோபநிஷன்மயமான அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹம் என்று போற்ற வேண்டும். "அங்குத்தைக்கு (பரமபதத்தில் இருக்கும் இருப்பு) உகந்து வர்த்திக்கும் நிலையான அர்ச்சையை விபூதியாக (ஸொத்தாக) நினையாதே, இங்குத்தைக்கு அவ்விடத்தை (பரமபதத்தை விபூதியாக நினையுங்கோள்" என்பது முதலியாண்டான் ஸ்ரீஸூக்தி.

குணபூர்த்தி உள்ள இடம் (குணங்கள் முழுமையாக விளங்குமிடம்) அர்ச்சா அவதாரமே. இதுவே மேன்மை யுடைத்து ஆதலால் பல குணங்களுக்கு ப்ரகாசமில்லாமல் உள்ள பரமபதநாதன் குறைந்தவனே. ஆகையால்

பரமபதத்தில் இருப்பு அர்ச்சைக்கு சேஷமாயிருக்கு மென்பது ஆண்டானின் துணிவு, அர்ச்சாவதார எம்பெருமானைப் பூர்ணாவதாரமாக எண்ணிப்போற்றுபவனே உண்மை ஸ்ரீவைஷ்ணவன் என்பர் நமது ஆண்டான். அம்சமாக அல்லாமல் முழுமையாக அர்ச்சையில் எம்பெருமான் உளன் என்று திடமான நம்பிக்கை அவசியம் வேண்டும்.

முதலியாண்டான் எம்பெருமானாரை உய்வுக்கு உபாய மாகவும், உபேயமாகவும் கொண்டவர். ஆயினும், கூடவே எம்பெருமானின் பொருந்த விட்ட திருவடிகளை உபாயமாகவும், திருமேனியை உபேயமாகவும் கொண்டி ருப்பர். பெருமாள் திருக்கையில் திவ்யாயுத ஆழ்வார்களை உடையவரில்லாத போது உசாத்துணையாகப் பற்றி இருப்பாராம் ஆண்டான் இதற்கு காரணம் எம்பெருமானைத் தவிர வேறு எவரையும் வேண்டாத அநந்யப்ரயோஜனரான பாகவதர் இந்த ஞாலத்தில் கிடைக்கமாட்டார்கள். ப்ரபந்நனுடைய "எம்பெருமானே ரக்ஷகன்" என்ற துணிவை (அத்யவாஸாயத்தை) எப்பொருளும் கிட்டாத பஞ்சகாலத்தில் தான் காணமுடியும். இவன் கைமாண்டு கிடக்கையாலே, இவன் அநுஷ்டானத்தை விசேஷ நாட்களில் மட்டுமே காண முடியும். அநந்ய ப்ரயோஜன அதிகாரிகளை நித்திய சூரிகள் நடுவிலே தான் காண முடியும். அதனால் திவ்யாயுதாழ்வார்களை உசாத்துணையாகக் கொண்டிருப்பாராம் ஆண்டான்.

அடியார்கள் அநுபவித்து மகிழ்வதற்கென்றே அர்ச்சா வதார எம்பெருமான் பல உத்ஸவங்களைக் கண்டருளுகிறான். உத்ஸவம் என்னும் சொல்லே மகிழ்வளிப்பது என்று பொருள் ஆகும். அர்ச்சையில் மட்டற்ற பரிவுடைய பக்தர்களுக்கோ என்ன நேருமோ என்ற பயமே அதிகமாக,இருக்கும். அடியார் குழாம் எனப்படும் கூட்டத்தில் மெய்யடியார்கள் மிகச் சிலரே. "நான்" "எனது" என்ற எண்ணத்தில் ஊன்றிய ஸம்ஸாரிகளே அதிகம்.

அர்ச்சக பராதீனனாய்த் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளாமல் எதற்கும் பிறர் கையை எதிர்பார்த்திருக்கும் இந்த அர்ச்சா நிலையில் உள்ள எம்பெருமான் பரமஸூகுமாரமான திருமேனியுடன் துஷ்டர் பலர் கண்ணுக்கும் இலக்காகி உலாவுகிறார். "அவத்தங்கள் விளையும் என்சொற்கொள் அந்தோ!" என்று நம்மாழ்வார் தலைமகளாக இருந்து கண்ணனை பசு மேய்க்கப்போக வேண்டாம் என்று தடுக்கிறார். இங்கு பரிவினால் தடுப்பார் யாருமில்லை. தீய புத்திக் கஞ்சன் ஏவிய அசுரர்களையொத்த ஸம்ஸாரிகள் நடுவே பவனி வருகிறான். இப்படி பத்து நாட்கள் பிரம்மோத்ஸம் கண்டருளித் தீர்த்வாரியாகி கருவரையின் காப்பிற்குள் சென்றான் திருவரங்கன். ஒரு சமயம், ஒரு ஆபத்தும் நேராமல் நம்பெருமாள் பத்திரமாக ஸ்வஸ்தானம் சேர்ந்தது கண்டு மட்டற்ற மகிழ்ச்சி கொண்டு, ஆண்டான், தன்னைப் போல பரிவான எம்பாரைக் கண்டார். தம் மகிழ்ச்சிக்கு போக்குவீடாக இருவரும் ஒருவரையொருவர் தண்டனிட்டுத் தழுவிக் கொண்டனராம்.

அஹங்கார மமகார தூஷிதராயிருப்பார்-"பத்துக் கோடிப்பேர் நடுவே அதிஸூகுமாரமான திருமேனியைக் கொண்டு பத்து நாள் (வெளியில்)எழுந்தருளி அபாயமின்றி ஆஸ்தானத்துக்கு எழுந்தருளித் தப்பினபடி கண்டீரே" என்று இருவரும் நெஞ்சின் அடித்தளத்திலிருந்து உணர்ச்சியுடன் சொல்லித் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்ததை நஞ்சீயர் நேரில் கண்டு சொன்னதாக ஐதிஹ்யம் காண்கிறோம். இவர்களுடைய நிலையை வன்னெஞ்சர்களான நம்போல்வார் புரிந்து கொள்ளவே முடியாது.



## 5. திவ்ய தேசத்தின் நிலைகள்:

இவ்வாறு அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசங்களை கீழ்க் கண்டவாறு வகைப்படுத்தலாம்.

ஸ்வயம் வ்யக்தம் - தானாகவே ஆவிர்ப்பவித்தது.
தைவம் -ப்ரம்மாதி தேவர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது.
ஸைத்தம் - ஸித்தர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது
பௌராணிகம் - புராணங்களில் விரித்துரைக்கப்பட்டது.
மானவம்-மன்னர்களாலும்,அடியார்களாலும் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது.
அபிமானஸ்தலம்-ஆச்சார்ய புருஷர்களால் அபிமானிக் கப்பட்டது.

108 திவ்ய தேசத்தில் ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திருமலை, ஸாளக்கிராமம், நைமிசாரண்யம், வானமாமலை, புஷ்கரம், நரநாராயணாச்ரமம் (பத்ரிநாத்) என்கிற எட்டு திவ்யதேசங்கள் ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரங்கள்.

இத்தகைய அமைப்பிலோ, அல்லது இதில் குறிப்பிடாத வாறு வேறு வகையில் கட்டப்பட்ட ஸ்தலத்திற்கு ஆழ்வார்களின் பாசுரஞ் சூட்டப்பட்டதாகில், அப்பெருமாள் மங்களாசாஸனம் செய்யப்பட்டவராக ஆகிறார். அத்தலம் திவ்யதேசமாகிறது அங்கு எம்பெருமான் நித்ய வாசஞ்செய்கிறான். எம்பெரு மானின் அம்சங்களே ஆழ்வாராக அவதரித்தார்கள். அதாவது எம்பெருமானின் சார்ங்கம் என்னும் வில்லே ஒரு ஆழ்வாராக அவதாரம், பிராட்டியே ஸ்ரீஆண்டாளாக அவதாரம் செய்தார். இவ்விதம் எம்பெருமா னின் அம்சங்களே ஆழ்வாராக வந்து மங்களாசாஸனம் செய்ததால் அத்தலம் திவ்ய தேசமாகும்.

பரமபதத்திலிருந்து வரப்பெற்ற திவ்யசூரிகளால் அவர்களது திவ்யப்ரபந்தங்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்டவை திவ்யஸ்தலங்களாகும்.

நாராயண மந்திரம் எனப்படும் திருமந்திரம் எட்டெழுத்துக் க்ளால் (எட்டிழைகளால் ஆனது) இந்த திவ்ய தேசங்களும் சப்த (ஏழு) புண்யங்கள் எனப்படும் புண்யங்களுடன், ஆழ்வார்

களின் மங்களாசாஸனத்தையும் சேர்த்து எட்டெழுத்தான திருமந்திரத்தின் சக்தியைப் பெற்று அஷ்டாக்ஷர மந்திரத்தின் பலனைத் தரக்கூடிய ஸ்தலங்களாக அமைகிறது.

**ஏழு புண்ணியங்கள் என்பவை:-**
**க்ஷேத்ரம் வநம் நதி ஸிந்து புறம்**
**புஷ்கரிணி ததா விமானம்**
**ஸப்த புண்யஞ்ச யத்ர தேசே**

இவ்வேழு புண்ணியங்களும் ஒருங்கே அமையப் பெற்று ஆழ்வார்களின் மங்களாசாஸனமும் ஒரு தலத்திற்கு அமையுமாயின் அது அஷ்டாக்ஷர மந்திரம் நிலை பெற்ற இடமாகும். இத்தனையும் ஒருங்கே கூடிய ஸ்தலத்தை திவ்ய தேசமெனச் சொல்வதில் தடையுமுண்டோ? ஆழ்வார்கள் பன்னிருவரால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட திவ்ய தேசங்கள் 108 . இந்த திவ்ய தேசங்கள் அதில் அமைந்துள்ள விமானங்களினாலும் சிறப்பும், மேன்மையும் படைத்தன வாகும். மூலஸ்தானத்திற்கு மேலே (கர்ப்பக்கிரகத்திற்கு மேல்) சிற்ப சாஸ்திர விதிகட்குட்பட்டு அமைக்கப்பட்டுள்ள கோபுரமே விமானமாகும்.

108 திவ்ய தேசங்களில் 96 வகையான விமானங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன. ஆகம சாஸ்திரத்தில் கூறப்பட்ட இவ்வனைத்து விமானங்களும், முக்கியமானவைகள் தான் என்றாலும் கீழ்க்கண்டவைகளை மிக முக்கியமானவைகள் என்று சொல்லலாம்.

1. ப்ரணவாக்ருதி விமானம்
2. விமலாக்ருதி விமானம்
3. சுத்தஸத்வ விமானம்
4. உத்பலா விமானம்
5. தாரக விமானம்
6. சுகநாக்ருதி விமானம்
7. வைதிக விமானம்
8. சௌந்தர்ய விமானம்
9. புஷ்கலாவர்த்த விமானம்

10. வேத சக்ர விமானம்
11. சஞ்சீவி விக்ரஹ விமானம்
12. அஷ்டாங்க விமானம்
13. புண்ய கோடி விமானம்
14. ஸ்ரீகர விமானம்
15. முகுந்த விமானம்
16. விஜய கோடி விமானம்
17. சிம்மாக்ர விமானம்
18. தப்த காஞ்சன விமானம்
19. ஹேம கூட விமானம்.

இதில் அஷ்டாங்க விமானம் என்பது பரமபதத்தில் அமைந்துள்ள விமானத்தின் அமைப்பேயாகும், என்பதும், ப்ரணவாக்ருதி விமானம், என்பது தேவர்கள் அனைவரும் தொழும் தலங்களில் உள்ள விமானத்தின் அமைப்பு எனவும், ஆகமம் கூறுகிறது. இந்த விமானங்களைச்சேவித்த மாத்திரத்திலேயே பாவநாசம் உண்டாகிற தென்பதும், இதன் அடிப்படையிலேயே **கோபுர தரிசனம் கோடி புண்ணியம்** என்னும் பழமொழி உண்டாயிற்றெனவும் ஆன்றோர் மொழிவர்.

இந்த 108 திவ்ய தேசங்களில் இரண்டு ஸ்தலங்கள் இந்நிலவுலகில் பார்க்க முடியாதவைகளாகும். ஒன்று பரமபதம் மற்றொன்று பாற்கடல்.

எஞ்சிய 106 திவ்ய தேசங்களில் வட நாட்டு ஸ்தலங்கள் 12 இதில் திருமலை என்னும் திருவேங்கடமும், அஹோபிலம் என்னும் சிங்கவேள் குன்றமும், விந்தியமலைக்கு இப்பால் தென்னாட்டிலேயே அமைந்துள்ளன. எனவே தென்னாடு மட்டும் 96 திவ்ய தேசங்களுடைத்து, இவைகள் தென்னாட் டில் அமைந்ததற்கு ஒரு காரணமுண்டு (இதற்கு தஞ்சை என்.எஸ் தாத்தாச்சார்யாரின் திருநறையூர் ஸ்தல வரலாற்று நூலில் காணப்படும் கருத்து அப்படியே இங்கு தரப்படுகிறது).

முற்காலத்தில் புண்ணிய ஸ்தலங்களை மனிதர்கள் தாங்கள் நினைத்த இடத்தில் ஏற்படுத்தவில்லை. பூமியின் உள்ளே மனித ஜீவாதார சக்திக்கு தேவையான ஒரு நரம்பு

குறிப்பிட்ட இடத்தில் மட்டும் குறுக்கே ஓடி இருக்குமாம். அதற்குத்தான் தரித்ரீசாரம் எனப்பெயர். அது நியூட்டன் கண்டுபிடித்த புவிஈர்ப்பு சக்தியின் பெரும் பகுதியாகும். இத்தகைய இடம் நம் இந்தியாவில் சிறப்பாகத் தென்பகுதியில் அதிகமாக இருப்பதால் தான் இந்தியாவையே உண்மையான ப்ருத்வி (பூமி) என மகாகவி காளிதாசனும் கூறினார். ஆகவே தான் அந்த நீரம்பு இழையோடும் தென்னாட்டின் பகுதியில் ஆலயங்கள் பல தோன்றின.

இந்த 108 திவ்யதேசங்கள் எங்கெங்கு உள்ளன, என்பது பற்றி திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி துதிப்பாடலில் காப்புச் செய்யுளாக அமைந்துள்ளது.

ஈர் இருபதாம் சோழம்; ஈர் ஒன்பதாம் பாண்டி; ஓர் பதின்மூன்றாம் மலைநாடு ; ஓர் இரண்டாம் சீர்நடுநாடு ஆறோடு ஈர் எட்டுத்தொண்டை; அஃவ்வடநாடு ஆறு இரண்டு கூறு திருநாடு ஒன்றாகக் கொள்.

அதாவது

| | | | |
|---|---|---|---|
| சோழநாட்டில் | - | 40 | திவ்ய தேசங்கள் |
| பாண்டிய நாட்டில் | - | 18 | திவ்ய தேசங்கள் |
| மலைநாட்டில் | - | 13 | திவ்ய தேசங்கள் |
| நடு நாட்டில் | - | 2 | திவ்ய தேசங்கள் |
| தொண்டை நாட்டில் | - | 22 | திவ்ய தேசங்கள் |
| வட நாட்டில் | - | 12 | திவ்ய தேசங்கள் |
| திரு நாட்டில் | - | 1 | திவ்ய தேசங்கள் |
| | | 108 | திவ்யதேசங்கள் |

இந்த 108 திவ்ய தேசங்களில் 106 ஐச் சேவித்தவர்களை அவர்கள் இப்பூவுலகில் வாழ வேண்டிய காலகட்டாயம் முடிவுற்றதும் எம்பெருமானே மற்ற இரண்டு திவ்ய தேசங்கட்கும் அழைத்துச் சென்று காட்சி தருகிறார் என்பது தலையாய வைணவக் கொள்கையாகும்.

12 ஆழ்வார்களில் மதுரகவியாழ்வார் திவ்ய தேசங்கள் எதனையும் மங்களாசாஸனம் செய்யவில்லை. அவர் நம்மாழ்வாரைப் பற்றி மட்டும் ஒரு பதிகம் அருளிச் செய்தார். "வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த மாறன்" என்று நம்மாழ்வாரிடம் மட்டும் ஆழங்கால் பட்டு அவர் ஆழ்வாரானார். மீதி பதினொரு ஆழ்வார்களும் கீழ்க்கண்டவாறு மங்களா சாஸனம் செய்துள்ளனர்.

**மங்களாசாஸனம் செய்த திவ்யதேசங்களின் எண்ணிக்கை:**

| | |
|---|---|
| பொய்கையாழ்வார் | 6 |
| பூதத்தாழ்வார் | 13 |
| பேயாழ்வார் | 15 |
| திருமழிசையாழ்வார் | 17 |
| நம்மாழ்வார் | 37 |
| குலசேகராழ்வார் | 9 |
| பெரியாழ்வார் | 18 |
| ஆண்டாள் | 11 |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | 4 |
| திருப்பாணாழ்வார் | 3 |
| திருமங்கையாழ்வார் | 86 |

இந்த 108 திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் திருமால் மூன்று நிலைகளில் பக்தர்கட்கு காட்சியளிக்கிறார். அவைகள் நின்ற திருக்கோலம், அமர்ந்த திருக்கோலம், சயன (கிடந்த) திருக்கோலம்.

அதாவது பரம்பொருள் ஸ்ரீவிஷ்ணு அமர்ந்த திருக்கோலத்தில் சகல உலகங்களையும், அவ்வுலக இயக்கக் காரணிகளான தேவர்களையும், அதிதேவதைகளையும், படைக்க எண்ணிய மாத்திரத்தில் எழுந்து நின்றார். அவ்வளவிலேயே அனைத்தும் படைக்கப்பட்டு விட்டன. இவ்வியக்கம் தொடர்ந்து முறைவழுவாது செயல்பட அறிதுயில் திருக்கோலத்தில் சயனித்து அனைத்தையும் நிர்வகித்துக் கொண்டே அறிதுயிலில் உள்ளார்.

திருமாலின் 5 வகையான ப்ரதிஷ்டைகளைப் பற்றிய பாஞ்சராத்ர பாத்மத்தில் கீழ்க்கண்டவாறு சொல்லப்பட்டுள்ளது.

1.ஸ்தாபனா - திருமாலை நின்ற திருக்கோலத்தில் அமைத்து தொழுவது

2.அஸ்தாபனா - அமர்ந்த திருக்கோலத்தில் அமைப்பது

3.ஸமஸ்தாபனா - பள்ளி கொண்ட திருத்கோலத்தில்

4.பரஸ்தாபனா - வாகனங்களில் பற்பல ரூபங்களில் அமைப்பது

5.ப்ரதிஷ்டாபனா - சன்மார்ச்சையுடன் அமைப்பது.

இவ்வகைத் திருக்கோலங்களில் ஆலயங்களில் அமைக்கப்படும் திருமால், யோகம், போகம், வீரம், ஆபிசாரிகம் என நால்வகைப்படுவர். யோகிகள் யோகமூர்த்தி களையும், குடும்பத்தில் உள்ளவர்கள் போக மூர்த்திகளையும், வீரர்கள் வீர மூர்த்திகளையும், பகைவர்கட்குத் துன்பம் விழைவிக்க விரும்புபவர்கள் ஆபிசாரிக மூர்த்திகளையும் வணங்குவர். இன்று போக, யோக மூர்த்திகளே பழக்கத்தில்அமைந்துள்ளன. வீர மூர்த்திகள் மிக அரிது. ஆபிசாரிக மூர்த்திகள் இன்று இல்லவே இல்லை. இதனை வேண்டும் போது அமைத்து அழித்து விடுவதுண்டு.

108 திவ்ய தேசங்களில் நின்ற திருக்கோலத்தில் எம்பெருமான் எழுந்தருளியுள்ள தலங்களின் எண்ணிக்கையே அதிகமாகும். நின்றது 67

| | | |
|---|---|---|
| இதில் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம் | - | 39 |
| மேற்கு நோக்கி நின்ற திருக்கோலம் | - | 12 |
| தெற்கு நோக்கி நின்ற திருக்கோலம் | - | 14 |
| வடக்கு நோக்கி நின்ற திருக்கோலம் | - | 2 |

இதே போல் அமர்ந்த திருக்கோலத்தில் உள்ள ஸ்தலங்களின் எண்ணிக்கை 17. இதில்,

| | | |
|---|---|---|
| கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | - | 13 |
| மேற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | - | 3 |

தெற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - இல்லை
வடக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் - 1

சயன திருக்கோலத்தில் அமைந்த ஸ்தலங்களின் எண்ணிக்கை 24. இதில்,

கிழக்கு நோக்கிய சயனம் - 18
மேற்கு நோக்கிய சயனம் - 3
தெற்கு நோக்கிய சயனம் - 3
வடக்கு நோக்கிய சயனம் - இல்லை

திருமாலின் சயனங்கள் 10 வகைப்படும். அவைகள்

| | |
|---|---|
| 1. ஜல சயனம் | 3. போக சயனம் |
| 2. தல சயனம் | 4. தர்ப்ப சயனம் |
| 5. புஜங்க(சேஷ)சயனம் | 8. பத்ர(ஆலமரத்து) சயனம் |
| 6. உத்தியோக சயனம் | 9. மாணிக்க சயனம் |
| 7. வீர சயனம் | 10. உத்தான சயனம் |

எந்தெந்த தலத்தில் எவ்வகையான சயனம் என்பதை அந்தந்த ஸ்தல வரலாற்றில் காணலாம்.

ஒரே சன்னிதியில் நின்ற, இருந்த, கிடந்த என்ற மூன்று திருக்கோலம் உண்டு. அவ்வாறு அமைந்த ஸ்தலங்கள் பல உண்டு. உதாரணத்திற்கு திருநீர்மலை, திருக்கோட்டியூர், மதுரை, கூடலழகர், திருவல்லிக்கேணி போன்றவைகளைக் கூறலாம்.

பொதுவாக திசையைக் குறிக்குமிடத்து அவைகள் மூலவர் எந்தெந்த ஸ்தலத்தில் எந்த திசை நோக்கியுள்ளாரோ அவ்வண்ணமே மேற்கண்ட கணக்கீடு கூறப்பட்டுள்ளது. அமர்ந்த திருக்கோலத்தில் உள்ள பெருமாள் ஒரு கரத்தை மேல்நோக்கி (அருளும் முகத்தான்) வைத்துள்ளதற்கு அபயஹஸ்தம் என்று பெயர். மற்றொரு கரத்தை கீழ் நோக்கி வைத்திருப்பதற்கு தன்னடிக் கீழ் சரணடைந்து உய்யுங்கள் என்பது பொருள்.

108 திவ்யதேசங்களில் நின்ற திருக்கோலத்திற்கு

வேங்கடவனையும், அமர்ந்த திருக்கோலத்திற்கு பத்ரி நாதனையும், கிடந்த திருக்கோலத்திற்கு திருவரங்கத்து அரங்கனையும் தனித்துவப்படுத்தலாம் என்று இருந்தாலும், திருமழிசையாழ்வார் நின்ற, இருந்த, கிடந்த திருக்கோலங்கட்கு காஞ்சியில் உள்ள இந்த மூன்று ஸ்தலங்களையே (ஊரகம், பாடகம், வெஃகா) குறித்து மங்களாசாஸனம் செய்துள்ளார் என்று கொள்ளலாம்.

"நின்றது எந்தை ஊரகத்து இருந்தது எந்தை பாடகத்து *
அன்று வெஃகணைக் கிடந்தது என்னிலாதமுன்னெலாம் *
அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன் *
நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே"
(திருச்சந்தவிருத்தம் - 64)

108 திவ்யதேசங்களில் மிக அதிக அளவில் 40 திவ்ய தேசங்களைத் தன்னகத்தே கொண்டு செழித்தோங்கின செந்நெல் வயல்களினூடே செம்மாந்து நிற்கிறது சோழநாடு. சோழ நாட்டுத் திருப்பதிகள் யாவும் தரையோடு கட்டப்பட்டு பெரும்பாலும் ஒரே மாதிரியான அமைப்பைக் கொண்டவை. பாண்டி நாட்டுத் திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள பெருமாளை மாடி வீட்டு பெருமாள்கள் என்று சொல்லலாம்.

அதாவது பாண்டி நாட்டுத்திருப்பதிகள் யாவும் இரண்டடுக்கு மூன்றடுக்கு என்று சொல்வது போல் இரண்டு மூன்று தளங்கள் உடையதாய், முதல் தளத்தில் ஒருதிருக் கோலத்திலும், இரண்டாவது தளத்தில் பிறிதொரு திருக்கோலத் திலும், மூன்றாவது தளத்தில் வேறொரு திருக்கோலத்திலும் எழுந்தருளியிருப்பார்.

(உ-ம்) திருக்கோட்டியூரில் முதல் தளத்தில் பாற்கடல் வண்ணனாகவும், 2ஆவது தளத்தில் நின்ற நாராயணனாகவும், மூன்றாவது தளத்தில் அமர்ந்த திருக்கோலத்தில் பரமபதநாத னாகவும் வீற்றிருக்கிறார்.

அதே போல் கூடல் மாநகரில் முதல் தளத்தில் வீற்றிருந்த திருக்கோலத்தில் வ்யூக சுந்தரராஜனாகவும், 2ஆவது தளத்தில்

நின்ற திருக்கோலத்தில் சூரியநாராயணன் என்னும் திருநாமத்திலும், 3ஆவது தளத்தில் பள்ளி கொண்ட பெருமானாகவும் காட்சியருளுகிறார். இது போன்ற அடுக்கு மாடி திருப்பதிகள் சோழநாட்டில் இல்லையென்று சொல்லலாம்.

மேலும் பாண்டி நாட்டுத் திருப்பதிகள் மலை, கடல், ஆறு என்ற மூன்று இயற்கை சூழ்நிலைகளிலும் அமைந்துள்ளன. புல்லாணி - கடல், மாலிருஞ்சோலை - மலை, ஆழ்வார் திருநகரி - தாமிரபரணி என்று இயற்கையின் மூன்று வகைப் பிரிவுகளின் அரவணைப்பில் கிடக்கின்றன.

சோழநாட்டு எம்பெருமானுக்கோ காவிரிக்கரையே கிடக்கை, காவிரிக்கரையே கிடக்கினும் தெவிட்டாத தீஞ்சுவைக் கனிகளென்று விளங்கும் திருமங்கை மன்னனின் திவ்ய மங்களாசாஸனத்தில் திளைத்திருப்பவர்கள். அரங்கனைவிட அழகு பொருந்திய ஆதனூர் ஆண்டாளுக்கும், ஐயன், திருமங்கையோடு உரையாடி மகிழ்ந்த இந்தளூரான், திருமழிசைக்குக் கட்டுப்பட்ட ஆராவமுதன், பேரழகுப் பொலிவில் திகழும் சித்திரக்கூடத்தான், உலகளந்த தாடாளன், ஆமருவி நின்ற கோபாலன் ஆகிய பெருமான் களோடு நிற்பதோடன்றி, இதற்கெல்லாம் திலகமிட்டாற்போல் திவ்யம் மிளிரும் திருநாங்கூர்ப் பதிகள் என்று சொல்லப்பட்ட ஒன்றுக்கொன்று மருங்கமைந்த 11 திருப்பதிகளையும் தன்னகத்தே கொண்டது.

இங்கு எழுந்தருளியுள்ள பெருமான்களோ இயற்கை யோடிணைந்து எழில் கொஞ்ச வீற்றிருப்பவர்கள். எங்கு நோக்கினும் பசுமையான வயல்கள் சூழ இளந்தென்றல் வீச, பறவையினங்கள் கானம்பாட பக்தர்கள் பண்ணிசைக்க பரம பவித்ரமாக வீற்றிருப்பவர்கள். மேலும் இதன் விரிவான விளக்கங்களை திவ்ய தேச ஸ்தல வரலாற்றில் காணலாம்.



## இயல் - 2

## அண்டர்கோன் அணியரங்கன்

திருமாலின் திவ்ய தேசங்கள் 108ல் இத்திருவரங்கம் தலையாயது. சோழநாட்டுத் திருப்பதிகளுள் முதன்மை யானது. கோயில், திருமலை பெருமாள் கோயில் என்று பிரதானமாகச் சொல்லப்பட்ட மூன்றினுள் முதன்மையானது. அதாவது "கோயில் என்றால் ஸ்ரீரங்கம்". "திருமலை என்றால் திருப்பதி" , "பெருமாள் கோயில் என்றால் காஞ்சி வரதராஜப் பெருமாள் சன்னிதி "ஆகிய திவ்யதேசங்களைக் குறிக்கும்.

பெரியகோயில் என்றும் பூலோக வைகுண்டம் என்றும், போகமண்டபம் என்றும், போற்றப்படும் இத்தலத்தை, அண்டர் கோன் அமரும் அணியரங்கமென்றும் திருவரங்க மென்றும் செழுநீர்த் திருவரங்கமென்றும், திட்கொடிமதிள் சூழ்த் திருவரங்கமென்றும் ஆழ்வார்கள் வாய்வெருவி மகிழ்வர்.

இராமபிரான் பட்டாபிஷேகம் முடிந்தபிறகு அனைவருக் கும் பரிசுகள் வழங்கினார். ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு தன் குலத்தில் ஆராதித்து வந்த திருவாராதனப் பெருமாளைக் குடலையோடு பரிசாகக் கொடுத்தருளினார்.

ஸ்ரீவிபீஷணாழ்வான் குடலையோடு எழுந்தருளப் பண்ணி கொண்டு வரும் போது உபய காவிரி மத்தியில் சந்த்யா வந்தனம் செய்ய கீழே எழுந்தருளப் பண்ணிவிட்டுச் சென்றார். திரும்பி வந்து எடுத்துக் கொண்டு போகநினைத்து எடுத்தபோது வரவே இல்லை. எம்பெருமான் நம்முடைய பாக்ய வசத்தினால் அங்கேயே எழுந்தருளி விட்டான். அதனால் தான் இன்று கருடமண்டபத்தையொட்டி விபீஷணனுக்கு சந்நிதி ஏற்பட்டுள்ளது. விபீஷணன் இப்பெருமாளைப் பெற்றுத் திரும்பியதை வால்மீகி இராமாயணத்தில்

விபிஷணோபி தர்மாத்மா ஸஹைர் நைர்ருதைர்ஷபை
லப்தவா குலதனம் ராஜா லங்காம் ப்ராயாந்த மஹாயா
(வால்மீகி இராமாயணம்-128வது ஸர்க்கம் 87 வது ச்லோகம்)

என்று இஷ்வாகு மன்னனால் விண்ணுலகில் இருந்து இங்கு கொண்டு வரப்பட்டு, அவன் குலத்தோர்களால் பூஜிக்கப்பட்டு பின்பு எல்லோருக்கும் உரியவன் ஆனான். என்று கூறுகிறார்.

சிலப்பதிகாரத்தில் இத்தலம் கீழ்க்கண்டவாறு குறிக்கப் படுகிறது விரிந்த அலைகளோடு கூடிய மிகப் பெரிய காவிரி யாற்றின் இடைக்குறையில் திருமகள் விரும்பி உறையும் மார்பை உடையவனும், நீலநிறம் கொண்டவனுமாகிய திருமால் ஆயிரம் தலைகளுடையவனுமாகிய ஆதி சேடன் ...வும் சிறந்த பாம்பணையாகிற பள்ளியணை மீது அழகுறச் சாய்... கொண்டிருக்கும் தன்மை, நீல நிறமுடைய ஒரு மேகமானது, ஒரு பொன்மலையைச் சூழ்ந்து படிந்திருக்கும் பான்மையில் திக...றது.

"நீல மேக நெடும் பொற்குன்றத்துப்
பால் விரிந்து அகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்
பாயல் பள்ளிப்பலர் தொழுதேத்த
விரிதிரைக் காவிரி வியன் பெருந்துருத்தி
திருவமர் மார்பன் கிடந்த வண்ணம்"
(சிலப்பதிகாரம் - காடுகாண்காதை)

பரமபதத்தில் இரண்டு மணத்தூண்கள் உள்ளது. பரமபதத்திற்குச் செல்வோர் இந்த மணத்தூண்களைத் தழுவி நித்திய சூரிகளாக விளங்குகின்றனர். இதே போல் இங்குள்ள கருவறையிலும் இரண்டு மணத்தூண்கள் உள்ளன. இந்த மணத்தூண்களைத் தழுவிக் கொள்வோர் பரமபதத்து நித்திய சூரியாகும், பாக்கியம் பெறுவர் என்பது ஐதீஹ்யம். இந்த மணத் தூண்களை பற்றிக் கொண்டு எம்பெருமானை வாழ்த்தும் நாள் எந்நாளோ என்று குலசேகராழ்வார் கலங்குகிறார்.

"கடியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
மாயோனை மணத்தூணே பற்றி நின்றென்
வாயார என்று கொலோ வாழ்த்தும் நாளே"

என கூறுகிறார். உலகு போற்றும் காவியமான கம்ப இராமாயணத்தை கம்பர் இங்குதான் அரங்கேற்றினார். இப்பெருமானுக்கு அழகிய மணவாளன் என்பது திருநாமம். ஸ்ரீவில்லிபுத்தூரின் ஆண்டாளையும், உறையூர் கமலவல்லி நாச்சியாரையும் இவர் அழகான மாப்பிள்ளை திருக்கோலத்தில் ஏற்றுக் கொண்டார். தான் பேணி வளர்த்த பெண்ணான ஆண்டாளை இப்பெருமாள் கொண்டு போனதைப் பற்றி பெரியாழ்வார்.

ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டு போனான்
பெருமகளாய்க்குடிவாழ்ந்து பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறம் செய்யுங்கொலோ?

(பெரியாழ்வார் திருமொழி 3-8-4)

என்று மயங்கி மகிழ்வார். ஆழ்வார்கள் பன்னிருவரில் பதினொரு ஆழ்வார்களின் மங்களாஸாசனத்தைப் பெற்ற திவ்யதேசமாகும் இது. பதினொரு ஆழ்வார்களும் 247 பாக்களில் மங்களா ஸாசனம் செய்துள்ளனர்.

திருமங்கையாழ்வார் திருவரங்கத்தில் மதில் கட்டினார். திருநறையூர் எம்பெருமான் மீது திருமடல் பாடியருளினார் தமக்கு மதிள் எழுப்பியதால் சந்தோஷமடைந்த அரங்கநாதன் திருமங்கையாழ்வாரை விளித்து தீர்த்தம், மாலை பரிவட்டம் போன்றன கொடுத்து "எமக்கும் மடலுரைக்கலாகாதோ" வென்றாராம். அதற்கு திருமங்கையாழ்வார் மிகவும் பக்தி யோடு வாய் புதைத்து நின்று "மதிள் இங்கே, மடல் அங்கே" என்றாராம்.

"ஆம் முதல்வன் இவன்!" என்று இராமானுஜரை அடையாளங்காட்டிய ஆளவந்தார் வைணவத் தலைமை யேற்று இங்கிருந்து ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது.

வ்யாக்யான சக்ரவர்த்தி என்று கொண்டாடப்படும் பெரியவாச்சான் பிள்ளையும், பிள்ளைஉலகாசிரியன் என்னும் வைணவ மேதாவியும் இங்கு நெடுங்காலம் தங்கியிருந்து வைணவம் வளர்த்தனர்.

ஸ்ரீராமானுஜர் திருவரங்கப்பெருமாளுக்குரிய ஆபரணங்கள் முதற்கொண்டு அன்றாடம் அரங்கனுக்கு அணிவிக்க வேண்டிய ஆடைகள், பிரசாதம், விழாக்கால நடைமுறைகள், போன்றவற்றை முறைப்படுத்தி நிர்வாகத்தை ஒழுங்கு படுத்தினார். இதனை, "திருவரங்கர் செல்வம் முற்றுந் திருத்தி வைத்தான் வாழியே"என்று அவரது வாழி திருநாமத்தில் உள்ளது. இறுதியில் இராமானுஜர் திரு நாடு அடைந்ததும் ரங்க நாதனே அவரை வஸந்த மண்டபத்தில் வைக்குமாறு பணிக்க இன்றும் அவரது அர்ச்சைதிருமேனியை தரிசிக்கும் இத்தகைய கீர்த்தி வேறெந்த திவ்யதேசத்திலும் இல்லை.

ஸ்ரீரங்கத்தில் எல்லாமே பெரியவைகள். ஆம். கோவில் பெரிது. இராமபிரானே ஆராதித்த பெருமாள் ஆவார். அவரால் தொழப்பட்ட இந்த ரங்கநாதன் பெரிய பெருமாள். 7 மதில்களும் எண்ணற்ற மண்டபங்களும் பெரிது. இதற்குச் சிகரம் வைத்தாற்போல் இத்தலத்தின் கோபுரம் ஆசியாவிலேயே பெரியது. இங்கு எழுந்தருளியுள்ள கருடன் மிகப் பெரியவர். இங்கிருந்த ஜீயரும் பெரிய ஜீயர் உரையாசிரியர். ஆச்சான் பிள்ளையோ பெரியவாச்சான்பிள்ளை திருமதிள்களும் பெரியது. ஆச்சார்யர் திருநாமமோ பெரியநம்பி. தாயாரின் திருநாமம் பெரிய பிராட்டி.

இங்கு செய்யப்படும் தளிகைக்கு பெரிய அவசரம் என்று பெயர். இங்குள்ள வாத்யத்திற்கு பெரிய மேளம் என்று பெயர்.பட்சணங்கட்குப் திருப்பணியாரங்கள் என்று பெயர். ஆண்டாள் மணமுடித்து கொடுத்த ஆழ்வாரோ பெரியாழ் வார்.இரண்டாக பிரிந்து ஓடும் காவிரியும் கொள்ளிடமும் தமிழ் நாட்டிலேயே பெரிய நதிகள். ஸ்ரீரங்கநாதரின் தொன்மை பற்றி

ஆராய்வதும் பெரிய ஆய்வு.

**நம்பெருமாளின் வாகனங்கள்:-**

| | |
|---|---|
| 1. கருடவாகனம் | 7. சேஷ வாகனம் |
| 2. அனுமார் வாகனம் | 8. கற்பக விருட்ச வாகனம் |
| 3. யானை வாகனம் | 9. ஒற்றைப் பிரபை வாகனம் (சூரியப் பிரபை) |
| 4.யாளி வாகனம் | 10.அன்ன வாகனம் |
| 5. சிம்ம வாகனம் | 11. இரட்டைப்பிரபைவாகனம் (சந்திரப்பிரபை) |
| 6. குதிரை வாகனம் | 12. பல்லக்கு |

**மூலவர்**: ஸ்ரீரங்க நாதன், பெரிய பெருமாள், ஆதிசேடன் மேல் பள்ளி கொண்டு தெற்கே திருமுகம். புஜங்க சயனம்.

**உற்சவர்:** நம்பெருமாள், அழகிய மணவாளன்

**தாயார்:** ஸ்ரீரங்க நாச்சியார் பெரியபிராட்டியார்

**தீர்த்தங்கள்:** இங்கு மொத்தம் "9" தீர்த்தங்கள்

| | |
|---|---|
| 1. சந்திர புஷ்கரணி | 6. மகிழ் தீர்த்தம் |
| 2. வில்வ தீர்த்தம் | 7. பலாச தீர்த்தம் |
| 3. நாவல் தீர்த்தம் | 8. கடம்ப தீர்த்தம் |
| 4. அரசு தீர்த்தம் | 9. மா தீர்த்தம் |
| 5. புன்னை தீர்த்தம் | |

இதில் இன்று இருப்பதும் பிரதானமானதும் சந்திர புஷ்கரணியே.

**ஸ்தல விருட்சம்:** புன்னை

**விமானம்:** ப்ரண வாக்ருதி

**காட்சி கண்டவர்கள்:** வீடணன், தர்மவர்மன், கிள்ளிவளவன், சந்திரன்.

**போகமண்டபம்:**

நீளாதேவியின் அவதாரமான கமலவல்லி நாச்சியாரைப் பெற்றெடுத்து அழகியமணவாளனுக்குப் பாணிக்கிரஹணம் பண்ணிக் கொடுத்த சோழ ராஜா அரசாட்சி செலுத்தும் காலத்திலே "குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து" என்று சொல்லப்பட்ட பஞ்சம வர்ணத்திலே நம்பாடுவானைப் போல அவதரித்த இவ்வாழ்வாரும் திருக்குறுங்குடியிலே காந கைங்கர்யம் செய்த அவரைப் போலே வீணையைக் கையிலேந்தி, பூலோக வைகுண்டத் தைத் தாழ்ந்த சாதியில் நம் காலால் தீண்டலாகாது எனக் கருதி காவேரியின் தென் கரையிலிருந்து கொண்டு நித்யஸூரிகள் ஸாம கானம் செய்வது போலே தினந்தோறும் பெரிய பெருமாளைப்பாடி உகப்பித்து வந்தார். பாணர் குலத்திலே அவதரித்தமையால் திருப்பாணர் என அழைக்கப்பட்டார்.

இப்படி பெரிய பெருமாளிடத்திலே பரபக்தி, பரஜ்ஞான பரமபக்திகளையுடையவராய், வேறொன்றும் அறியாதவராய்க் கண்ணை மூடிக் கொண்டு பெரிய பெருமாளை இவர் ஒரு நாள் பாடிக் கொண்டிருக்கையில் பெருமாளுக்கு திருமஞ்சன தீர்த்தம் கொண்டு வருவதற்காக விடியற்காலையில் திரு மஞ்சனக் குடத்தை எடுத்துக் கொண்டு அங்கு வந்த லோகஸாரங்க மஹாமுனிவர் இவரைக் கண்டு "தூரப் போ" என்று சொல்ல கானத்தில் ஆழ்ந்த இவருக்கு அச்சொல் காதில் படாமல் இருக்க, முனிவரும் ஒரு கல்லை எடுத்து வீசி எறிய, அக்கல் இவர் முகத்திலே பட்டு இரத்தம் வர்ஷிக்க, இவரும் கண்களை விழித்துப் பார்த்துக் கலங்கி மஹா பாகவதரிடத்தில் "அபசாரப் பட்டோமே" என்று தூரப் போய் நிற்க, முனிவரும் நீராடி நித்ய கர்மானுஷ்டானம் செய்து திருமஞ்சனம் எடுத்துக் கொண்டு சத்ரம், சாமரம் வாத்ய கோஷம் முதலானவற்றுடன் ஸன்னதிக்குச் சென்றார். திருப்பாணாழ்வார் முகத்தில்பட்ட அடி அரங்கனுடைய நெஞ்சில் பட்டபடியாலே பெருமாள் மிகவும் வருத்த முற்றிருக்க, அது கண்ட ஸ்ரீரங்கநாச்சியார் நமக்கு

அந்தரங்கரான இப்பாண்பெருமாளை வெளியில் நிற்க விடாமல் உள்ளே அழைத்துக் கொள்ள வேணும் என்று விண்ணப்பம் செய்தாள்.

பெரிய பெருமாளும் திருக்காப்புச் சேர்த்து கொண்டு நம்முடைய பக்தரை நீர் இப்படிச் செய்யலாமா? என்று லோக ஸாரங்க முனிவரை மிகவும் கோபித்துத் திருகாப்பு நீக்காமல் இருந்து விட்டார் "மஹாபாகவதரிடத்தில் அவசரப்பட்டு விட்டோமே" என்று மிகவும் கவலை கொண்ட லோக ஸாரங்க முனிவருடைய கனவிலே அன்று இரவு காட்சியளித்த அரங்கன் பாகவதாபசாரத்திலிருந்து ஈடேற வழிகேட்ட இவரிடம் நமக்கு அந்தரங்கரான பாண்பெருமாளை நீர் தாழ்வாக நினையாமல் உம்முடைய தோளிலே ஏற்றிக் கொண்டு நம்மிடம் அழைத்து வருவீர் என்று நியமித்தான் எம்பெருமான். அவரும் விடியற்காலையில் எழுந்திருந்து ஸ்வப்நத்தை அநுஸந்தித்து மிகவும் உகந்தவராய் எம்பெருமானுடைய நியமனத்தை சிரமேற்கொண்டு நித்திய அனுஷ்டானம் முடிந்தவுடன், மறுநாள் காலையில் லோக சாரங்க முனிவரும், மற்றையோர்களும், தென்திருக்காவேரி செல்ல, தம்மை மறந்து எம்பெருமான் மீது மையல் கொண்டு இசைத்துப் பாடிக்கொண்டிருந்த திருப்பாணரை வணங்கி அவரிடம் பெருமாளின் திருவுள்ளக் குறிப்பைத் தெரிவித்து தம் தோள் மீது ஏற்றிக் கொணர்ந்து திருவரங்கர் முன் விடுத்தனர்.

திருவரங்க நாதனைக் கண் குளிரக் கண்ட திருப்பா ணாழ்வார் பெருமாளுடைய திருமுகம், கண், வாய், செவி, திருவுந்திக்கமலம் ஆகியவற்றின் பேரழகில் மயங்கி "அமலனாதிபிரான்" எனத் தொடங்கும் "10" பாசுரங்களை வழங்கி திருவரங்கன் திருவடிக் கீழ் புகுந்து மறைந்தார்.

எம்பெருமானின் அடியார்கள், எக்குலத்தவராயினும் சமமே என்று பறைசாற்றும் சாதி சமய பேதமற்ற வைணவம், திருவரங்கத்திலே காலூன்றி எத்திக்கும் பரவ இவ்வரங்கனே வித்திட்டார்.

பரியனாகிவந்த அவுணனுடல் கீண்ட – அமரர்க்கு
அரிய ஆதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்துக்
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டஅப்
பெரியவாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே.

(அமலனாதிபிரான் - 8)

மிகவும் ஸ்தூலமான வடிவையுடையவனாய்க் கொண்டு, ப்ரஹ்லாதனை நலிய வந்த அஸுரனான இரணியனுடைய சரீரத்தைக் கிழித்துப் பொகட்டவனும், பிரமன் முதலிய தேவர்கட்கும், அணுக முடியாதவனும், ஜகத்காரணபூதனும், மஹோபகாரகனும், கோயிலில் எழுந்தருளியிருக்கிற பரமபாவநனுமாகிய, எம்பெருமா னுடைய திருமுக மண்டலத்தில் கறுத்த நிறமுடையவையாய், விசாலங்களாய் பிரகாசமுடையவையாய், செவ்வரி படர்ந்திருப்பனவாய் காதுவரை நீண்டிருப்பனவாய், பெருமை பொருந்தியவையான அந்தத் திருக்கண்களானவை அடியேனை உன்மத்தனாகச் செய்து விட்டான்.

திருக்கண்களின் அழகை இவ்வாழ்வார் அனுபவித் ததை போல ஆநந்தம் வேறு எவர்க்கும் கிடைக்கவில்லை என்பது திண்ணம். வேத இதிஹாஸ புராணுதிகளிலும் "கமலலோசன" என்றும் "பத்ம லோசன" என்றும் "ராஜீவ லோசந" என்றும் "புண்டரீகாக்ஷ" என்றுமே எம்பெரு மானின் கண்களை நமக்குக் காட்டும் மற்றைய ஆழ்வார்களும் இவ்வாறு ஸேவிக்கவில்லை.

முதல் மூன்றாழ்வார்களும் "செங்கண்மால்" என்றும் - (மு-தி-29) "தாமரைக்கண்மால்" என்றும் (இ-தி-18) செங்கண்மால் எங்கள்மால் என்றும் (மு-தி-17) விளித்தாற் போலே,

திருமழிசைப்பரினும் "செங்கண்மால் நாமம்" என்றார்
(நான்-திரு-69)

நம்மாழ்வாரும் "தாமரைக்கண்கள் கொண்டு ஈர்தியாலோ"
(தி-வா-மொழி-10-3-1)

குலசேகராழ்வாரும் "**தண்ணந்தாமரைக் கண்ணனே**"
(பெருமாள் திருமொழி7-6)

பெரியாழ்வாரும் "**பங்கய நீள் நயனத்து அஞ்சனமேனியனே**"
(பெரியா.திருமொழி-1-5-1)

நாச்சியாரும், ஆண்டாளும் "**கண்ணழகர்**"
(நாச்சி. திரு. 11-2)

நாலுகவிப் பெருமாளான நம் கலியனும் "**ஓவி நல்லார் எழுதிய தாமரையன்ன கண்ணும்**"
(பெரிய திரு. 2-8-7)

என்பதற்கு மேல் எம்பெருமானுடைய திருக்ககண்ண ழகில் ஆழங்கால் பட்டிலர். பாண்பெருமாளோ "காட்டவே கண்டவர்" ஆதலால் அக்கண்ணழகில் வர்ணனையில் ஈடும் எடுப்புமில்லாதவராய் விட்டார்.

**கரியவாகி**
**புடைபரந்து**
**மிளிர்ந்து**
**செவ்வரியோடி**
**நீண்ட**
**அப்**
**பெரிய வாய கண்கள்**

என்ற அழகு வாசாம கோசரம் இதனை விளக்கவும் கூடுமோ? அநுபவரஸமில்லாதார்க்கு?

**தொண்டரடி பொடியாழ்வார் :-**

"**உத்திஷ்ட்ட** புருஷ ஹரி லோஹித பிங்களாக்ஷி" - (தைத்திரிய நாராயணவல்லி) செந்தாமரை போல் சிவந்த **கண்ணனே**! புருஷனே! ஹரியே! எழுந்தருள்வாய் என்று பரமபுருஷனுக்கு அஸாதாரணமான இரண்டு நாமங்க ளையும், புண்டரீகாக்ஷத்வமாகிற அடையாளத்தையிட்டு அவனுக்கு

திருப்பள்ளியெழுச்சி பாடின வேத புருஷனைப் போலவும், “கௌசல்யா ஸுப்ரஜா ராம” (ரா-பா-23-2) என்ற விச்வாமித்ர மஹர்ஷியைப் போலவும்,“உம்பர் கோமானே!” “உறங்காதெழுந்திராய்” - (திருப்பாவை-17) என்ற ஆண்டாளைப் போலவும்,“மேலையார் செய்வனகள்” என்பது போல “அரங்கதம்மா பள்ளியெழுந்திருளாயே” என்று தம்முடைய ப்ராப்யத்வரையாலே பாசுரந்தோறும் திருப்பள்ளியுணர்த்தி அடியார்க் காட்படுத்தாய் (திருப்பள்ளி - 10) என்று ப்ராப்யத்தின் எல்லையான பாகவத கைங்கர்யத்தைப் பிரார்த்தித்துத் தலை கட்டுகிறார். தமது சரம ப்ரபந்தமான திருபள்ளியெழுச்சியிலே

“தமேவ மத்வா பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம்
ப்ராபோதிகீம் யோக்ருத ஸூக்திமாலாம் பக்தாங்க்ரிரேணும்
பகவந்தமீடே.”

“யாவரொரு ஆழ்வார், அரசனைபோல் பூஜிக்கத்தக்கவராய் திருவரங்கத்தரவனையில் பள்ளி கொள்ளுபவரான ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் பரவாசுதேவனாக எண்ணித் திருப்பள்ளியுணர்த்தும் திவயப்ரபந்தத்தை அருளிச்செய்தாரோ, அப்படிபட்ட ஞானம் முதலிய குணங்கள் அமைந்த தொண்டரடிப்பொடியாழ்வாரைத் துதிக்கின்றேன்.” இது திருமாலையாண்டான் அருளிச்செய்த தனியனும், அதன் விளக்கமும் ஆகும்.

“பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம்” என்பதில் இருந்து பரமபதத்தில் இருக்கும் வாஸுதேவனே! இங்கு ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியுள்ளான். அவனுக்கு ஓர் அரசனுக்கு உரிய உபசாரம் செய்ய வேண்டும் என்றும், மேலும் நித்யவிபூதியில் நம்மால் எம்பெருமானுக்கு கைங்கர்யம் செய்ய முடியாது. அதனால் லீலா விபூதியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கு திருப்பள்ளியுணர்த்தி, ப்ராப்யத்தின் எல்லையான பகவத், பாகவத கைங்கர்யத்தை பிரார்த்தித்துத் தலை காட்டுகிறார்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவரங்கத்திற்கு அருகாமையில் ஒரு நந்தவனம் அமைத்து தினந்தோறும் திருவரங்கநாதனுக்கு பூமாலையும் பாமாலையும் சமர்ப்பித்து வந்தார்.திருமங்கையாழ்வார் திருவரங்கத்திற்கு மதிள் கட்டும் சமயம் தொண்டரடிப்பொடியாழ்வாரின் நந்தவனம் குறிக்கிட் டது. எனவே நந்தவனத்தை ஒதுக்கி விட்டு திருமதிள் கட்டினார். இஃதறிந்த தொண்டரடிப்பொடியாழ்வார் மலர் கொய்யும் போது தமது ஆயுதத்திற்கு திருமங்கையின் பட்டப் பெயர்களுள் ஒன்றான “அருள்மாரி” என்னும் பெயரைச் சூட்டி மகிழ்ந்தார்.

**பிள்ளை உறங்காவில்லி தாஸர் :-**

பிள்ளை உறங்காவில்லிதாஸரது இயற்பெயர் “தநுர்தாஸர்”

ஜாகரூகம்தநுஷ்பாணிம் பாணௌ கட்க ஸமந்விதம்।
ராமாநுஜ ஸ்பர்ஸவேதிம் ராத்தாந்தார்த்த ப்ரகாஸகம்।।
பாகி நேயத்வயயுதம் பாஷ்யகார பரம்வஹம்।
ரங்கேச மங்களகரம் தநுர்த் தாஸ மஹம் பஜே।।

உறங்காமலிருப்பவரும், வில்லைக் கையில் ஏந்திய வரும், மற்றொரு கையில் கத்தியோடு கூடியவரும், உடைய வருக்கு (இரும்பை பொன்னாக்கும்) ஸ்பர்ச வேதியாயிருப் பவரும், ஸித்தாந்தப்பொருளை வெளிப்படுத்தியவரும் இரு மருமக்களை உடையவரும், பாஷ்யகாரருடைய மடத்தின் பொறுப்பைச் சுமப்பவரும் திருவரங்கனுக்கு மங்களாசாஸனம் செய்பவருமான பிள்ளையுறங்காவில்லி தாஸரை ஆச்ரயிக் கிறேன்.

ஒரு நாள் நடுப்பகலிலே காவேரி மணலிலே சதுர்த்த வர்ணத்தைச் சேர்ந்த தநுர்தாஸர் என்பவர், பொன்னாச்சி யார் எனும் தமது மனைவிக்கு வெயில் படாதபடி குடைபிடித்து அழைத்துச் செல்வதை எம்பெருமானார் கண்டார். இவ்வளவு ஈடுபாடு ஏன் என்று கேட்ட எம்பெருமானாரிடம், அவளுடைய

கண்ணழகுக்குத் தோற்று ஈடுபடுகிறேன் என்றார் தநுர்தாஸர். இதைவிடச் சிறந்த கண்ணழகைக் காட்டுகிறேன் வாரும் என்று அவரை அழைத்துச் சென்று பெரிய பெருமாளுடைய கண்ணழகைக் காட்டி, அவருக்கும், அவரைக் காட்டித் தந்த தமக்கும் தநுர்த்தாஸரை அடிமையாக்கி கொண்டார் உடையவர். உறையூரில் சோழ ராஜாவின் அரண்மனையில் மல்லர்களுக்குத் தலைவராயிருந்து ஸேவை செய்து ஸம்பாதித்த பணத்தையெல்லாம் உடையவருடைய மடத்துச் செலவுக்கு அளித்து வந்தார் தநுர்தாஸர். இரவெல்லாம் உறங்காமல் இருந்து ராஜஸேவை செய்து பகல் முழுவதும் உறங்காமல் எம்பெருமானாருடைய மடத்திற்கு ஸேவை செய்து இளைய பெருமாளைப் போலவே "உறங்காவில்லி" "பிள்ளை உறங்காவில்லி தாஸர்" என்று புகழ் பெற்றார்.

**பட்டர் :- ஸ்ரீரங்கராஜஸ்தவம் - 20**

காவேரீ மவகாஹிஷீய பகவத் போகாந்தராயீ பவத்
கர்மக்லேச பலாசய ப்ரசமநோத்வேலாமல ஸ்ரோதஸம்,
ஜந்தோஸ் ஸம்ஸரதோऽர்ச்சிராதிஸரணி வ்யாஸங்க
பங்காயயா
லோகேऽஸ்மிந் விரஜேவ வேல்லிதஜலா ஸ்ரீரங்க மாலிங்கதி

பரமபதத்துக்குப் போகும் வழியிலுள்ள விரஜாநதியே இவ்வுலகில் காவேரியாக வடிவெடுத்து ஸகல ஜனங்களுக்கும் அநுகூலமாகத் திருவரங்கம் பெரியகோயிலைச் சூழ்ந்திருப்பதாக அருளிச் செய்கிறார். விரஜை தன்னிடத்தை விட்டு இங்கு வருவானேன்? எனில் விரஜையில் நீராடாதவர்கட்குப் பரமபத ப்ராப்தியில்லை. அர்ச்சிராதி மார்க்கத்தாலே மிக வருந்திச் சென்று அவ்விரஜையில் நீராட வேண்டியிருப்பதால், அவ்வருத்தமின்றி எளிதாக ஸம்ஸாரிகளெல்லாரும் விரஜாஸ்நாநம் பெற வேணுமென்கிற விசாலமான எண்ணங்கொண்டு காவேரியாக ஆயிற்றாம்.

இத்தால்-கோயிலுக்குச் செல்லும் மார்க்கமே அர்ச்சிராதி மார்க்கமென்றும், ஸ்ரீரங்கமந்திரமே வைகுண்டமென்றும், ஸ்ரீரங்கநாதனே பரவாஸுதேவனென்றும் ஸூசிப்பிக்கப் பட்டதாயிற்று. விரஜைக்கு உள்ள குணங்கள் காவேரிக்கும் உண்டு என்கிறார். எம்பெருமானுடைய அநுபவத்திற்கு இடையூருகயிருக்கின்ற, புண்யபாப ரூப கர்மங்களென்ன அவித்யை முதலிய கஷ்டங்களென்ன, கர்மபலன்களென்ன, வாஸனையென்ன ஆகிய இவற்றை போக்குகின்றதும், கரையை மீறியிருப்பதும், நிர்மலமாயிருப்ப துமான ப்ரவாஹத்தை யுடைத்தான காவேரியை குடைந்து ஆடக் கடவேன்.

**திருவரங்கமும், திருமதிள்களும் :-**

திருவரங்கமும் திருமதிள்களும் கீழ் ஏழு உலகம், மேல் ஏழு உலகம் என்பார்கள். திருவரங்கத்திற்கு "7" மதிள்கள். இவை ஒவ்வொன்றும் வரலாற்றுச் சிறப்பும், தெய்வாம்சமும் கொண்டவை.ஏழு உலகங்கட்கு உண்டான பெயர்களையே இந்த ஏழு மதிள்கட்கும் வைத்திருப்பதும், பூலோகத்திலிருந்து ஒவ்வொரு உலகமாக கடந்து சென்றால், ஏழாவது உலகமாக சத்திய லோகம் இருக்குமோ என்று எண்ணுவதைப் போல சத்தியலோகத்திலிருந்தே இந்தப் பெருமாள் வந்ததால் அந்த சத்திய லோகத்திற்கு வழி காட்டுவதைப் போல், ஏழு மதிள்களில் முதலாவது மதிளுக்கு பூலோகம் என்று பெயரிட்டு, எம்பெருமான் பள்ளி கொண்டுள்ள கருவறை மதிலுக்கு சத்திய லோகம் என்றே பெயர் வைத்து உள்ளனர். "7" திருமதிள்களை அடைவதற்கு முன்னால் 8 வது திருச்சுற்று ஒன்று தற்போது 7 மதில்களை உள்ளடக்கியதால் அடைய வளையப்பட்டுள்ளது. இதற்கு அடைய வளைந்தான் திருச்சுற்று என்று பெயர். சப்த ப்ராகாரம் எனப்படும் ஏழு பிரகாரங்களுக்குள் இது அடங்காது.

7 **வது திருமதிள்** இதற்கு பூலோகம் என்று பெயர். இதற்கு ராஜ வீதி, மாடமாளிகை வீதி, சித்திரை சித்ர (அழகிய) திருவீதி எனவும் பெயர்கள் உண்டு.

**6 வது திருமதிள்** புவர் என்று அழைக்கப்படும் இத் திருச்சுற்று திருவிக்கிரமன் திருவீதி என்று அழைக்கப்படுகிறது. இந்த வீதியில் பெருமாள் திருவாகனங்கள் உலா போகும் காரணத்தால் இதற்கு உள் திருவீதியென்றும் உத்தரவீதி என்றும் பெயர். இதில் தான் யானை கட்டும் மண்டபம், ஸ்ரீராமானுஜர் தங்கியிருந்து ஸ்ரீரங்கத்து நிர்வாகத்தைக் கவனித்த மடம், அஹோபில மடம், மணவாளமாமுனிகள் மடம் போன்றனவும் உள்ளன.

**5 வது திருமதிள்** ஸுவர் லோகம் என்று அழைக்கப் படும் இந்த 5 வது திருச்சுற்றின் நுழைவாசலுக்கு நான்முகன் கோட்டைவாசல் என்று பெயர். இதை சோழமன்னன் அகளங்கன் என்பவன் கட்டியதால், அவன் பெயராலேயே அகளங்கன் திருச்சுற்று என்று அழைக்கப்படுகிறது. இதில் ஆண்டாள் சன்னிதி, சக்கரத்தாழ்வார், ஸ்ரீரங்க விலாச மண்டபம், வஸந்த மண்டபம், இராமாயணத்தை அரங்கேற்றிய கம்பர் மண்டபம், மேட்டழகிய சிங்கர் எனப்படும் நரசிங்கப் பெருமாள் சன்னிதியும், ஆயிரக்கால் மண்டபமும் இதில் தான் உள்ளது. இதில் தான் மார்கழி மாதம் வைகுண்ட ஏகாதசியன்று தொடங்கும் திருவாய் மொழித் திருநாள் உற்சவம் நடைபெறும். இராமானுஜரின் ஸன்னிதியும் இங்குதான் உள்ளது. தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், கூரத்தாழ்வான், பிள்ளை லேகாகாச்சார்யாருக்கும் இதில் தான் சன்னிதிகள் உள்ளன.

**4 வது திருமதிள்** மஹர் லோகம் எனப்படும் 4 வது திருச்சுற்றுக்கு திருமங்கை மன்னன் சுற்று, ஆலிநாடன் வீதி என்றும் பெயர். இம்மதில் திருமங்கையாழ்வாரால் கட்டப் பட்டது. இதன் நுழைவாயிலுக்கு கார்த்திகை கோபுர வாசல் என்று பெயர். இதில் தான் பிரம்மாண்டமான கருடாழ்வார் சன்னதி உள்ளது. இதில் முதலாழ்வார்கள் மூவரின் சன்னதி, நம்மாழ்வார் சன்னதி, திருமழிசையாழ்வார், திருக்கச்சி

நம்பிகள் சன்னதி, சந்திர புஷ்கரணியும் இதில்தான் உள்ளது. பெருமாளுக்கே வைத்தியம் செய்தவரான தன்வந்திரி சன்னிதியும் இதில் தான் உள்ளது.

**3 வது திருமதிள்** ஜநோலோகம் எனப்படும் இந்த 3வது திருச்சுற்றுக்கு ஆர்யபடாள்வாசல் என்று பெயர். முன்பு ஒரு காலத்தில் ஆர்யர் என்னும் வடநாட்டு அந்தணர்கள் இவ்வாசலைக் காவல் புரிந்து வந்ததால் இப்பெயர் ஏற்பட்டது. இதற்கு குலசேகரன் திருச்சுற்று என்று பெயர். இந்த சுற்றில் தான் தங்கமுலாம் பூசப்பட்ட துவஜஸ்தம்பம், (கொடிமரம்) உள்ளது. இது 102 தங்கத்தகடுகள் பதிக்கப்பட்ட கொடிமரம் ஆகும். விஜயநகரத்து மன்னர்களால் இக்கம்பம் உண்டாக் கப்பட்டது. உள்கோடை மண்டபம், பரமபதவாசல், டோலோத்ஸவ (ஊஞ்சல் உற்சவம்) மண்டபமும் இதில் உண்டு.

**2வது திருமதிள்** தபோலோகம் எனப்படும் 2வது திருச்சுற்றுக்கு ராஜமகேந்திரன் திருச்சுற்று என்று பெயர். ராஜ மகேந்திர சோழனால் இது கட்டப்பட்டது. இதன் நுழைவு வாயிலுக்கு நாழி கேட்டான் வாசல் என்று பெயர். பெருமாள் இவ்வாசலுக்கு வந்ததும் நாழிகை என்ன என்று கேட்கும் வழக்கம் இருந்ததால் இப்பெயர் உண்டாயிற்றென்பர். இதில் யாகசாலை, சேனை முதலியார் சன்னிதி, கண்ணாடி அறை, ஆகியன உண்டு.

விஜயரங்க சொக்கநாத நாயக்கர் தம் குடும்பத்துடன் நின்றுள்ள காட்சியும் இத்திருச்சுற்றில் தான் உண்டு. கற்பூர படியேற்றம் என்னும் விசேட நிகழ்ச்சி கார்த்திகை மாதம் கைசிக ஏகாதசியன்று நடைபெறும். இந்நிகழ்ச்சியை காண்ப தற்காகவே விஜயரங்க சொக்கநாத நாயக்கர் தமது குடும்பத் துடன் வந்தாரென்றும் வருவதற்குள் இந்நிகழ்ச்சி முடிந்து விட்டதால் அடுத்த ஆண்டு இந்நிகழ்ச்சியைக் காண வேண்டுமென்று ஓராண்டு காலம் தம் குடும்பத்துடன் தங்கி

விட்டாரென்றும் கூறுவர்.

ஸ்ரீசைலேச தனியன் பெருமாளால் குழந்தை வடிவில் மொழியப்பட்டது இந்த திருச்சுற்றில் தான். இதில் உள்ள கிளி மண்டபம் திருமங்கையாழ்வாரால் கட்டப்பட்டது. துலுக்க நாச்சியார் சன்னிதியும் இத்திருச்சுற்றில் தான் உண்டு.

**முதல் திருமதிள்** சத்தியலோகம் எனப்படும் இந்த முதல் சுற்றை உண்டாக்கியவன் சோழமன்னன் தர்மவர்மன் என்று அறியப்படுகிறது. இதன் நுழைவு வாயிலுக்குத் திரு அணுக்கன் திருவாசல் என்று பெயர். கருவறை (மூலஸ்தானம்) அமைந்துள்ளது இந்தச் சுற்றில் தான். பேரழகுடன் பெருமாள் சயனித்திருப்பது இந்த சத்திய லோகத்தில் தான். கருவறைக்கு முன் உள்ள மண்டபத்திற்கு ரங்க மண்டபம் என்று பெயர். இதை காயத்ரி மண்டபம் என்றும் சொல்வர். இதில் 24 தூண்கள் உண்டு. காயத்ரி மந்திரத்தின் 24 எழுத்துகளாக இதைக் கூறுவர்.

நாள்தோறும் காலையில் செய்யப்படும் பூசையே மற்றப் பூசைகள் எல்லாவற்றிலும் முக்கியமானதாகும். அப்போது நிகழ்த்தப்படுகின்ற பூசைகளின் நெறிமுறைகள், பண்டைக் காலம் முதல் சிறிதும் மாறாதனவாகவும், பாஞ்சராத்ர ஆகம விதி முறையின்படி நடைபெறுகின்றன. பின்னர் அவரது மார்பிலும், திருவடிகளிலும், சந்தனக் குழம்பு அணிவிக்கப் பெறும். மூலவருக்கு வெள்ளிக்கிழமைகளிலும் குறிப்பிட்ட சில பருவங்களிலும் பச்சைக் கற்பூரம் கலக்கப்பெற்ற புனுகுக் காப்பு அணிவிக்கப்படுகிறது. திருமஞ்சனம் பொது மக்கள் முன்னிலையில் மாதந்தோறும் பஞ்ச பருவகாலங்களில், இரண்டு ஏகாதசி, ஓர் அமாவாசை, பிறந்த தினமான ரேவதி நட்சத்திரம் போன்ற நாட்களில் நடை பெறுகின்றன. பின்னர் பெருமாள் தூய உடைகளும், நெற்றியில் கஸ்தூரி திருமண் காப்பும், புதிய பூமாலைகளும், சிறந்த அணிகலன்களும் சாற்றப் பெறுகிறார்.

**திருவிழாக்கள்:**

திருவரங்கர் கோயிலில் ஆண்டின் பன்னிரு மாதங்களிலும் வெவ்வேறு திருவிழக்கள் நடைபெறுகின்றன.

**சித்திரை:**

இம்மாதத்தில் கோடைத்திருநாள் 10நாட்கள் நடைபெறுகின்றது. இந்த உத்ஸவத்தில் 5 நாட்கள் உள்கோடைத் திருநாளும் 5 நாட்கள் வெளிக்கோடைத் திருநாளும் நடைபெறுகின்றன. உள் கோடை விழாவின் போது பெருமாள் உள்கோடை மண்டபத்தில் வீற்றிருப்பார். வெளிக்கோடை விழாவின் போது வெளிக்கோடை மண்டபத்தில் வீற்றிருப்பார். இத் திருவிழாக்களில் அன்பர்கள் கொண்டு வரும்புது மலர்கள் திருவரங்கனுக்குச் சூட்டப்படும். அம் மலர்கள் விரிந்து நறுமணத்தோடு பெருமாள் திருமுடியில் திகழும்.

**வைகாசி**

கோடைக் காலமான இம்மாதத்தில் பெருமாள் வசந்த மண்டபத்தில் ஒன்பது நாட்கள் எழுந்தருளுவார். வெப்பக் காலத்தில் அரங்கநாதரது திருமேனிக்குக் குளிர்ந்த காற்று வீசப்பெறும் வகையில் அவர் வசந்த மண்டபத்திற்கு எழுந்தருளுவார். இம் மண்டபத்தைச் சுற்றியுள்ள அகழி நீர் காற்றிற்குக் குளிர்ச்சியை வரவழைக்கிறது.

**ஆனி**

இம்மாதத்தில் 1400 படி அமுதுடன் திருப்பாவாடை நிவேதத்துடன் பெரியபெருமாள் ஜேஷ்டாபிஷேகம் நடை பெறுகிறது.

**ஆடி**

இம்மாதம் பதினெட்டாம் நாள் காவிரி வெள்ளப் பெருக்கின் போது திருக்காவேரி அம்மா மண்டபத்தில்

எழுந்தருள்கிறார். பின் காவிரித் தாய்க்கு மலர், புடவை, பொன், பொட்டு, திருத்தாலி ஆகியவை யானை மீது எடுத்துச் சென்று காவிரியில் விடப்படுகின்றன. ஆடிப்பூரத்தில் ஆண்டாள் திரு நாள்கள் கொண்டாடப் பெறுகின்றன.

### ஆவணி

இம்மாதத்தில் கிருஷ்ணஜயந்தி விழாவும், உரியடி விழாவும் நடைபெறுகின்றன. காலையில் கண்ணன் எண்ணெய் விளையாட்டும், மாலையில் உரியடி விழாவும் நடைபெறு கின்றன. பின்னர்க் கிருஷ்ணனும், பெருமாளும் மூலஸ்தானம் வந்தெய்துகிறார்கள்.

### புரட்டாசி

இம்மாதம் பவித்ரோத்ஸவ சாற்றுமுறை திருமஞ்சனம் நடைபெறுகிறது. அரங்கநாதருக்குப் பவித்ரோத்ஸவத்தில் அணிவிக்கப்பெற்ற பவித்திர மாலையைக் களைந்து சந்திரபுஷ்கரிணியில் எழுந்தருளியுள்ள இராமருக்கு அம் மாலையைச் சாற்றுவார்கள்.

### ஐப்பசி

இம்மாதத்தில் ஊஞ்சல் திருநாள் 10 நாள்கள் நடைபெறுகிறது. நம்பெருமாள் ஊஞ்சலில் எழுந்தருளியி ருக்கும் போது அரையர்கள் தாலாட்டுப் பாடல்கள் பாடுகிறார்கள். ஏழாம் நாளில் திருக்கொட்டாரத்தில் நெல் அளவை பெருமாள் உபய நாச்சியார்களுடன் கண்டருளு கிறார். இம்மாதம் தீபாவளிப் பண்டிகையின் போது, பெருமாளுக்கு எண்ணை இட்டுத் திருமஞ்சனம் செய்யப் படுகிறது. ஆழ்வார்களும், ஆசாரியர்களும் கிளி மண்டபத்தில் எழுந்தருளிய பின், பெருமாள் புறப்பட்டுச் சந்தன மண்டபத்தில் எழுந்தருளி, திருமஞ்சனம் கண்டருளுகிறார். பின்பு பெருமாளுக்கு ஜாலி(சாளி) அலங்காரம் செய்யப்படுகிறது. நாணயங்கள் ஆயிரம் கொண்டு வந்து அவற்றை பைகளில்

கட்டிப் பெருமாள் திருவடிகளில் மேள தாள முழக்கத்துடன் அவை சமர்ப்பிக்கப்படுகின்றன. ஆழ்வார், ஆசார்யர்களுக்கும் புது வஸ்திரம் சாற்றியபிறகு, ஆழ்வார்களுக்கும், ஆசாரியர்களுக்கும் மரியாதை நடைபெறுகிறது.

**கார்த்திகை**

சக்கரத்தாழ்வார் சந்நிதியில் பெருமாள் எழுந்தருளும் போது கார்த்திகைக் கோபுர வாயிலில் கட்டப்பட்டிருக்கும் சொக்கப்பனைக் காட்சியைப் பெருமாள் சக்கரத்தாழ்வார் கோயில் முன்மண்டபத்திலிருந்து கண்டருள்கிறார். 3 மீட்டர் உயரமுள்ள, ஒரு தென்னை மரத்தை நட்டு, அதைச் சுற்றிலும் முழு பனை ஓலைகளை அடுக்கடுக்காகக் கட்டி, விளக்கை ஏற்றி வைக்க, ஒருவர் பந்தம் ஒன்றைக் கையில் ஏந்தி, உள்வழியாக அந்த மரத்தில் ஏறி உயரச் சென்று தீப்பற்ற வைத்தபிறகு கீழே இறங்கி வந்து விடுவார். இம்மாதத்தில் கைசிக ஏகாதசியில் புறப்பாடும் சந்தன மண்டபத்தில் திருமஞ்சனமும் நடைபெறும் கைசிகப் புராணத்தை பட்டர் வாசிப்பர். ''படியேற்ற ஸேவை''யும் இம்மாதத்தில் நடைபெறும். படியேற்ற விழாவின் போது பெருமாள் மீது பச்சைக் கற்பூரப் பொடிகளைத் தூவுகிறார்கள்.

**மார்கழி** திருவரங்கநாதர் திருக்கோயிலில் நடைபெறும் முக்கியமான விழக்களில் ஒன்று மார்கழி மாதம் வைகுண்ட ஏகாதசி திருவிழாவாகும்.

திருமங்கையாழ்வார் தமது ஆறு திவ்யப்ரபந்தங் களையும் அருளிச் செய்த பின்பு ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளி திரு நெடுந்தாண்டகத்தை தேவகானத்தில் இசைத்துப்பாட, அதனால் திருவுள்ளமுகந்த பெரிய பெருமாள் ''உமக்கு வேண்டிய வரம் பெற்றுக் கொள் ளும்'' என நியமித்தருளினார். தேவரீர் மார்கழி மாதத்தில் கண்டருளுகிற அத்யயன உத்ஸவத்தில் நம்மாழ்வார் அருளிச் செய்த த்ராவிட வேதத்தையும் திருச்செவி சாற்றியருளவேணும் என்று பிரார்த்தித்தார்.

மார்கழி மாதத்தில் நடக்கும் அத்யயன உத்ஸவமான திருவாய்மொழித் திருநாளாகிய, பகல்பத்து, இராப்பத்து உத்ஸவங்கள் முக்கியமாகக் கருதப்படுகின்றன. "காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்குய்யும் வண்ணம்" - (திருமாலை 10) என்று தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச் செய்தபடி எம்பெருமான் திருவடிகளில் ஆத்மாவை சமர்பித்துவித்து உஜ்ஜீவிக்கும் மார்க்கத்தை இந்த உத்ஸவம் காட்டிக் கொடுக்கிறது. ஆகையால் இதற்கு மோக்ஷோத்ஸவம் என்றும் பெயராயிற்று.

திருமங்கையாழ்வார் ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வாரை ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வரச்செய்து அவருக்குக் காட்டிக் கொடுத்த தத்துவத்தை லோகத்தார் அறியும்படி உத்ஸவமாய் நடத்தி காட்டும்படி ப்ரார்த்தித்தது மட்டுமல்லாமல் அவர் பாடிய திருவாய் மொழிக்கு வேத ஸாம்யம் கொடுத்து வேதத்தை ஓக்க அத்யயன உத்ஸவத்தில் அதையும் கேட்டருள வேணும் என்று பெருமாளிடம் வேண்டிக் கொண்டார். பெருமாளும் திருவுள்ளம் உகந்து நம்மாழ்வாருக்கு ஸ்ரீமுகம் அனுப்பி அவரை வரவழைத்து உத்ஸவத்தை நடத்தித் தமிழ் வேதமாகிய திருவாய்மொழிக்கு வேத ஸாம்யம் கொடுத்து அதைக் கேட்டருளினார்.

**திருநெடுந்தாண்டகம் :-**

இந்த உத்ஸவம் பகல்பத்துக்கு முந்தின நாள் ராத்திரி நடக்கிறது. இது நாதமுனிகளால் ஏற்படுத்தப்பட்டது. பகல்பத்து இராப்பத்து உத்ஸவங்களினால் காட்டிக் கொடுக்கப்படும் தத்துவத்தை சுருக்கமாக இந்த உத்ஸவம் வெளியிடுகிறது. "எந்தை தளிர் புரையும் திருவடி என் தலை மேலவே" என்று சொல்லி திருமங்கை ஆழ்வார் பகவானுடைய தர்சனம் பெற்றதைப் பேசும் திருநெடுந் தாண்டகம் என்னும் ப்ரபந்தம்

பெருமாள் முன்பாக வ்யாக்யானங்களுடன் சேவிக்கப்படுவதால் அதையிட்டு இந்த உத்ஸவம் அழைக்கப்படுகிறது.

ஒரு நூலுக்கு முன்புள்ள முகவுரை போல் ஏகாதேசி உத்ஸவத்திற்கு இந்த உத்ஸவம் முகவுரையாய் இருந்து வருகிறது. இது திருவரங்கம் திருப்பதியில் மட்டும் தான் நடைபெறுகிறது. மற்றைய திவ்ய தேசங்களில் நடைபெறுவதில்லை.

**பகல்பத்து :-**

இந்த உத்ஸவம் பத்து நாள் நடப்பதாலும் இதில் நடக்க வேண்டிய முக்கிய காரியமாகிய அரையர் ஸேவை பகலில் நடப்பதனாலும் இதற்கு பகல் பத்து என்று பெயர் ஏற்பட்டது. இந்த உத்ஸவம் பத்துநாள் நடப்பதாலும் இதில் நடக்க வேண்டிய முக்கிய காரியமாகிய அரையர் சேவை பகலில் நடப்பதாலும் பகல் பத்து என்று வழங்கப்படுகிறது. இந்த உத்ஸவத்தில் ரங்கநாதன் காலையில் ஸந்நிதியை விட்டுப்புறப்பட்டு கிழக்கில் உள்ள அர்ஜுன மண்டபத்துக்கு எழுந்தருளி இரவு எட்டு மணிக்குத் திரும்பி மூலஸ்தானம் சேருகிறார்.

**ஸிம்ஹகதி :-**

நம்பெருமாள் ஸந்நிதியை விட்டு வெளி வரும் போது ஒரு ஸிம்ஹமானது தன்னுடைய குகையிலிருந்து, வெளிக் கிளம்பும் போது தனது உடம்பிலுள்ள மயிர்களை உதறிக்கொண்டு புறப்பட்டு அடி வைக்குமாப்போலே பெருமாள் கம்பீரமான ஸிம்ஹ நடையிட்டுக் கொண்டு புறப்படுகிறார். இது ஸிம்ஹகதி என்று சொல்லப்படுகிறது.

**மாரிமலை முழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்**
**சீரிய சிங்கம் அறிவுற்றுத்தீவிழித்து**
**வேரிமயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி**
**மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு**

**(திருப்பாவை - 23)**

என்ற இந்த திருப்பாவை பாசுரத்தாலும், "தம் பத்ம தள பத்ராக்ஷம் ஸிம்ஹ விக்ராந்த காமிநம்" என்னும் ஸீதா பிராட்டியின் வசனப்படியும் ரங்கநாதனை சேவிப்பவர்கள் அவனுடைய ஸிம்ஹகதியின் தத்துவத்தை உணர்ந்து பேறு பெற்றவர்களாக விளங்க வேண்டுமென நினைத்த நாதமுனிகள் இதை ஏற்பாடு செய்தார்.

உலகம் உய்வதற்கு அறிய வேண்டிய தத்வம் வராக, வாமன திருவிக்ரமாவதாரங்கள் என்பது ஆழ்வார்களது துணிவு. ரங்கநாதனே அர்ச்சையில் பரத்வமுடையவன் என்பதைக் ஸிம்ஹகதி காட்டித் தருகிறது. வராக, வாமன, அவதார தத்வம் ரங்கநாதன் சன்னதியிலிருந்து வெளியில் வந்து சிம்ஹ கதியோடு மேற்கே திரும்பி நிற்பதால் காட்டப்படுகிறது. ஒய்யார நடை ஈரடி வைப்பதால் திருவிக்ரமாவாதரதத்வத்தை காட்டிக் கொடுக்கிறது. மேலே சொன்ன சிம்ஹகதியும் ஒய்யார நடையாகிற வ்யாக்ரகதியும் நம்மாழ்வார் தமது முதல் ப்ரபந்தமாகிய திருவிருத்தத்தில்

ஈனச்சொல்லாயினுமாக எறிதிரை வையம் முற்றும்
ஏனத் துருவாய் இடந்தபிரான் இருங்கற்பகம் சேர்
வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க்கும்
ஞானப்பிரானையல்லாலில்லை நான்கண்ட நல்லதுவே

- (திருவிருத்தம் - 99)

நச்சுவினைக்கவர்தலை யரவினமளியேறி
எறிகடல்நடுவுள் அறிதுயிலமர்ந்து
சிவனயனிந்திர னிவர்முதலனைத்தோர்
தெய்வக்குழாங்கள் கைதொழக்கிடந்த
தாமரையுந்தித் தனிப்பெருநாயக!
மூவுலகளந்த சேவடியோயே!

(திருவாசிரியம் - 1)

என்றும் அருளிச் செய்தார்.

"வையம் ஈரடியால் அளந்த உம்மைக் காணும் ஆசையென்னும் கடலில் வீழ்ந்து அயர்ந்தோம்" என்றும் "உலகளந்த பொன்னடியை அடைந்து உய்ந்தேன்" என்றும் திருமங்கை ஆழ்வாரும் அருளி செய்தார்.

"ஏனமாகி உலகிடந்து அன்று இருநிலனும், பெருவிசும் பும் தானாய பெருமானை கண்டது தென்னரங்கத்தே" (பெ-தி-5-6-3) என்றும் "பெருநிலம் ஈரடிநீட்டி பண்டொருநாள் அளந் தவனை கண்டது அணிநீர் தென்னரங்கத்தே" (பெ-தி-5-6-4) என்று அருளிச் செய்த படி பரத்வத்தை திருவிக்ரமாவதார, வாமனாவதாரங்களையும், வராகாவதாரத்தையும் செய்தவர் ரங்கநாதனே எனத் தெரிகிறது. பெருமாள் மேலபடியை விட்டு கீழே இறங்கி வடக்கே திரும்பி நின்றவுடன் அவர் முன் வந்து நிற்கும் உத்தம நம்பிகளக்கும் தேவஸ்தான அதிகாரிகளுக் கும் இரண்டு உருண்டை சந்தனம் கையில் கொடுக்கப்படும். அதை அவர்கள் வினயத்துடனும், மரியாதையுடனும் பெற்றுக் கொண்டு உத்தம நம்பி நீங்கலாக மற்றவர்கள் மணியக் காரரிடம் திருப்பி கொடுத்து விடுவார்கள். இதன் தாத்பர்யம் அவர்கள் ரங்கநாதனுடைய கைங்கர்யத்தை த்ரோக மன்னி யில் செய்து வருவதாய் ராஜவிசுவாக ப்ரமாணம் செய்கிறார்கள்.

இதன் பிறகு ரங்கநாதன் ஸேனை முதலியார் வாசலுக்குச் சென்று அவருக்கு மாலையை அனுப்பி சாத்தச் செய்வார். இது உத்ஸவார்த்தம் வெளியில் செல்லும் ரங்கநாதன் தமது ராஜாங்க அதிகாரத்தை ஸேனை முதலியாரிடம் ஒப்பிப்பதாகிறது.

ஸேனை முதலியாரிடம் இருந்து புறப்பட்டு, வழியிலு ள்ள துலுக்க நாச்சியாருக்கு ஸேவை கொடுத்துவிட்டு அர்ஜுன மண்டபத்திலுள்ள ஆஸ்தானத்தில் அமர்ந்து, ஆழ்வார், ஆசார்யர்களுக்கு பரியட்டம் முதலான மரியாதை கள் செய்யப்படும். இந்த மண்டபத்தில் தான் (திருவாய்மொழி இயற்பா நீங்கலாக) மற்றப் பிரபந்தங்கள் ஸேவிக்கப்படும்.

**ரிஷபகதி :-**

ஸாயங்காலம் ஆறு மணிக்கு ரங்கநாதன் அர்ஜுன மண்டபத்தை விட்டு கர்ப்பக்ருஹம் போய்ச்சேர வரும்போது கருவூலத்தின் பக்கத்திலுள்ள நாலுகால் மண்டபம் வந்தபிறகு, அங்கிருந்து யாகசாலைவரையில், பத்தி உலாவிச் சென்று திரும்பி வருவார். அந்தப் பத்தி உலாவுதலில் நடக்கும் நடைக்கு ரிஷபகதி என்று பெயர்.

இந்த கதி ப்ராணாயாமம் செய்ய ஆரம்பிக்குமுன் எப்படி நாடி சுத்தி செய்து கொள்வதென்பதைக் குறிக்கிறது. இந்த நாலுகால் மண்டபத்திற்குத் திரும்பி வந்ததும் பானகம், விடாய்ப் பருப்பு நிவேதனம் செய்யப்படும். இது நாடி சுத்தி செய்து கொண்டவுடன் அல்ப ஆகாரம் செய்து கொண்டு இளைப்பாற வேண்டுமென்பதைக் குறிக்கிறது.

இந்த மண்டபத்தில் ரங்கநாதன் நின்றருளியிருக்கும் போது அவருக்கு அர்க்கியம் முதலானவை ஸமர்ப்பித்து திருவடி விளக்கின தீர்த்தம் வினியோகம் செய்யப்படும். இந்த பந்ததி திருவாய்மொழியிலுள்ள மேலாத்தேவர், வையத்தேவர், நிலத்தேவர் என்னும் பதங்களின் அர்த்தத்தையும், தத்வபேதங்களையும் காட்டிக் கொடுக்க ராமாநுசனால் எற்படுத்தப்பட்டது.

மேலாத்தேவர் :-

மேலாத்தேவர் என்பவர்கள் வைகுண்டத்தில் பகவான் பக்கத்தில் அவருக்கு அந்தரங்க கைங்கர்யத்தை செய்பவர்கள். அவர்கள் ஸ்தானத்தில் அர்ச்சகர்கள். (ஆண்டான் பிரதிநிதி) உத்தமநம்பி, ஸ்தானீகர் நியமிக்கப்பட்டனர். இவர்களுக்கு பெருமாள் பக்கத்தில் திருவடி விளக்கினவுடன் அர்ச்சகரால் தீர்த்தம் ஸாதிக்கப்படுகிறது.

வையத்தேவர் :-

வையத்தேவர் என்பவர்கள் புவர்லோகம் முதல் ஸத்ய

லோகம் வரையில் வாழும் ப்ரம்மாவும் அவருக்குக் கீழ்ப்பட்ட தேவதைகளும், அவர்கள் ஸ்தானத்திலே ஜீயர், பட்டர், வாதூல தேசிகர், முதலானவர்கள் நியமிக்கப்பட்டனர். இவர்கள் இந்திரனொடு பிரமன் ஈசன் இமையவரெல்லாம் மந்திர மாமலர் கொண்டு மறைந்துவராய் வந்து நின்றார் என்னும் பாசுரத்தின் தத்துவத்தைக் காட்டிக் கொடுக்கும்படி பெருமாளுக்கு முன் தூரத்திலே நிற்பார்கள். இவர்கள் ஸ்தானீகரால் அருளப்பாடு பெற்றே ஸ்வாமி பக்கம் செல்ல வேண்டியவர்கள்.

நிலத்தேவர் :-

நிலத்தேவர் என்பவர் பூமியிலுள்ளவர். இவருடைய ஸ்தானத்தில் ஸாது ஸ்ரீவைஷ்ணவர் நியமிக்கப்பட்டார். இவருக்கு நிற்குமிடத்திலேயே தீர்த்த வினியோகம் ஆன பிறகு ரங்கநாதன் ஒய்யார நடை என்னும் வ்யாக்ரகதியில் யாகசாலை வரையில் சென்று திரும்பி நாலுகால் மண்டபத்திற்கு வருகிறார். இந்த நடை கும்பகத்தைச் செய்தால் குண்டலிநீ சக்தி ஸுஷும்நா நாடியில் புகுந்து, புலி ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு பாய்ந்து செல்வது போல் பாய்ந்து செல்லுகிறதென்னும் தத்வத்தைக் காட்டிக் கொடுக்கிறது. பிறகு படியேற்றம்.

படியேற்றத்தின் தத்வம் :-

படியேற்றம் என்பது ரங்கநாதன் ஸந்நிதிக்கு முன்புள்ள மண்டபத்திற்கு அங்குள்ள படிகளின் வழியாக ஏறுதல். இப்படி ஏறும்போது அரையர் கானம் செய்வார். மிருதங்கம் முதலான வாத்தியங்கள் வாசிக்கப்படும். இந்தப் படியேற்றம். ஸுஷும்நா நாடியில் குண்டலீநீ சக்தி ஆறு ஆதாரங்களையும் கடந்து ஸஹஸ்ரார சக்ரம் போய் சேருவதைக் குறிக்கிறது. ஆறாவது, ஏழாவது படிகளில் பெருமாள் ஒருபுறமிருந்து மற்றொருபுறம் திரும்பி ஆடுவதால் திருமங்கையாழ்வார் பாசுரமாகிய "நீணிலா முற்றத்து நின்றிவள் நோக்கினாள் காணுமோ கண்ணபுர மென்று காட்டினாள்" - (பெரிய திருமொழி 8-2-1) என்பதில் அர்த்தம் குறிப்பிட்டு காட்டப்படுகிறது.

அதாவது புருவ மத்யஸ்தானமாகிய "ஆஜ்ஞாசக்ரம்" வரையில் குண்டலீநீ சக்தியை பிரவேசிக்கும் படி செய்து கொண்டவர்கள். பகவானுடைய தரிசனத்தைப் பெற்று மற்றவர்களுக்கும் பகவானிருக்குமிடத்தை காணுமோ என்று காட்டிக் கொடுப்பதாய் தெரிகிறது. மண்டபத்தின் மேல் ஏறியவுடன் ஸ்ரீபாதம் தாங்குவார் பெருமாளை உயரத் தூக்கிக் காட்டுகிறார்கள். இதனால் ஸுஷும்நையிலுள்ள எல்லா படிகளையும் ஏறிச் சென்ற குண்டலிநீயுடையவர்கள் பரமபதம் என்னும் மேலான ஸ்தானத்தை அடைந்து விடுவதாகக் காட்டப்படுகிறது.

ஸ்ரீரங்கநாதன் படியேறி அழகிய மணவாளன் திருமண் டபத்தையடைந்து மேற்கே திரும்பின பிறகு கடதீபாராதனை செய்யப்படும். தமது சரீரத்திலுள்ள குண்டலீநீ சக்தியை ஸஹஸ்ராம் போய் சேரும்படி செய்யக் கூடியவர்கள் பரஞ்சோதியான பகவானை சோதிரூபமாய்க் கண்டு தரிசிக்கலாமென்பதை கடதீபாராதனை காட்டிக் கெடுக்கிறது. அந்த சோதியை "மேலுகங்களின் மீது போய் மேல் தோன்றும் சோதி" என்றாள் ஆண்டாள்.

ஸ்ரீரங்கநாதன் கிழக்கே திரும்பி ஜயவிஜயாள் வாசலுக்கு வந்தவுடன் ஸ்ரீபாதம் தாங்குவோர் பெருமாளை தோளுக்கினி யானுடன் கையில் எழுந்தருளப் பண்ணிகொண்டு வந்து ஸந்நிதிக்குள் நுழைவார்கள். இதுவரையில் பெருமாளுடன் கூட வந்த ஜீயர், பட்டர், வாதுலதேசிகர் அந்த வாசலுக்கு வெளியே நின்று விடுவார்கள். "இது பின்னிட்ட சடையானும், பிரமனும், இந்திரனும், துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல்" என்பதைக் காட்டுவதற்காக.

ஸர்ப்பகதி :-

**ஸந்நிதி வாசலில் ஸ்ரீபாதம் தாங்குவார் பெருமாளை கீழே தாழ்த்தி அதன் பின் மேலே உயர்த்தி ஸர்ப்பம் வளைந்து செல்வது போல் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போவார்கள் இப்படிச் சொல்வது "ஸர்ப்பகதி" எனப்படும்.**

இதனால் ப்ராணாயாமத்தைச் செய்து கும்பகமூலம் அமுக்குதலால் மூலாதாரத்திலுள்ள குண்டலிநீ சக்தி விழித்து ஸுஷும்நா நாடியில் நுழைந்து ஸர்ப்பத்தைப் போல் வளைந்து செல்வது காட்டப்படுகிறது. பெருமாள் ஸந்நிதி வாசலுக்கு முன் வந்தவுடன் இரண்டு ஜ்வாலைகளுடன் கத்திரிப் பந்தம் பெருமாளுக்கெதிரில் பிடிக்கப்படும். பகவானுடைய தரிசனத்தைப் பெறச் செய்யும் ஞானச்சுடர் என்னும் ப்ரகாசத்தை ஆஜ்ஞாசக்ரமாகிய புருவ மத்தியில் சூரிய சந்திர நாடிகளை ஒன்றோடொன்று சேரும்படி செய்து உண்டாக்கிக் கொள்ள வேணுமென்பதாய் இந்த கத்திரி பந்தம் காட்டிக் கொடுக்கிறது. அதன் பின் பெருமாளை கர்ப்பக்ருஹத்திற் குள்ளிருக்கும் ஸிம்ஹாசத்தில் எழுந்தருளப் பண்ணி மங்கள ஹாரத்தி நடைபெறும்.

மோஹினி அலங்காரம் :-

ரங்கநாதன் தன்னை ஸேவிக்க வந்தவர்களை "மம மாயா துரத்யயா" என்னுடைய மாயையைக் கடக்க முடியாதென்று சொன்னேன். அவையாவன : மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை, இம் மூன்றிலும் பெண்ணா சையை ஒழிப்பது கஷ்டம் ஏனெனில் ஒரு ஜீவன் சரீரமெடுக்க ஆரம்பித்த காலம் முதல் அந்தப் பெண்ணாசை இருந்து வருகிறது. நான் பூண்டிருக்கும் மோஹினி வேஷத்தில் மயங்கினதினால் அசுரர்கள் அமிர்தத்தையடைவதை இழந்தார்கள். ஆன படியால் நீங்களும் பெண்ணாசையில் மயங்காமல் "பரம்த்ருஷ்ட்வா நிவர்த்ததே" என்றும் , மாற்பால் மனம் சுழிப்ப மங்கையர் தம் தோள்விட்டு என்றும் சொல்லுகிறபடி மார்க்கத்தைக் கண்டுரைத்து அனுஷ்டித்தால் எல்லா விதமான மாயை நின்றும் விடுபட்டு, எனது வைகுந்த நாட்டை அடைவீர்கள் என்று உபதேசிப்பதாம்.

**இராப்பத்து என்னும் திருவாய்மொழித் திருநாள் :-**

இந்த உத்ஸவம் மார்கழி மாதம் சுக்லபக்ஷ ஏகாதசியிலிருந்து நடக்கும் பத்து நாள் உத்ஸவம்இந்த உத்ஸவத்தில் ரங்கநாதன் ஆயிரக்கால் மண்டபத்தின் மத்தியிலுள்ளதும், வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டதுமான திருமாமணி மண்டபம் என்று அழைக்கப்படுவதுமான மண்டபத்துக்குச் சென்று அதில் வீற்றிருப்பார். பரமபதத்தில் பகவான் எழுந்தருளியிருக்கும் திருமாமணி மண்டபத்தின்படி இந்த மண்டபம் கட்டப்பட்டிருப்பதால் அதே பெயர் இதற்கும் ஏற்பட்டது. இந்தத் திருநாளில் நடக்கவேண்டிய முக்கியமான காரியமாகிற அரையர்ஸேவை ஆதியில் ராத்திரியில் நடத்தப்பட்டபடியாலும், நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழி அரையரால் பெருமாள் முன்பாக கானம் செய்யப்படுவதாலும், இந்த உத்ஸவத்துக்கு "இராப்பத்து" அல்லது திருவாய் மொழித்திருநாள் என்னும் பெயர் ஏற்பட்டது.

இது தவிர வைகுண்டத்திற்குச் செல்லும் அர்ச்சிராதி மார்க்கத்தைப் பற்றிய பேசும் திருவாய்மொழியின் ஒரு பாகமாகிய சூழ்விசும் பணிமுகில் என்னும் பத்துப் பாசுரங்களின் தாத்பர்யங்கள் இந்தத்திருநாளில் நாடகம் போல் நடித்துக் காட்டப்படுகின்றன. பரமபதத்திற்குச் செல்லும் முமுக்ஷுவாய் ரங்கநாதனே நடிக்கிறார்.

கர்ப்பக்ருஹத்திலிருந்து பெருமாள் புறப்படும் முன் ஆரியபட்டாள் வாசல், நாழிகை கேட்டான் வாசல் முதலானவை மூடப்படும்.

**அறிவென்னும் தாள்கொளுவி ஐம்புலனும் தம்மில்**
**செறிவென்னும் திண்கதவம் செம்மி – மறையென்றும்**
**நன்கோதி நன்குணர்வார்காண்பரே – நாள்தோறும்**
**பைங்கோத வண்ணன்படி.**

(மூன்றாந் திருவந்தாதி -12)

என்ற பாசுரத்தின் படி இந்தக் கதவுகள் மூடப்படுகின்றன, பகவானை சிந்தித்து அவனுடைய தரிசனத்தைப் பெற இச்சிக்கும் முமுக்ஷு தன் இந்திரியங்களால் இழுக்கப்பட்டு கண், காது மூக்கு துவாரங்களின் வழியாய் வெளிச் செல்வதைத் தடுக்க முதலில் அவைகளை மூட வேணுமென்பதைக் குறிப்பிடுகிறது.

பெருமாள் புறப்படுவதற்கு முன் கர்ப்பக்ருஹத்தில் வேதபாராயணமும், திருவாய்மொழியும் தொடங்கப் படுகின்றன. அதன்பின் ரத்ன அங்கி சாத்திக் கொண்டு பெருமாள் புறப்படுவார். அப்போது ஸந்நிதி வாசல் திறக்கப்படும். அது ஸுஷும்னையிலுள்ள ப்ரும்ம க்ரந்தியைப் போதிப்பதாகும்.

பகவான் திருவடியில் தனது ஆத்மாவை ஸமர்ப்பிக்கும் போது முமுக்ஷு ''ஓம் இத்யாத்மாநம் யுஞ்ஜீத'' என்கிறபடி ஒங்காரத்தை உச்சரிக்க வேணுமென்று குறிப்பிடுகிறது. பிள்ளைப் பெருமாளய்யங்கார் ரங்கனாதன் விஷயமாய்ப் பாடியுள்ள பாசுரங்களை பாடுவார்கள். பரமபத வாசலுக்குச் சமீ பத்திலுள்ள துரை மண்டபம் வரையில் அந்தப் பாசுரங்களைச் சொல்லி முடிப்பார்கள். பெருமாள் அவ்விடத்திலிருந்து நாலடி சென்றவுடன் தங்கத்தடிகளைப் பிடித்துக் கொண்டு வரும் சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர்கள் ''எழுமினென்று இருமருங்கிசைத் தனர் முனிவர்கள் வழியிது வைகுந்தற் கென்று வந்தெதிரே என முக்தனைப் பரமபதத்துக்கு அழைத்துச் செல்லும் ஆதிவாஹிகர்களாக நடிக்க நியமிக்கப்பட்டிருப்பதைக் குறிக்க அவர்கள் தலையிலும் பட்டுத்துண்டுகள் வைக்கப்படும். பிறகு பெருமாள் யாகசாலை மூலைக்குச் சென்று கிழக்கே திரும்பி கொஞ்சதூரம் சென்றதும் திருப்பணி செய்வார் ஒரு பாத்திரத்தில் தீர்த்தத்தைக் கொண்டு வந்து பெருமாள் முன் சேர்ப்பார். இது பரமபதத்துக்குச் செல்லும் முக்தனை ஆசனத்திலிருத்தி மேலுலகங்களிலுள்ளவர்கள் திருவடி விளக்குகிறார்கள் என்பதை குறிப்பிடுகிறது.

நம்மாழ்வார் இதைப்பற்றி "பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்" என்று உரைத்தார். பிறகு பெருமாள் சேனை முதலியாருக்கு மாலை ஸாத்தி விட்டு, தெற்கு முகமாய் அழகியமணவாளன் திருமண்டபத்திற்கும், கிளிமண்டபத் திற்கும், மத்தியிலுள்ள பத்தியில் ஒய்யார நடையுடன் சென்று நாழிகை கேட்டான் வாசலுக்கு முன் நின்றவுடன், அந்த வாசல் கதவுகளைத் திறக்கும்படி ஆக்ஞாபிக்கப்பட்டு அவை திறக்கப்படும். இந்த வாசல் திறந்தால் ஸுஷும்னையிலுள்ள விஷ்ணு க்ரந்தி என்னும் தாள்கள் திறக்கப்படுவதாகிறது.

அதன்பின் பெருமாள் பரமபத வாசலுக்கு எதிரில் சென்று வடக்கு முகமாய் நின்று அந்த வாசல் கதவுகளைத் திறக்கும்படி நியமித்தவுடன் அவை திறக்கப்படும். இதனால் ஆக்ஞா சக்ரத்திலுள்ள "ருத்ரக்ரந்தி" பேதிக்கப்பட்டது குறிப்பிடப் படுகிறது. இந்த வாசலுக்குக் கிழக்குப் பக்கத்தில் விரஜா நதியின் ஸ்தானத்தில் ஒரு கிணறு இருக்கிறது.

இங்கிருக்கும் நாலுகால் மண்டபத்தில் வேத விண்ணப்ப மாகி பெருமாள் இந்த வாசலுக்குப் போனஉடன், அதுவரையில் சாத்திக் கொண்டு வரும் போர்வை களையப்பட்டு, புது மாலைகள் ஸமர்ப்பிக்கப்படும். "பரமபதத்திற்குப் பக்கத்தி லுள்ள விரஜா நதியை அடைந்து அதில் ஸ்நானம் பண்ணும் முக்தனக்குப் பழைய சரீரம் போய், பஞ்சோப நிஷந்மயமான வேறு சரீரமும் சதுர்புஜ, சங்க சக்ராதிகளும் ஏற்படுகின்றன", என்னும் தத்வம் இங்கு காட்டப்படுகிறது. ஏகாதசி தினம் ரத்ன அங்கியோடு பெருமாள் பரமபத வாசல் நுழைந்து செல்வதால் விரஜாநதியில் தீர்த்தமாடின முக்தன் பரிசுத்தமான சுத்த ஸத்வமய சரீரத்தைப் பெற்று அதனால் ஏற்படும் விசேஷ காந்தியோடு "ஒளிக் கொண்ட சோதியமாய் உடன் கூடுவது என்று கொலோ" என்று ஆழ்வார் அருளியபடி விரஜைக்கு அப்புறமுள்ள முக்தர்களோடு கூடுவது காட்டப்படுகிறது.

ஆதி காலத்தில் பரமபதவாசலுக்கு வெளியில்

ஆழ்வார்கள் நின்று கொண்டிருந்ததாய்ச் சொல்லப்படுகிறது. ஸ்ரீவில்லிபுத்தூர் முதலான திவ்யதேசங்களில் நாளைக்கும் ஆழ்வார்கள் பரமபதவாசலுக்கு வெளியில் நிற்பதைக் காணலாம். "காளங்கள் வலம்புரி கலந்து எங்கும் இசைத்தனர்" என்றபடி பரமபதவாசல் திறந்தபின் எக்காளை முதலானவை ஊதப்படுகின்றன. பெருமாள் எழுந்தருளும்போது மத்தியில் உபயங்களில் நின்று அமுது செய்து வருகிறது. "எதிரெதிர் இமையவர் இருப்பிடம் வகுத்தனர்" என்பதின் பொருளைக் காட்டிக் கொடுக்கிறது. நடை கொட்டகையில் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், உடையவர், ஸ்ரீரங்கராஜஸ்தவம் சொல்லும் கோஷ்டியோடு பெருமாளை எதிர்கொண்டழைத்தல் - "குடியடியார் இவர் கோவிந்தன் தனக்கென்று முடியுடை வானவர் முறை முறை எதிர் கொள்ள" என்கிறபடி பரமபதத்தி லுள்ளவர்கள் முக்தனை எதிர் கொண்டழைத்து ஸத்காரம் செய்வதைக் குறிப்பிடுகிறது.

"கொடியமணி நெடு மதிள் கோபுரம் குறுகினர் வடிவுடை மாதவன் வைகுந்தம் புகவே" என்பதின் பொருள் பெருமாள் தவிட்டரை வாசல் நுழைவதால் நிருபிக்கப் படுகிறது. கொட்டகை பரமபதத்திலுள்ள திவ்யாகாரந்தாரத்தின் ஸ்தானத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. அதில் பெருமாள் ஆழ்வார்களுக்கு மரியாதை பண்ணிவிட்டுப் பக்தியுலாவி ஆயிரக்கால் மண்டபத்திற்கு வந்து படியேற்றமாகி அதில் ஏறிச் செல்லும் போது தாஸநம்பிகள் எதிரில் வருவதால் "கதிரவரவரவர் கைந்திரை காட்டினர்" என்கிறபடி தேஜோ விசிஷ்டர்களான பரமபதவாஸிகள் அவ்விடம் வந்த முக்தனை ஸத்கரித்து அங்குள்ள விசேஷங்களைக் காட்டுகிறார்களென்று அறிவிக்கப்படுகிறது. பெருமாள் திருமாமணி மண்டபத்திற்குப் பக்கத்தில் சென்று கட தீபாராதனையாகும் போது தாளிகள் தட்டிகளுடன் நிற்பதால் "நிறை குட விளக்கமும் மதிமுக மடந்தையர் ஏந்தினர் வந்தே" என்பது காட்டப்படுகிறது.

பிறகு பெருமாள் மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் போது அவர் எதிரில் ஆழ்வார்கள் வீற்றிருப்பது "மாமணி மண்டபத்து அந்தமில் பேரின்பத்து அடியரோடு இருந்தமை" என்கிறபடி முக்தன் பரமபதத்திலுள்ள திருமாமணி மண்டபத்தை அடைந்து அங்குள்ள நித்ய முக்தர் மத்தியில் ஆனந்தபரிதனாயிருப்பதைக் காட்டுகிறது. பிறகு பெருமாள் முன், நாளக்கு ஒரு பத்தாக பத்து நாளும் திருவாய்மொழி ஸேவிக்கப்படும். நிவேதனம் முதலானது நடந்த பிறகு பெருமாள் ஸந்நிதிக்குள் செல்லப் புறப்படுவார். பனிக்காகப் போர்வை சாத்திக் கொண்டு விளாமிச்சிவேர் சப்பரத்தில் எழுந்தருளுவார். கொட்டகையில் மல்லாரி என்னும் வாத்திய கோஷத்துடன் ஒய்யார நடை போடுவார். அப்பொழுது பலவித வாத்யங்கள் வாசிக்கப்படும். அந்த வாத்யங்களில் கடைசியாக வாசிக்கப்படுவது வீணை. இந்த வாத்தியத்துடன் நாழி கோட்டான் வாசலிலிருந்து ஸந்நிதிக்குச் செல்லுவார்.

திருக்கைத்தல ஸேவை :-

பெருமாள் திருமாமணி மண்டபத்திற்குச் சென்றதும், இந்தச் கைத்தல ஸேவை நடக்கிறது. கங்குலும் பகலும் என்கிற பத்துப் பாசுரங்களையும் பகவான் மனதுருகும்படி பாடி தனக்கு தரிசனம் கொடுக்க வேணுமென்று பிரார்த்தித்த நம்மாழ்வாருக்குப் பெருமாள் ஸேவை ஸாதிப்பதைக் காட்ட அர்ச்சகர்கள் பெருமாளைத் தங்கள் கையில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து சில நிமிஷ காலம் நிற்பார்கள். அப்பொழுது ஆயிரங்கால் மண்டபத்தில் நாயகி பாவத்தில் நாச்சியார் திருக்கோலத்துடன் நிற்கும் நம்மாழ்வார் முன் அரையர்கள் நின்று கொண்டு மேற்சொல்லிய பத்து பாசுரங்களையும் ஸேவிப்பார்கள். பிறகு பெருமாள் மண்டபத்திற்கு எழுந்தருளப் பண்ணப்படுவார்.

ஆழ்வார் மோக்ஷம் :-

இராப்பத்தின் கடைசி நாளில் நம்மாழ்வார் எப்படி மோக்ஷத்தை அடைந்தார் என்பது காட்டிக் கொடுக்கப் படுகிறது. இன்றைய தினம் நம்மாழ்வார் பரமபதத்துக்குச் செல்லும் ஒரு முக்தன் வேஷத்திலிருப்பார். கிரீடம் முதலான திருவாபரணங்கள் இல்லாமலும், பட்டு பீதாம்பரமில்லாமலும், வெள்ளையுடுத்துப் பன்னிரு நாமமும், துளசி மாலையும் தரித்து ஸேவை ஸாதிப்பார். பெருமாள் வழக்கம் போல் புறப்பட்டு வந்து சந்திரபுஷ்கரணியில் தீர்த்தம் ஸாதித்து தீர்த்தவாரி நடத்தி மண்டபம் சேர்ந்து, திருவந்திக் காப்பாகி உபாத்தியாயருக்கு ஸேவை ஸாதித்து, வழியில் வந்து தண்டன் ஸமர்ப்பிக்கும் பட்டரை "நம் பட்டரை வீட்டில் விட்டுவா" என்று வேத விண்ணப்பத்துக்காக அனுக்ரஹித்து, திருமஞ்சனம் கண்டருளின பின் பன்னிராயிரம் திருப்பணியாரங்கள் அமுது செய்வார் (பணியாரங்களில் ஏற்படும் குறைவுகளுக்கு ஈடுபடுத்தி சரிக்கட்ட இந்தப் பன்னிராயி ராயிரம் திருப்பணியாரமும் நிவேதனம் செய்யப்படுகிறது).

பிறகு சத்ரசாமராதிகளுடன் நம்மாழ்வாரை, அர்ச்சகர்கள் கையில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போகும் போது "சூழ்விசும்பணிமுகில்" என்னும் பத்து பாசுரங்களும் ஸேவிக்கப்படும் ஆழ்வார பெருமாள் திருவடியில் ஸமர்பிக்கப் படுவார். துளசியால் ஆழ்வாரை மறைக்கும் போது முனியே நான்முகனே" என்ற பத்துப்பாசுரங்களும், அரையரால் கானம் செய்யப்படும். நம்மாழ்வாரைப் பெருமாள் திருவடியில் சேர்ப்பதினால் "நாடாத மலர் நாடி நாள்தோறும் நாரணன் தன் வாடாத மலரடிக்கீழ் வைக்கவே" என்பதின் தாத்பர்யத்தையும்,துளசியில் மூடுவதால் "நேசஞ் செய்து உன்னோடு என்னை உயிர் வேறின்றி ஒன்றாகவே கொண்டாய்" என்கிறபடி பரிபூர்ணனான பகவான் தன்னுள்ளேயாம்படி ஸாயுஜ்ய

போகத்தை அளித்ததையும், எல்லோரும் அறியும்படி நடத்திக் காட்டுவதாகும். இதுவே "உள்கலத்தல்" அல்லது "மெய் கலத்தல்" என்று சொல்லப்படுகிறது.

மேலே சொன்னபடி ஆழ்வார் திருவடி தொழுத பிறகு பெருமாள் நம்மாழ்வாருக்குத் தமது மாலை, கஸ்தூரி திருமண்காப்புகளை அளிப்பார். இதனால் பரமபதத்துக்குச் சென்ற முக்தனுக்கு பகவான் அருள் புரிவது காட்டப்படுகிறது. பெருமாள் ஸிம்ஹாசனத்திலிருந்து அர்ச்சகர்கள் கைத்தலத்தில் ஆழ்வார் சத்ரசாமராதிகளுடன் பந்தம் வாத்ய கோஷங்களுடன் புறப்பட்டுத் தமது இருப்பிடம் சேருவார். அப்பொழுது அரையர் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்னும் பாசுரங்களை கானம் செய்வார்.

பெருமாள் மண்டபத்திலிருந்து புறப்பட்டு வந்து கொட்டகையிலுள்ள நாலுகால் மண்டபத்தில் நின்று கொண்டு ஆழ்வார்களுக்கு மரியாதை செய்து அனுப்பிவிட்டு, திருத்தாழ்வரை தாஸரால் சொல்லப்படும் "படிப்பு" எனப்படும் ஸ்ரீரங்கநாதன் திருப்பாற்கடலிலிருந்து ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்த விருத்தாந்தத்தை எல்லோரும் கேட்டு அனுபவிக்கும்படி செய்துவிட்டு, கொட்டகை எழுந்தருளி ஸ்தானிகர் "நாயிந்தே - ரகுநாதா" என்று பிரார்த்திக்க, பெருமாளும் ஸேவாபலம் தீர்த்தபலம் அனுக்ரஹித்து மேலே "திருக்கல்யாண உத்ஸவத்தை நன்றாய் நடத்திவை" என ஆஜ்ஞாபிக்க மேற்படி ஆஜ்ஞையை மணியக்காரர் சிரஸாவகித்து மங்கள வாத்திய கோஷங்கள் முழங்க, பெருமாள் கொஞ்சதூரம் போய் "நம் பாடுவானை வீட்டில் விட்டு வா என்று ஆக்ஞாபித்துவிட்டு மூலஸ்தானம் போய்ச் சேருவார். பட்டர், அரையர், ப்ரம்மரதங்கள் நடைபெற்று இராப்பத்து உத்ஸவம் முடிவடைகிறது.

இயற்பா :-

வைகுண்ட ஏகாதசி உத்ஸவத்தின் கடைசி நாளில் அரையரால் பெருமாள் முன் கானம் செய்யப்படாமல்

பாக்கியாயிருக்கும், ஆயிரம் பாட்டுகளும், தாளம், அபிநயம் வியாக்கியானங்கள் இல்லாமல், திருவரங்கத்தமுதனரால் ஸேவிக்கப்பட்டு இராமானுச நூற்றந்தாதியையும் பூர்த்தி செய்து, கடைசியாக குலசேகரன் படி பக்கத்தில் இயல்சாற்று வாழித் திருநாமங்களுடன் சாற்றுமுறை செய்யப்படும். இந்த உத்ஸவத்திற்கு ஆழ்வார்களில் சிலரே வருவார்கள். இத்துடன் வைகுண்ட ஏகாதசி உத்ஸவம் பூர்த்தியடைகிறது.

முத்தங்கிஸேவை :-

ஏகாதசியன்றைய தினமும் அதையடுத்த சில தினங்களும், முத்தினாலாகிய அங்கியை தரித்திருக்கும் மூலவரை, கர்ப்பக்ருஹத்தில் கண்டு தரிசிப்பதே "முத்தங்கி ஸேவை" எனச் சொல்லப்படுகிறது.

ஸப்தாவரணம்

ஸ்ரீரங்கதில் ஒவ்வொரு உத்ஸவத்திலும் ஸப்தாவரணத் தன்று திருவீதியில் "இராமாநுச நூற்றந்தாதி" சேவையாகும், இது முடிந்து நம்பெருமாள் எம்பெருமானார் சன்னிதிக்கு எழுந்தருளி, உடையவரே ! தேவரீர் ஏற்பாடு செய்தபடி உத்ஸவம் நன்றாக நிறைவேறிற்று ! என்று சொல்வது போல் எழுந்தருள்கிறார். உடையவர் கைத்தலத்தில் வாசல் வரை வந்து காத்திருந்து நம்பெருமாளுடைய ப்ரசாதங்களை (சாத்துப்படி, புஷ்பம், ஸ்ரீசடகோபன் இவற்றைப்) பெற்றுக் கொண்டு, தன் நியமனப்படி உத்ஸவத்தை நடத்தி முடித்த கைங்கர்ய பரர்கள் அனைவருக்குமாக இளநீர் நம்பெருமா ளுக்கு சமர்ப்பித்து அதை கைங்கர்யபரர்களுக்குக் கொடுத்து, நம்பெருமாள் சன்னிதியை விட்டுக்கிளம்புயவுடன், கைத் தலத்திலேயே வாசல் வரை வந்து வழியனுப்பும் காட்சி நெஞ்சினால் நினைப்பரியது.

தை :-

தை மாதத்தில் பூபதித் திருவிழா நடைபெறுகிறது. இப்பூபதித் திருவிழாவின் முதல் நாள் திருமுளை நாளாகும். முதல் திருநாள் அன்று சூரியப் பிரபையில் புறப்பாடு நடைபெறும்.சூரியன் புற இருளை நீக்குவதுபோல பெருமாள் நம் அக இருளை நீக்குவதைப் பெருமாள் சூரியப் பிரபையில் திரு உலா வருவது காட்டுகிறது. பூபதி திருநாளில் அன்ன வாகனத்தில் திருவுலா கண்டருளுகிறார். அன்னம் பாலுடன் கலந்த நீரைப் பிரித்துப் பாலை மட்டும் பருகுவது போல, அடியார்களின் அஞ்ஞானத்தையும், தீய ஒழுக்கத்தையும் நீக்கி ஆன்மஞானத்தை அடைய வேண்டும் என்பதை அன்ன வாகனம் குறிக்கிறது. மூன்றாம் நாள் பெருமாள் சிம்ம வாகனத்தில் புறப்பாடு ஆகும்.

சிங்கத்தை விட மேம்பட்டது யாளி. யாளி முற்றும் சிங்கத்தின் வடிவத்துடன் யானையின் துதிக்கையைக் கொண்டது. இது இறைவன் அடியார்களுக்கு ஆண்மை, சாந்தி, வைராக்கியம் ஆகியவற்றை அருள்வதைக் குறிக்கின்றது. நான்காம் திருநாள் சந்திர பிரபை வாகனம். பக்தர்கள் அடையும் ஆனந்தத்தை அது காட்டுகிறது. முற்றிலும் அறிந்த ஆன்மா பரம்பொருளுக்கே அடிமை என்பதைக் கருட வாகனம் குறிக்கிறது. ஐந்தாம் திரு நாள் ஆதி சேஷனை திருமால் வாகனமாகக் கொண்டு அருளுகிறார். சேஷம் என்பது மிச்சம் என்னும் பொருளைத் தருகிறது. எல்லாம் அழிந்த பின்னரும் எஞ்சியிருப்பவர் சேஷன் என்னும் ஆதி சேஷன். அதனால் நம்பெருமாள் ஆதிசேஷனை வாகனமாக கொண்டு அருளுகிறார்.

குரங்கு ஒரு கிளையை விட்டு மற்றொரு கிளையைத் தாவிப் பிடிப்பது போல் மனம் மாறிக் கொண்டே வரும். இதனைக் குரங்கு மனம் என்று சொல்லுவார்கள். ஆனால் குரங்கினத்தவராகிய அனுமார் இராமனிடம் மாறுபடாத பேரன்பு

கொண்டவர். இதனை அனுமார் வாகனம் காட்டுகிறது. தம் அடியார்களின் தேவைகளுக்கேற்ப அவர்கள் கேளாத நிலையிலே பெருமாள் அருள்கிறார் என்பதைக் கற்பக விருட்ச வாகனம் தெரிவிக்கிறது. அஹங்காரங்களை அடக்குபவர் இறைவன் என்பதை யானை வாகனம் காட்டுகிறது. அங்குசத்தால் அடக்கப்பட்ட யானை மனித இனத்துக்கு உதவுவது போன்று ஞானமாகிய அங்குசத்தினால் மனம் அடக்கப்படும் போது மனம் அஹங்காரம் ஒழிந்து நன்மையே செய்கின்றது. ஏழாம் திருநாள் கண்ணாடிஅறை சேவையாகும். இவ்வுலகத்திலுள்ள சராசரங்கள் அனைத்திலும் தெய்வச் சாயலைக் கண்டு இறைவன் புரியும் படைப்பின் பெருமையை உணர வல்லவராக நாம் இருக்க வேண்டும் என்பதைக் கண்ணாடி அறை சேவை குறிக்கிறது. எட்டாம் திருநாளில் காலை நம்பெருமாள் பல்லக்கில் உலா வந்து அரங்க விலாசத்தில எழுந்தருளுகிறார். மாலையில் குதிலை வாகனத்தில் புறப்படுகிறார். உடலில் உயிர் கொள்ளும் சுவசத்தைக் குதிரை குறிக்கிறது. மேலும் இது சுவாசத்தை வேறு வழியில் அலைய விடாமல் பற்றற்ற நிலையில் நிற்க வேண்டும் என்னும் சிறப்பையும் குறிக்கும்.

திருத்தேர்விழா :-

உடலாகிய தேரில் ஏறி அதிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள குண்டலினியை நாபிக்கு மேல் ஏற்றி அங்கிருந்து மேலே நிலைப்படுத்தி உச்சியிலுள்ள பிரம்மரந்திரத்திற்கு ஏற்றுவதால் வீடுபேறு பெறலாம் என்பதைத் திருத்தேர் குறிக்கின்றது.

மாசி :-

முதல் நாள் காலையில் திருப்பள்ளி ஓடம் : மாலையில் அன்ன வாகனம். 2ம் நாள் அனுமந்த வாகனம், 3ம் நாள் மாலையில் கற்பக விருட்சம். நான்காம் நாள் வெள்ளி கருட வாகனம். ஐந்தாம் நாள் இரட்டைப் பிரபை வாகனம். ஆறாம்

நாள் யானை வாகனம். ஆறாம் நாளில் உள் ஆண்டாள் சன்னிதியில் மாலை மாற்றல் நடைபெறும். ஏழாம் நாள் உபயநாச்சியார் களுடன் நெல் அளவை காண்கிறார். எட்டாம் நாள் திருப்பள்ளி ஓடமும், ஒன்பதாம் நாள் தெப்ப மண்டப விழாவும், மாலையில் சூரிய பிரபைப் பந்தக் காட்சியும் நடைபெறும். தெப்பத்தில் பெருமாள் மைய மண்டபத்தைச் சுற்றி மூன்று முறை வலம் வரவார். நான்காம் நாளில் கருட ஸேவை மிகச் சிறப்பான திருநாளாகும். ஒன்பதாம் நாளில் பந்தக்காட்சி நடைபெறுகிறது. அந்நாளில் பெருமாள் சந்திரப் பிரபையில் ஏராளமான தீவட்டிகளின் மையமாக வீதி வலம் வருவார்.

பங்குனி :- ஆதி பிரம்மோற்சவம் விபீடணரால் தொடங்கப் பெற்றது. விபீடணர் அரங்க விமானத்தை அயோத்தியிலிருந்து இலங்கைக்கு எடுத்துச் செல்லும் போது வழியில் சந்திர புஷ்கரணிக் கரையில் வைத்தார். மறுநாள் பிரம்மதேவர் வகுத்த உற்சவத்தை நடத்த வேண்டிய நாளானதால் அந் நாளில் இலங்கைக்கு விபீடணர் செல்லாமல் அங்கேயே அப்பிரம்ம உற்சவம் நடத்தினார்.இதனை நிறைவு கூறும் முறையில் இந்த உற்சவம் ஆண்டு தோறும் நடத்தப் பெறுகிறது.

திருவரங்கத்தில் நடைபெறும் விழாக்களில் மிகவும் ரசனை பொருந்திய ஒரு நிகழ்ச்சியை இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியாது. பங்குனி மாதம் நடைபெறும் திருவிழாவில் உற்சவத்தின் 6வது தினத்தில் திருவரங்கள் உறையூர் சென்று கமலவல்லி நாச்சியாரைக் கடிமணம் புரிந்து கொள் கிறார். பிறகு 9வது தினத்தில் மீண்டும் ஸ்ரீரங்கநாச்சியாரைக் காண ஸ்ரீரங்கம் திரும்புவார். மூன்று நாட்களாக உறையூச் செல்வியோடு இருந்துவிட்டு வந்ததை எண்ணி ஸ்ரீரங்கநாச்சி யார் பிணக்கு கொண்டு "என்னைப் பார்க்க வரக்கூடாது" என்று திருக்கதவுகளைச் சாத்துவாள். இந்தப் பிணக்கிற்கு ப்ரணய கலஹம் என்று பெயர். இந்தப் பிணக்கைத் தீர்த்து வைக்க நம்மாழ்வார் வந்து சமாதானம் செய்து வைப்பார். அதன் பின்

இருவரும் சமாதான முற்று சேர்த்தியில் காட்சியளிப்பர். இத் திருநாளன்று தாயாருக்காக வாதிடுபவர்கள் பண்டாரிகள். 5வது திருச் சுற்றில் உள்ள பிரதானமான வாசற் கதவை அடைத்து விடுவார்கள் அரையர்கள் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் நடுவராக இருந்து தூது செல்வர். அப்போது பழம், பூ, தயிர் முதலியவற்றை வீசுவதும் (பிராட்டி கோபமுற்று பெருமாள் மீ து வீசி விட்டு கதவை அடைத்துக் கொள்வதாக ஐதீஹ்யம்) அரையர்கள் ஒருவர் மாற்றி ஒருவர் பேசி பிணக்கு தீர்ந்து சமாதானம் ஆகியுள்ளனர் என்று தெரிவிப்பர். இதன் பிறகு பெருமாளும் பிராட்டியும் ஒருசேரக் காட்சியளிப்பர். இதற்கு அடுத்த நாள் நம்பெருமாள் திருவீதி உலா வருவார். இந்த ரதத்திற்கும் கோரதம் என்று பெயர்.

என்னே அரங்கனின் மாண்பு! நம்மாழ்வார் சமாதானம் செய்து வைக்கிறார். தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை கட்டித் தருகிறார். திருமங்கைமன்னன் மண்டபமும் மதிலும் கட்டித் தருகிறார். பெரியாழ்வார் பெண் கொடுத்து மாமனாகிறார். ஆண்டாள் மாலையிட்டு மணாட்டியாகிறாள். திருப்பாணாழ்வார் திருவடிகளில் சேர்த்தியாகிறார். இவர்களு டன் மற்றைய ஆழ்வார்களும் மங்களாசாசனப் பூக்களைச் சூட்டி மகிழ்கின்றனர். என்னே ஆழ்வார்கட்கும் அரங்கனுக் கும் உள்ள தொடர்பு!

## பெருமாளுக்குச் செய்விக்கப்படும் திருவமுது.:

பெருமாளுக்குக் காலையில் வெண்பொங்கல், தோசை, வெல்லம், சுக்கு, கறியமுது, வடை முதலியவையும், பகலில் வாழைக்காயும், சாற்றமுது, மிளகுரசம், அமுதுபடி அடிசில் ஆகியவையும், மாலையில் வடை, அப்பம், தேன் குழல், பால்சாதம், பால் பொங்கல், தத்யோதனமும், இரவில் அரிசிச் சாதத்துடன் கூடிய அமுதமும், கறியமுதும், குங்குமப்பூ நாட்டுச் சர்க்கரை, ஏலம் ஆகியவை கலந்த பாலும், தாயார் ஸந்நிதியில் காலையில் ரொட்டி, பால் தோசை, பகலில் பொங்கல் அடிசில்,

அதிரசம், பருப்பும், மாலையில் வடை, தேன்குழல், புட்டு இரவில் பொங்கல் அமுதுபடியாகும். மற்றைய சன்னிதிகளில் ஒரு வேளைப் பாலும், அடிசிலும், ஆஞ்சநேயருக்கு வடை மாலையும், வெண்ணெயும் படைக்கப்படுகின்றன.

பூசைக்கு உகந்த மலர் கிடைக்காததால் ஏற்படக் கூடிய குறை நீங்கச் சித்திரை மாதத்தில் மலர் சூட்டுகின்ற பூச்சாத்து விழாவும், தீர்த்தங்களின் தெய்வத் திருவுருவங்களை நீராட்டும் போது ஏற்படும் குறையை நீக்க ஆயிரம் குடம் ஆனித் திருமஞ்சனமும், தெய்வங்களுக்கு நைவேத்தியமாக அன்னம் படைப்பதில் ஏற்படும் குறைவு நீங்க பெரியதிருப்பாவாடையும், ஐப்பசி மாதத்தில் ஊஞ்சல் உற்சவமும், தெய்வத் திருவுருவங்களுக்கு ஆடைகள் அணிவிப்பதில் ஏற்படும் குறை நீங்க கார்த்திகை கைசிக ஏகாதசித்திருவிழாவில் போர்வை சாற்றுதலும், வேதம், திவ்யப் பிரபந்தம் ஆகியவை ஓதுவதில் நிகழும் குறை நீங்க திரு அத்யயன மகோற்சவமும், ஏனைய குறைகள் நீங்க மாசி மாத்தில் பந்தக் காட்சியுமாக இங்குத் தனித்திருவிழாக்கள் நடைபெறு கின்றன.

தேர்கள்:

தேர்கள் மூன்று உள்ளன. சித்திரை மாதத்திர் சித்திரை தேரோட்டம் விருப்பண்ண உடையார் விழாவாக நடைபெறுகிறது. தை மாதத்தில் வீரபூபதி உடையார் விழாவாக தேரோட்டம் நடைபெறும், பங்குனியில் வீபிடணரால் செய்து வைக்கப்பட்டதாகச் சொல்லப்படும் ஆதிப்ரம்மோற்சவத் தேரோட்டமும் நடைபெறுகிறது.

இந்துக்களுக்கு மட்டுமன்றி உலகத்தோர் அனைவருக்கும் பொதுவான செல்வமாகிவிட்டார் நம் திருவரங்கச் செல்வர்.

இவ்வுரிமையை உறுதி செய்வது போல் 1987 இல் அரங்கனுக்கு ஆசியாவிலேயே மிகப் பெரிய கோபுரத்தை ஜீயர் ஸ்வாமிகள் அமைத்து கொடுத்து விட்டார்.

ஆம் திருவரங்கத்து இன்னமுது வைணவர்களுக்கு மட்டுமன்றி, இந்துக்களுக்கு மட்டுமன்றி, உலகத்தின் அனைத்து மக்களுக்கும் உரிய ஒரு தனிச் சொத்து அது தான் வைணவ சம்பிரதாயமும் ஆகும். அதனால் தான் ஆண்டாளும் வையத்து வாழ்வீர்காள் என்று வையத்து மாந்தரை எல்லாம் விளித்தாள்.

## ஸ்ரீரங்கம் தலைமை பெற்றக் காரணம்:

ஒரு மரத்தின் அடிபாகமும், அதன் வேர்களும் மரம் ஜீவிப்பதற்குக் காரணமாயிருக்கின்றன. வேரில் சேர்க்கும் தீர்த்தம் அடி மரத்தின் வழியாய் அதனுடைய கிளைகளுக்குச் சென்று அந்த மரத்தைச் செழித்து விளங்கும் படிச் செய்கிறது. அது போல நூற்றெட்டு திவ்ய தேசங்களாகிற விருக்ஷத்தின் அடிபாகமும் வேர்ப்பற்றுமாயிருப்பது ஸ்ரீரங்கம். அந்த விருக்ஷத் தின் கிளைகளாயிருக்கின்றன மற்ற திவ்ய தேசங்கள்.

ஸ்ரீரங்கம் என்ற ராஜதானியே தம்முடைய நிரந்தர வாசஸ்தானம் என்பதைக் காட்டி கொடுக்கும் பொருட்டு ரங்கநாதன் உத்சவங்களில் ஸ்ரீரங்கத்திற்கு வெளியிலுள்ள மண்டபங்களுக்குச் சென்றாலும் ராத்திரி அவ்விடங்களில் தங்காமல் கோயிலுக்குத் திரும்பி வந்து அரவணை அமுது செய்து தமது ஸிம்ஹாஸனத்தில் சயனித்துக் கொள்வது வழக்கமாயிருந்து வருகிறது. ஸ்ரீரங்கத்தினுடைய வைபவங் களையும் விசேஷங்களையும், பூர்ணமாய் எடுத்துச் சொல்லுவதென்பது யாருக்கும் இயலாதது. ஏன் எனில் "நினைப்பரிய நீள் அரங்கத்தான்" என்று பூதத்தாரும், "கேட்பார்க்கு அரும் பொருளாய் நின்ற அரங்கனே" என்று திருமழிசைப்பிரானும் பேசினபடி ரங்கநாதனுடைய புகழ் "யானுமேத்தி ஏழுலகும் முற்றுமேத்தி பின்னையும், தானு மேத்திலும் தன்னையேத்த வேத்த எங்கெய்தும்" என்று நம்மாழ்வார் பாடினபடி ஏத்தினவிடம் அளவுபட்டும்,

ஒத்தாதவிடம் அளவுக்கு விஞ்சியும் நிற்கும். ஆதலால் ஆழ்வார்கள் பத்து பேர்களும், ஆண்டாளும், திவ்யகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் போன்ற கவிகளும், ரங்கநாதனைப் பற்றியும் திருவரங்கத்தைப் பற்றியும் அனேக ப்ரபந்தங்களும் பதிகங்களும் பாடிப் போற்றி உள்ளார்கள்.

**ராமானுஜரின் கட்டளை:**

உடையவர் என்னும் ராமானுஜரின் காலத்தில் திராவிட வேதம் எல்லா திவ்ய தேசங்களிலும் ஓதப்பட வேண்டு மென்று ஏற்பாடு செய்யப்பட்டது. ஸ்ரீரங்கம் கோயிலில் எந்தெந்த காலத்தில் எந்தெந்த திவ்யப்பிரபந்தம் ஓதப்பட வேண்டும் என்னும் நியதி உண்டாக்கப்பட்டது. அதனால் தான் ராமானுஜருடைய வாழித்திருநாமத்தில் "தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்தி வைத்தான் வாழியே" எனப்பட்டது. ரங்கநாதனுடைய செல்வம் என்ன வென்றால் "வான் திகழும் சோலை மதிளரங்கர் வண் புகழ் மேல் ஆன்ற தமிழ் மறை களாயிரமும்" என்றார் பட்டர், அதாவது ஆழ்வார்களால் பாடப்பட்ட பாசுரங்கள் எல்லாம் ரங்கநாதனுடைய செல்வம் என்றார்.

இது தவிர ஆழ்வார் பாசுரங்களின் தத்துவங்களையும், பொருள்களையும் எல்லோருமறியும் பொருட்டு நடத்திக் காட்ட இராமானுசனுடையார் என்று சிலரை ஏற்படுத்தி அவர்களை நடிக பாத்ரங்களாக உத்ஸவாதிகளில் நடிக்கும் படி செய்தார். நாதமுனிகளாலே மீண்டும் ஸ்தாபிக்கப்பட்ட உத்ஸவம் உடையவர் காலம் வரை குறைவற நடந்து வந்தது. உடையவர் சைவனாயிருந்த க்ருமி கண்ட சோழனுடைய கொடுமையினால் பன்னிரெண்டு ஆண்டுகள் திருநாராயண புரத்தில் எழுந்தருளியிருந்து, அவன் இறந்த பிறகு ஸ்ரீரங்கம் மீள வந்த போது நம்மாழ்வார் திருநகரியிலிருந்து எழுந்தரு ளும் சூழ்நிலை இல்லாமல் உத்ஸவம் நின்று போன செய்தி

அறிந்து இனி வருஷா வருஷம் திருநகரியிலிருந்து ஆழ்வாரை எழுந்தருளப் பண்ணி உத்ஸவம் நடத்த முடியாதென்று பார்த்து, எல்லா ஆழ்வார்களையும், ஸ்ரீரங்கத்திலேயே பிரதிஷ்டிப்பித்து உத்ஸவத்தை நடத்தி வைத்தார். முன்பு நம்மாழ்வார் ஒருவர் மட்டுமே எழுந்தருளி நடந்த உத்ஸவம் இப்பொழுது எல்லா ஆழ்வார்களும் எழுந்தருளி நடப்பது உடையவர் செய்த ஏற்பாடு.

ப்ரபன்ன காயத்ரியான இராமநுசநூற்றந்தாதியோடு இயல்பா ப்ரபந்தம் முழுதும் திருவரங்கத்தமுதனாராலேயே பெருமாளிடம் விண்ணப்பமாகும் படி உடையவரே ஏற்பாடு செய்தார். உடையவர் தாம் ஒரு இயற்பாவினை அமுதனாருக்கு அருளி ஸ்ரீகோசம் (புத்தகம்) துணை கொண்டு பெரிய பெருமாள் முன்பு இயற்பாவினை அமுதனாரைக் கொண்டு ஸேவிக்க ஏற்பாடு செய்தார். அதை பின்பற்றியே இன்றும் அரையர்கள் இயற்பாவினை விண்ணப்பம் செய்யும் போது ஸ்ரீகோசம் வைத்துக் கொண்டு ஸேவிக்கிறார்கள்.

**பட்டர் நிர்வாஹம்:**

பட்டர், உடையவர் இட்ட கட்டளையின் பேரில் பெருமாள் அனுக்ரஹித்த பரிகரங்களுடன் புறப்பட்டு, விஷ்ணு பரத்வ ஸ்தாபகமான திருநெடுந்தாண்டக ரபந்தத்தின் அர்த்த விசேஷங்களைக் கொண்டு ஜயித்து அவரைத் தனக்கு நஞ்சீயரை சிஷ்யராக்கிக் கொண்டு, அத்யயனோத்ஸவத்துக்கு. முதல் நாள் ஸ்ரீரங்கம் எழுந்தருளினார். திருநெடுந்தாண்டகத்தின் மஹார்த்தங்களால் வேதாந்தியை ஜயித்ததை பட்டர் பெருமாளிடம் விண்ணப்பம் செய்ய, தன் புத்திரன் வெற்றியோடு வந்ததற்கு மகிழ்ந்த பெருமாள் திருநெடுந்தாண்டகத்தின் அர்த்தத்தை அப்பொழுதே தன் எதிரில் உபந்யஸிக்குமாறு பட்டருக்குக் கட்டளையிட்டார். அது முதல் ஸ்ரீரங்கத்தில் திருநெடுந்தாண்டகமே திருஅத்யயனோத்ஸவத்துக்கு முதல் ப்ரபந்தமாயிற்று.

## மணவாளமாமுனிகளின் ஏற்பாடு:-

மேல் சொன்னபடி பாசுரங்களுக்காகவே உத்ஸவம் ஏற்பட்டது இப்பொழுது பாசுரங்களோடு வியாக்யானங் களும், பெருமாளுக்கு எதிரில், ஸேவிக்கப்படுகின்றன. வ்யாக்யாதாக்களில் நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, இருவரே முக்கியர்கள், இவ்விருவரின் வியாக்யானங்களை நாடறியச் செய்தவர்கள் பிள்ளைலோகாசாரியரும், மணவாள மாமுனிகளும் ஆவர். திருவாய்மொழிக்கு நம்பிள்ளை வியாக்யானங்கள் அருளிச்செய்தார். திவ்யபிரபந்தம் முழுதுக்கும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானம் அருளிச் செய்தார். வ்யாக்யானமான நம்பிள்ளை ஈடு, முப்பத்தாறாயிரப்படியை, மிகவும் பிரஸித்தமாக்கினவர் மணவாளமாமுனிகள், ஆகையால் அவருக்கு ஈடு முப்பதாறாயிரப் பெருக்கர் என்று திருநாமமாயிற்று. மாமுனிகள் நம்பெருமாள் ஸந்நிதியில் ஒரு வருஷம் முழுதும் பெருமாளுக்கே திருவாய்மொழி காலக்ஷேபம் செய்தார். சாற்றுமுறை அன்று நம்பெருமாள் சிஷ்யராயிருந்து ''ஸ்ரீசைலேஶ தயாபாத்ரம்'' என்னும் தனியனை அருளிச் செய்தார். இப்படி மணவாளமாமுனிகள் ரங்கநாதனுக்கு வ்யாக்யானங்களை அருளிச்செய்தது முதல், வ்யாக்யானங்களும் இங்கு ஸேவிக்கப்படுகின்றன.

அரையர் ஸந்ததியிலிருந்த தம்பிரான்மார் அருளிச்செய்த விசேஷார்த்தங்களே நெடுநாளாக ஸேவிக்கப்பட்ட போதிலும், திருவாய்மொழிக்கு நம்பிள்ளை ஈடு, திருமொழிக்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம், பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம் கிடைக்காத பெரியாழ்வார் திருமொழி சில பாகங்களுக்கு, மணவாளமாமுனி வ்யாக்யானம், ஆக இந்த மூன்று வ்யாக்யானங்களே ஸ்ரீகோசத்தைப் பார்த்து வரி தவறாமல் ஸேவிக்கப்படுவது மணவாளமாமுனிகள் பெருமாளுக்கு அவற்றைக் காலக்ஷேபம் ஸாதித்த க்ரமம். இந்த

மூன்று வ்யாக்யானங்களும், தம்பிரான்மார் வ்யாக்யானமும் தவிர இதர வ்யாக்யானங்களுக்கு நம்பெருமாள் ஸந்நிதியில் ப்ரவேசமில்லை.

ஸ்ரீரங்கநாதனுக்கு நித்யோத்ஸவ, பக்ஷோத்ஸவ, மாஸோத்ஸவ, ஸம்வத்ஸரோத்ஸவங்கள் ஏற்பட்டிருந்ததில் நித்யமாக நடக்க வேண்டிய நித்ய உத்ஸவம், முதலியவை நடந்தேறி வருகின்றன. ப்ரம்மோத்ஸவமென்னும் த்வஜா ரோஹண உத்ஸவம் முக்கியமானதாயிருந்தாலும், ரங்க நாதன் ஸந்நிதியில் மார்கழி மாதத்தில் நடக்கும் திரு அத்யயன உத்ஸவமென்னும் திருமொழி, திருவாய்மொழித் திருநாளாகிய பகல் பத்து, இராப்பத்து உத்ஸவமே முக்கியமானதாகக் கருதப்படுகிறது. ஏனெனில் "காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும் வண்ணம் என்று தொண்டரடிப்பொடி யாழ்வார் அருளிச்செய்தபடி எம்பெருமான் திருவடிகளில் ஆத்மா உஜ்ஜீவிக்கும் மார்க்கத்தை இந்த உத்ஸவம் காட்டி கொடுப்பதால் இதற்கு மோக்ஷோத்ஸவம் எனப் பெயராகிறது.



## 2. சிந்து பூ மகிழும் திருவேங்கடம்

வேங்கடங்கள் மெய்ம்மேல் வினைமுற்றவும் *
தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார் *
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாம்கடமை * அதுசுமந்தார்கட்கே

(திருவாய்மொழி 3-3-6)

வேங்கடமெனில் பாவங்களைச் சுட்டெரிக்கக் கூடியது என்று பொருள் கொண்ட இத்தலத்தைப் பற்றி பிரம்மாண்ட புராணம் வராக புராணம், ஸ்காந்த புராணம், பாத்ம புராணம் என்ற புராணங்கள் வாயிலாக அறியப்படுகிறது. வேம் என்றால் வெந்து போம் கட என்றால் கடன் என்னும் பதம் கடைக்குறையாகி கட என்று பாபங்களைச் சொல்லும் எனவே. பாவங்கள் நாசமாகும் இடம் என்ற பொருள் வேங்கடம் என்ற சொல்லுக்கே பாவங்களைச் சுட்டெரித்தல் என்ற பொருள் உண்டு.

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே! *
நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல் *
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்*
படியாய்கிடந்து உன் பவளவாய் காண்பேனே.

(பெருமாள் திருமொழி 4-9)

திருப்பதி, திருமலை, ஏழுமலையான், ஆதிவராக க்ஷேத்திரம் என்று இன்னும் பல பெயர்களால் போற்றப்படும் திருவேங்கடத்து வாசம் செய்யும் ஸ்ரீனிவாசனே எத்தனையோ பிறவிகளாக தீர்க்க இயலாதவாறு தொடர்ந்து வரும் பாவங்களைத் தீர்ப்பவன். அதனால் தான் 'வல்வினைகள் தீர்க்கும் திருமால்' என்றார். பாவங்களைப் போக்க இப்பேர்ப் பட்ட நின் கோவிலை நாடி வரக்கூடிய அடியவர்கள், தேவாதி தேவர்கள், அரம்பையர்கள்ஆகியோர் மதித்து வரக்கூடிய ஒரு படிக்கல்லாக நின் கோவிலின் வாசலில் கிடக்க மாட்டேனோ. அவ்வாறு தான் கிடப்பேன். அவ்விதமே கிடந்து நின்

பவளவாய் கண்டு கொண்டே இருப்பேன் என்று குலசேகர ஆழ்வார் பாசுரஞ்சூட்டப்பட்ட இத்தலம் இன்றைய கலியுகத்தில் உலகப் பிரசித்தி பெற்றதாகத் திகழ்கிறது.

எந்நேரமும் பக்தர்களின் திருக்கூட்டம், பாடியாடும் பாகவதர்களின் கூட்டம், கோவிந்தா என்னும் நாமம் ஒலித்துக் கொண்டேயிருக்க பக்தர்கள் வருவதும் போவதுமான இடையறாத நிகழ்ச்சியாகி எந்நேரமும் பக்தியில் திளைத்துக் கொண்டிருக்கும் மலை.

தமிழகத்தின் வடவெல்லையாகத் திகழும் வேங்கடம் இன்று ஆந்திராவிற்குள் இருக்கிறது.

"வடவேங்கடம் தென்குமரி ஆஇடைத்
தமிழ் கூறும் நல்உலகத்து" - என்று பண்டைய தமிழ்நாட்டிற்கு

எல்லையாகத் திகழ்ந்து தமிழ் மணம் பரப்பிய வேங்கடம் ஆங்கிலேயரை விரட்டியடித்து சுதந்திர இந்தியா மாகணங்களாக உருப்பெற்ற போது ஆந்திராவிற்குள் நுழைந்து விட்டது. சென்னையைத் தமிழ் நாட்டுக்கு கொடுத்து விட்டு வேங்கடத்தை ஆந்திராவுக்குத் தந்து விட்டனர். நிலத்தால் பிரிந்து சென்றாலும் அடியார்கள் நினைவில் நீங்காது இடம் பெற்று விட்டது திருப்பதி. இத் திருமலைக்கு ஒவ்வொரு யுகத்திலும் ஒரு சிறப்பான நிகழ்ச்சியால் ஒவ்வொரு விசேடமான பெயர் வழங்கி வந்தது.

க்ருதயுகத்தில் **கருடாத்ரி** அல்லது **கிரிடாத்திரி**
திரேதாயுகத்தில் **வ்ருஷபாத்ரி**
துவாபரயுகத்தில் **அஞ்சனாத்ரி**
கலியுகத்தில் **வேங்கடாத்ரி– வேங்கடாசலம்**

ஸ்ரீனிவாசனாகப் பெருமாள் இங்கு எழுந்தருளுவதற்கு முன்பே வராக மூர்த்தியாக இவ்விடத்து எழுந்தருளி வராக ரூபியாய் காட்சி தந்து அருளினார். வராக க்ஷேத்திரம் என்றே ஒரு காலத்தில் இது புகழ் பெற்றிருந்தது தற்போதும்

இங்குள்ள ஸ்வாமி புஷ்கரிணிக்கு அருகில் அமைந்துள்ள ஆதிவராககரைச் சேவித்த பின்பே ஸ்ரீனிவாசனை சேவிக்க செல்ல வேண்டும் என்பது நியதி.

**மூலவர் திருநாமம்** - திருவேங்கடமுடையான், ஸ்ரீநிவாசன், வேங்கடாசலபதி, (பாலாஜி) ஏழுமலையான், வேங்கடத்தான், என்று பல திருநாமங்கள், கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

**உற்சவர்** - கல்யாண வேங்கடேச்வரர்

**தீர்த்தங்கள்** - மொத்தம் 14 தீர்த்தங்கள்.

1. ஸ்வாமி புஷ்கரிணி
2. ஆகாச கங்கை
3. பாவவிநாசம்
4. கோனேரி
5. வைகுண்ட தீர்த்தம்
6. ஜாபாலி தீர்த்தம்
7. சக்ர தீர்த்தம்.
8. வகுள தீர்த்தம்
9. பாண்டவ தீர்த்தம்
10. இராம க்ருஷ்ண தீர்த்தம்
11. தும்புரு தீர்த்தம்
12. சேஷ தீர்த்தம்
13. சுகஸந்தன தீர்த்தம்.
14. மொரதீர்த்தம்.

**விமானம்:** ஆனந்த நிலைய விமானம்

**காட்சி கண்டவர்கள்:** எண்ணற்ற ரிஷிகள், பிரம்மா, சிவன், ஆறுமுகன், தொண்டை மன்னன்.

வேங்கடகிரி என்றும் ஸப்தகிரி என்றும் பல பெயர்களில் அழைக்கப்படும் இம்மலை 7 மலைகளால் ஆனது. ஸப்த என்பதற்கு ஏழு என்பது பொருள். கிரி என்னும் சொல் மலைகைளைக் குறிக்கும். எனவே ஸப்தகிரி என்றும், ஸப்த பர்வதங்கள் என்றும் இந்த மலை குறிக்கப்படுகிறது. அந்த ஏழு மலைகள் எவையெனில்.

1. **வேங்கடாத்ரி** - (வேங்கட மலை) வேம் என்றால் வெந்துபோகும். கட என்றால் பாபங்கள் நாசமாதல். எனவே பாவங்கள் எல்லாம் நாசமாகும் இடம் என்பது பொருள். வேங் கடம் என்ற சொல்லுக்கே பாவங்களைக் சுட்டெரித்தல் என்ற

பொருள் உண்டு. வேங்கடாத்ரி ஆயிற்று. அத்ரி மலை பாபங்களை நாசமாக்கும் மலை.

2.**சேஷாத்ரி:** ஆதி சேடனே இங்கு எம்பெருமானின் அவதாரத்தின் பொருட்டு மலை உருவில் தோன்றியுள்ளான். எனவே சேஷாத்ரி ஆயிற்று.

3 **வேதாத்ரி** வேதங்கள் மலை உருவில் ஸ்ரீநிவாஸனை வழிபடுவதால் வேதாத்ரி எனவும் வேரிகிரி எனவும் வேதகிரி எனவும் வழங்கப்படுகிறது

4. **கருடாத்ரி:** (கருடமலை) திருமாலின் வாகனமாகிய கருடன் இம்மலையை (எம்பெருமானின் அவதாரத்தின் பொருட்டு) எடுத்து வந்து இவ்விடத்தில் வைத்ததால் கருடாத்ரி ஆனது.

5.**விருஷபாத்திரி:** (எருத்துமலை)விருஷபாசுரன் என்னும் அரக்கனுக்கு இம்மலையில் திருமால் மோட்சம் அளித்தார். அவன் வேண்டுகோளுக் கிணங்க அவன் பெயராலேயே விருஷபாத்ரி என மொழியப் படுவதாக ஐதீஹ்யம்.

6.**அஞ்சனாத்ரி:** (மைவரை) அனுமனின் தாய் அஞ்சனை அவள் இந்த மலையிலே தவம் செய்தாள். மகப்பேறு வேண்டினாள். ஆதி வராஹ மூர்த்தியின் அருளால் ஆஞ்சநேயனைப் பெற்றாள். அஞ்சனை தவமியற்றியதைக் கொண்டு அஞ்சனாத்ரி ஆயிற்று.

7.**நாராயணமலை:** (நாராயணத்திரி,ஆனந்தாத்ரி) ஆதிசேடனும், வாயுதேவனும் தங்களில் யார் பலவான் என்பதைக் காண்பிக்க தங்களுக்குள் போட்டி போட்டுக் கொண்டு மேரு மலையின் சிகரங்களை, ஆளுக்கொன்றாகத் தகர்த்துக் கொண்டு இப்பெருமாள் முன்னிலையில் வீழ்த்த பலத்தில் இருவரும் சமமானவர்களே என்று பெருமாளின் திருவாக்கும்,திருவருளும் பெற்று ஆனந்தமுற்றார்கள். ஆதலின் ஆனந்தாத்ரி ஆயிற்று.

தொண்டரடிப்பொடியாழ்வார், மதுரகவியாழ்வார் ஆகிய இருவர் தவிர மற்ற 9 ஆழ்வார்களும் இம்மலையைப் பற்றியும், வேங்கடவனைப் பற்றியும் பாசுரங்கள் பாடியுள்ளனர். ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப் பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளுள் இதுவும் ஒன்று "வடநாட்டுத் திருப்பதிகள்" என்ற பகுதியில் அடங்கும் பன்னிரண்டில் இது முதலவதாக இடம் பெறுவது. கோயில் (திருவரங்கம்), திருமலை, பெருமாள்கோயில் (காஞ்சி) என்று வைணவப் பெருமக்களால் போற்றப் பெறும் மூன்று திவ்விய தேசங்களுள் இது நடு நாயகமாகத் திகழ்கின்றது. இத்தகைய பெருமை வாய்ந்த திருவேங்கடத்தைப் பற்றி 213 பாசுரங்கள் நாலாயிரத்தில் காணப் பெறுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| 1. | பொய்கை ஆழ்வார் | - | 10 பாசுரங்கள் |
| 2. | பூதத்தாழ்வார் | - | 9 பாசுரங்கள் |
| 3. | பேயாழ்வார் | - | 19 பாசுரங்கள் |
| 4. | திருமழிசையாழ்வார் | - | 15 பாசுரங்கள் |
| 5. | திருப்பாணாழ்வார் | - | 2 பாசுரங்கள் |
| 6. | குலசேகராழ்வார் | - | 11 பாசுரங்கள் |
| 7. | பெரியாழ்வார் | - | 7 பாசுரங்கள் |
| 8. | ஆண்டாள் | - | 16 பாசுரங்கள் |
| 9. | திருமங்கையாழ்வார் | - | 62 பாசுரங்கள் |
| 10. | நம்மாழ்வார் | - | 62 பாசுரங்கள் |
| | | மொத்தம் = | 213 பாசுரங்கள் |

இப்பாசுரங்களை திருவேங்கடக்கலம்பக ஆசிரியர் முத்தமிழ்க்கவி வீரராகவமுதலியார் "பதின்மர் செந்தமிழ்" (திருவேங்கடக்கலம்பகம்-24) என்று போற்றிப் புகழ்வர் .

**திருவேங்கடத்தின் புகழ்:-**

ஆழ்வார்களால் மங்களாசாஸனம் பெற்ற திருவேங்கடம் பதினொன்றாம் நூற்றாண்டில் தான் பெரும் புகழ் அடையத் தொடங்கியது இராமாநுசர் திருவேங்கடமுடை யான் திருக்கோயிலின்பால் காட்டிய அக்கறையும், அவருடைய பெருமையும் சிறப்புமாகச் சேர்ந்து திருக்கோயிலின் புகழை மிகவும் உயர்த்தி விட்டது. இராமாநுசர் திருமலைக்கு மூன்று தடவை வந்ததாக அவர் வரலாற்றால் அறியக் கிடக்கின்றது. இத் திருமலையில் நடைபெறும் வழிபாட்டு முறைகள் யாவும் இராமாநுசர் வகுத்தவையே என்று "திருமலையொழுகு" என்ற நூலால் அறிகின்றோம். இராமாநுசர் திருவேங்கடமுடையானுக்குக் கைங்கர்யம் செய்யும் அர்ச்சகர்கட்குக் குடியிருப்பு வசதிகள், பிறவசதிகள் இவற்றை செய்தார். தன் தாய்மாமனாகிய திருமலை நம்பியையே இவற்றையெல்லாம் கண்காணிக்கும் மேலாளராகவும் நியமனம் செய்தார்.

இராமாநுசருடைய சமூகச் சீர்த்திருத்தமும், அவருடைய தத்துவ ஞானமும் பாமர மக்கள் மனத்தையும் கவர்ந்தன. அவருடைய வடமொழி அறிவு அவருக்குப் பலவகையில் கை கொடுத்து உதவியது. அவருடைய 'கீதைப்' பேருரையும், பிரம்ம சூத்திரப் பேருரையும் அவரை வட நாட்டினர்க்கும் அறிமுகம் செய்து வைத்தன.இதனால் இராமாநுசரின் புகழ் நாட்டின் நாலாபுறங்களிலும் பரவியது. இதனால் அவர் மிக நெருங்கிய உறவுடன் கைங்கர்யம் செய்து வந்த திருவேங்கடமுடையானின் பெருமையும் சிறப்பும் எங்கும் பரவி திருவேங்கடத்திற்கும் ஒரு முக்கியத் துவம் ஏற்படலாயிற்று. இவற்றைத் தவிர சைவ, வைணவ வாக்குவாதம் பற்றிய வரலாறும் திருமலையின் புகழ் எங்கும் பரவக் காரணமாக இருந்தது. இந்த வரலாற்றைச் சுமார் "700" ஆண்டுகட்கு முன்பிருந்த பின்பழகிய பெருமாள்சீயர் அருளிய "ஆறாயிரப் படிக்குருபரம்பரையிலும்" இராமாநுசருடைய திவ்விய சரிதையிலும் காணலாம்.

**திருவேங்கடத்தின் சிறப்பு :-**

வைணவத் தத்துவம் 'சித்து', 'அசித்து', 'ஈசுவரன்' என்று மூவகைப்பட்டிருக்கும். இதனைத் "தத்துவத் திரயம்" என்று வழங்குவர் வைணவப் பெருமக்கள். "சித்தும், அசித்தும்" ஈச்வரனுக்கு உடலாக அமைந்திருக்கும் இந்த உறவினைச் "சரீர-சரீரி பாவனை" என திருமந்திரத்தில் ("ஓம் நமோ நராயணாய: ") நாரசப்தத்தில் இவ்வர்த்தம் காணப் படுகிறது. 'அசித்'தும் எம்பெருமானுடைய படைப்பாகி அவனுடைய திருமேனியாகத் திகழ்வதால் அதுவும் வழிபாட்டிற்குரியது.

"சென்றுசேர்திருவேங்கடமாமலை
ஒன்றுமேதொழநம்வினைஓயுமே"
(திருவாய்மொழி -3-3-8)

என்ற நம்மாழ்வாரின் பாசுரம் இக்கருத்திற்கு அரண் செய்வதாக அமைகின்றது. 'அசித்'தின் பெயரைச் சொன்ன உடனேயே எம்பெருமான் மனமகிழ்ந்து நமக்குத் திருவருள் பாலிக்கும் பெருமை பேசப்பெறுகின்றது

"திருமா லிருஞ்சோலை மலைஎன்றேன் : என்னத்
திருமால் வந்து என்நெஞ்சு நிறையப் புகுந்தான்"
(திருவாய்மொழி10-8-1)

என்ற பாசுரங்களும் இதற்குச் சான்றாக நிற்கின்றன.

இயற்கை எழில் நிறைந்த திருவேங்கடத்தை ஆழ்வார் கள் தம் பாசுரங்களில் மிகவும் சிறப்பித்துப் பாடியுள்ளனர். கல் நெஞ்சத்தையும் கரையச் செய்யும் இன்பப் பாசுரங்கள் : கவி நயமும், இசையேற்றமும், பொருட் செறிவும் பொருந்திப் பொலிபவை.

திருவேங்கடமலை திருவரங்கத்தைக்காட்டிலும் முதலாழ்வாரின் உள்ளத்தைக் கவர்ந்தது. பொய்கை யாழ்வார்.

"வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே
வானோர் மனச்சுடரைத் தூண்டும் மலை"
(முதல் திருவந்தாதி - 26)

நந்துவிக்கும் - உருத் தெரியாமல் நசிப்பிக்கும். என்று கூறித் தம் உள்ளத்தை அதில் ஈடுபடுத்துவர் மனமாகிய சுடரை இதயம் என்னும் விளக்கைத் தூண்டி ஒளிரச் செய்யும் மலை என்று சொல்லும் பொழுதே, இவரது உள்ளத்தில் சுடர் விட்டெரியும் பக்தி விளக்கு நமக்கு ஓரளவு புலனாகின்றது. மண்ணவர்க்கு மட்டுமன்று விண்ணவர்க்கும் மனச் சுடரைத் தூண்டுகின்றது. இம்மலை என்கின்றார். ஆழ்வார். பக்தி என்ற ஒரு நெருப்பை மூட்டி மற்றொரு நெருப்பை அணைக்கின்றது திருவேங்கடம் என்று சமத்காரமாகக் கூறும் கவிதையில் பக்திச்சுடர் கவின் பெறுகின்றது.

பேயாழ்வாரோ பரமபதத்தோடும் பாற்கடலோடும் இம்மலையைச் சேர்த்து பேசுகின்றார்.

"பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங்குறைவார்க்குக் கோயில் போல் "
(மூன்றாம் திருவந்தாதி - 61)

என்பது அவரது திருவாக்கு.

பூதத்தார் காட்டும் காட்சி ஒன்றினையும் காண்போம். திருமலையில் மதப்பெருக்கால் செருக்கித் திரியும் ஆண் யானை ஒன்று. அது தன் காதலியாகிய பெண் யானையைக் காண்கின்றது. அதனைக் கடந்து அப்பால் செல்ல மாட்டாது அதற்கு இனிய உணவு ஈந்து அதன் மனம் நிறைவிக்க விரும்புகின்றது. அம்மலையிலுள்ள மூங்கிற்குருத்தொன் றினைப் பிடுங்குகின்றது. அதனை அருகிலுள்ள மலை முழைஞ்சிலிருந்த ஒரு தேனடையில் தோய்த்து அப்பிடியின் வாயில் ஊட்டுகின்றது. இதனை ஆழ்வார்

"பெருகுமதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று *
இருகணிளமூங்கில் வாங்கி * – அருகிருந்த
தேன் கலந்துநீட்டும் திருவேங்கடம் கண்டீர் *
வான்கலந்த வண்ணன்வரை"

- (இரண்டாம் திருவந்தாதி-75)

(வேழம்-யானை; பிடி-பெண்யானை; இருகண்-இரண்டுகணுக்கள்; வண்ணன்-நிறத்தன்; வரை-மலை)

இப்பாசுரத்தை எம்பெருமானார் திருவேங்கட யாத்திரை செல்லும் போது தன் சீடர்களிடம் மிகுந்த பரிவோடு த்வயம் அர்த்தத்தை திவ்யப்ரபந்தமாகிற தேனில் தோய்த்து, (இருகண் இள்மூங்கில் ஆகியத்வயத்தை) அருளிச் செய்ததை, நம்பிள்ளை இப்பாட்டுக்கு அர்த்தமாக அருளிச் செய்வர்.

எம்பெருமானார், பெருகு மதவேழம், மாப்பிடியான தன் சீடர்களுக்கு, இருகணிள மூங்கிலாகிய த்வயார்த்தத்தை அருகிருந்த தேனாகிற திவ்யப்ரபந்தத்தில் தோய்த்துஅருளிச் செய்தார் என்றாயிற்று இப்பாசுரத்திற்கு நம்பிள்ளை பொருள் கொள்ளுவது.

இன்னொரு யானையின் செயலைப் பொய்கையாழ்வார் புது முறையில் காட்டுவர். திருமலையின் கொல்லைகளில் இராக்காலத்தில் யானையொன்று பட்டி மேய்கின்றது. ஒரு கையில் கொளுத்திய தீவட்டியும், மற்றொரு கையில் அம்பு தொடுத்த வில்லையும் கொண்டு அந்த யானையை வெருட்டிச் செல்லுகின்றனர். குறமக்கள், இதனால் யானை வெருவியோடுகின்றது. ஆயின் எதிர்பாராத விதமாக அஃது ஓடும் வழியில் விண்ணினின்றும் எரிமீன் ஒன்று விழுகின்றது. யானை அதனை நட்சத்திரம் என்று உணராது குறவர்கள் தம் தீவட்டியையே கீழெறிந்தனர் என்று கருதித் திகைத்துக் கற்சிலைபோல் நின்று விடுகின்றது.

**"பெருவில்பகழிக் குறவர்கைச் செந்தீ *
வெருவிப்புனந்துறந்தவேழம் * — இருவிசும்பில்
மீன்வீழகண்டுஅஞ்சும் வேங்கடமே * மேலசுரர்
கோன் வீழக்கண்டுகந்தான் குன்று "**

(முதல் திருவந்தாதி-40)

(பகழி - அம்பு ; வெருவி - அஞ்சி ; புனம் - கொல்லை ; வேழம்- யானை; விசும்பு - ஆகாயம்; மீன் - நட்சத்திரம் ; அசுரர்கோன் - இரணியன்; உகந்தான் - மகிழ்ந்தான்)

என்பது பொய்கையாழ்வார் காட்டும் சொல்லோவியம்.

சேரலர்கோன் குலசேகரப் பெருமாளுக்குத் திருவேங்கட மலையின் மீது ஏற்பட்ட கழி பெருங்காதல் அற்புதமானது. ஓர் இனிய திருமொழியில் அந்த ஆழ்வாரின் எண்ணக் கோவைகளைக் கண்டு களிக்கலாம். திருவேங்கடத்தில் பிறத்தலும் அங்கு ஏதாவது ஒரு பொருளாக இருத்தலும் போதும் என்று கூறுகின்றார் இந்த ஆழ்வார். திருவேங்கட மலையில் வாழும் பேறு கிடைக்கப் பெற்றால் அறிவற்ற விலங்குப் பிறவியும் தமக்குப் போதும் என்கின்றார். கோனேரியில் வாழும் குருகு, திருவேங்கடச் சுனைமீன், வேங்கடக் கோன் உமிழும் பொன் வட்டில், செண்பக மரம், புதர், பொற்குவடு, மலையில் பாயும் கானாறு காட்டு நெறி, கருவறைப்படி என்று நிலை தமக்கு அமையின் போதும் என்று ஒன்றொன்றாகப் பிரித்துக் கூறுகின்றார். இறுதியாக எம்பெருமான் "திருமலையில் ஏதேனும் ஆவனே" என்று சொல்லி தம் ஆசைக்குத் தலைக்கட்டி விடுகின்றார்.

**செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே! *
நெடியானே ! வேங்கடவா ! நின்கோயிலின் வாசல் *
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும் *
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே.**

(பெருமாள் திருமொழி 4-9)

இவ்வாறு குலசேகர ஆழ்வார் திருமலையில் ஒரு படிக்கல்லாகக் கிடந்து வேங்கடவனைத் தரிசிக்க மாட்டேனா

என்று "படியாயககிடந்து உன் பவளவாய் காண்பேனே !" என்கிறார். இதனால் தான் (திருவேங்கட முடையானின்) முன் இருக்கும் பொற்படிக்கு "குலசேகரன்படி" என்றே பெரியோர் பெயரிட்டுள்ளனர்.

பாரதம் பாடிய பெருந்தேவனாருடைய ஓர் பாடலையும் காண்போம்.

தேனோங்கு நிழற் திருவேங்கடமென்றும்
வானோங்கு சோலை மலையென்றும்–தானோங்கு
தென்னரங்க மென்றுந் திருவத்தியூர் என்றுஞ்
சொன்னார்க்கு உண்டோ துயர்.

எனப் பாடுகிறார் பெருந்தேவனார் என்னும் சங்க காலத்துப் புலவர். இவர் பாரதத்தை வெண்பாச்செய்யுட் களாகப் பாடியுள்ளார். இவர் இதே வெண்பாவில் திருமலை திருமாலிருஞ்சோலை, திருவரங்கம், காஞ்சி போன்ற ஸ்தலங்களையும் பாடியுள்ளார் மேற்படி ஸ்தலங்களின் பெயர்களைச் சொன்னவர்க்குத் துயர் உண்டோ, துயரில்லை என்பது பொருள். திருவேங்கடம் என்பது நம்மாழ்வார் வாக்கு. திருவரங்கத்திற்கு போக மண்டபம் என்றும், காஞ்சீபுரத்திற்கு தியாக மண்டபம் என்பதும் பெயர்.

**புஷ்ப மண்டபம் :**

குறும்பறுத்த நம்பி என்பவர் திருமலையில் மண் பாண்டங்கள் செய்து வாழ்ந்தவர். மண்பாண்டம் செய்யும் போது கையில் ஒட்டிக் கொண்டுள்ள மண்ணினால் சிறு புஷ்பங்கள் செய்து மானசீகமாய் வேங்கடவனுக்குச் சமர்பித்து ஆராதனை செய்து வந்தார் இவரது காலத்தில் வாழ்ந்திருந்த தொண்டை மன்னனும் வேங்கடவன் பால் மிக்க பக்தி பூண்டொழுகினான். இம்மன்னன் தங்கத்தால் புஷ்பங்கள் செய்து வேங்கடவனுக்கு சமர்ப்பித்து வந்தான். ஒரு நாள் காலையில் இம் மன்னன் வேங்கடவனைத் தரிசிக்க சன்னதிக்குச் செல்லும்போது தான் சமர்ப்பித்த தங்கப் புஷ்பங்கள் யாவும் சிதறுண்டு பூமியில் கிடப்பதையும், மண்

புஷ்பங்கள் வேங்கடவனின் திருமேனியை அலங்கரிப்பதையும் கண்டு என்னவென்று விசாரிக்க குறும்பறுத்த நம்பிகள் சமர்ப்பிக்கும் புஷ்பங்கள் இவையென்று அறிந்து குறும்பறுத்த நம்பியின் பக்தி மேன்மையைக் கண்டு நம்பியைத் தொழுது சென்றான் தொண்டை மன்னன்.

அகோபில மடத்தின் முதலாவது ஜீயர் ஸ்வாமிகளான ஸ்ரீஆதிவண் சடகோபயதீந்தர மகாதேசிகன் என்னும் ஜீயர் திருமலைக்கு படிக்கட்டுகளை முதன் முதலில் அமைத்தவர்.

மகாஞானிகளும், கள்ளங்கபடமற்ற பக்தர்களும் வந்து குவிந்து கொண்டே இருக்கும் இந்தத் திருமலையில் தீர்த்த கைங்கர்யம் செய்து கொண்டிருந்த திருமலை நம்பிகள் இராமானுஜருக்கு ஸ்ரீராமாயண பாடம் கற்றுத் தந்தவர் ஆவார். மணவாள மாமுனிகளும் இங்கு பல முறை எழுந்தருளியுள்ளார்.

திருமலை வேங்கடவன் கோவில் திருச்சானூர் அலர் மேல் மங்கை கோவில் இரண்டினையும் தொண்டைமான் கட்டியதாக வரலாறு. இங்குள்ள சுற்று மண்டபங்கள், யாகசாலை, கோபுரங்கள், தானியக் களஞ்சியம், கொடியேற்று மண்டபம் போன்றன தொண்டைமான் கட்டியதாகும். இங்கு காணப்படும் கல்வெட்டுகளில் தொண்டைமானின் கட்டிடப் பணி குறிக்கப்பட்டுள்ளது. இன்றும் இத்தலத்தின் உட்புறச் சுவர்களில் மூலஸ்தானத்தைச்சுற்றிவரும் நடைபாதையிலும், மண்டபங்களைத் தாங்கி நிற்கும் தூண்களிலும், தமிழ்க் கல்வெட்டுக்கள் உள்ளன. பண்டைய எழுத்துக்களினாலான கல்வெட்டுக்களும், தமிழின் தற்போதைய எழுத்து முறை உருவாவதற்கு சமீப காலத்திற்கு முன் இருந்த தமிழ் எழுத்துக்களைக் கொண்ட கல்வெட்டுக்களும் உள்ளன.

தொண்டைமான் இப்பெருமானிடம் மிக்க ஈடுபாட்டுடன் திகழ்ந்து சிறந்த பக்தி கொண்டிருந்தான். இவனைப் பகைவர்கள் சூழநின்று பொருதபோது, போரில் தோல்வி

ஏற்படக் கூடிய சூழ்நிலையில் வேங்கடவனை வேண்ட, வேங்கடவன் தனது சங்கு சக்கரங்களைத் தொண்டைமானுக்கு அளிக்க, போர்வென்ற தொண்டைமான் அதை பெருமாளுக்கு மீளச் சமர்ப்பித்து, எனக்களித்த இவைகள் எனது கண்களுக்கு மட்டுமேதெரிய வேண்டும் என்று வேண்ட, அவ்வண்ணமே பெருமாள் அருள்புரிந்ததாகவும் கூறுவர். இதேபோல் தொண்டைமானின் வாழ்க்கையில் பல முறைகள் அதிசயிக்கத்தக்கத் நிகழ்வுகளை வேங்கடவன் நிகழ்த்திக் காட்டினார். நூல்கள் பலவற்றிலும் தொண்டைமான் எனவும் தொண்டை மன்னன் எனவும் கூறப்பட்டுள்ளதேயன்றி மன்னனின் பெயர் குறிப்பிடப்படவில்லை.

இராமானுசன் தனது இளம் வயதில் இம்மலையைச் சேவிக்க வந்தபோது மலையடிவாரத்திலேயே நின்று கொண்டு, மலையின் மேல் வேங்கடவன் இருப்பதால் தான், மிதித்து நடந்து வர விருப்பமில்லை என்று தெரிவித்ததாகவும், இவருக்காகவே இவரது தாய் மாமனான திருமலை நம்பிகள் மலை மேலிருந்து தினமும் இறங்கி வந்து இராமாயணம் கற்பித்ததாகவும் கூறுவர். பிற்காலத்தே வேங்கடவன் இராமனுசரைத் திருமலைக்கு வருமாறு தெரிவித்ததின் அடிப்படையிலே இராமானுசர் மலைமீது ஏறினார் என்றும் கூறுவர்.

இராமனுசர் ஆதிசேடனின் அவதாரமாகையால் எம்பெருமான் திருவாசல் முன்பு நடந்து செல்வதற்கே மனம் ஒவ்வாதவராக இருந்தார் என்னும் கூற்று பல இடங்களில் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. இளம் வயதில் இராமானுசர் இக் கொள்கை யின்றும் மாறுபடாதவராய் இருந்தார். இராமானுசர் திருக்கோட்டியூர் நம்பிகளிடம் திருமந்திரம் பயில வந்த காலை திருக்கோட்டியூரில் நம்பிகளின் திருமாளிகைக்கு வரும் பொழுது திருக்கோட்டியூர் தலத்தின் மதிளருகே வந்தவுடன் மண்டியிட்டு ஊர்ந்து சென்றே நம்பிகளின் வீட்டை அடைவார் என்றும் கூறுப்படுவது இங்கு ஓர்ந்து நோக்கத் தக்தாகும்.

இராமானுசர் திருவேங்கடத்தில் சங்கு சக்கரங்கள் தோன்றக் காரணமாயிருந்தார். திருக்கோட்டியூரில் திரு மந்திரம் உலகுக்குத் தோன்றக் காரணமாயிருந்தார். திருவரங்கத்தில் கைங்கர்யம் உலகப் பிரசித்தி பெறக் காரணமாயிருந்தார். மேலக் கோட்டை திருநாராயணபுரத்தில் செல்லப்பிள்ளை தோன்றக் காரணமாயிருந்தார். செல்லும் இடங்களிலெல்லாம் வைணவம் தழைத்தோங்கக் காரணமா யிருந்தார்.

இராமானுசர் திருமலைக்கு வந்த போது இப்பெருமா னின் கைகளில் சங்கு சக்கரங்கள் இல்லாததால் இத் தெய்வத்தைச் சிவன் என்றும், இந்து மதத்தின் வேறு பிரிவுகளின் தெய்வமென்றும், பலவாறு கூறி நிற்க இதை யறிந்த இராமானுசர் தொண்டைமானின் வேண்டுகோளுக் கிணங்க மற்றவர்கட்குத் தெரியாமல் இருந்த சங்கு சக்கரங்களை யாவருங் காண வேண்டுமென்று வேங்கட வனை வேண்ட அவ்விதமே ஆயிற்றென்பர்.

திருமலையில் இருந்து ஒரு சமயம் இராமானுசர் இறங்கி வரும் பொழுது எதிர்ப்பட்ட ஒரு மூதாட்டி இராமா னுசரைத் தடுத்து எனக்கு மோட்சம் கொடு என்று கேட்க அது என்னால் முடியாதே என்று இராமானுசர் கூற உம்மால் முடியாதென்றால் பரவாயில்லை. இந்த மூதாட்டிக்கு மோட்சம் கொடுக்க கடவது என்று ஒரு முறியில் எழுதியாவது கொடுமெனக் கேட்க இராமானுசர் ஓர் சிறிய ஓலையில் அவ்விதமே எழுதிக் கொடுக்க அதைப் பெற்ற மூதாட்டி, இராமானுசரை வழிபட்டு சென்று கொண்டிருக்கும் போது திடீரென்று திருமலையில் மழை கொட்டி வெள்ளப் பெருக்கெடுக்க கைகளில் இராமானுசர் எழுதிக் கொடுத்த ஓலையை இறுகப் பிடித்தவாறே சென்ற மூதாட்டி வெள்ளச் சூழலில் சிக்கி கைகளில் ஓலை பிடித்தவாறே திருநாடு புக்காள்.

**தீர்த்த மகிமை மிக்க திருவேங்கடம் :**

திருமலை ஒரு பக்தி க்ஷேத்ரம் ஒரு முக்தி க்ஷேத்ரம். இதையெல்லாம் விட இது ஒரு மிகப் பெரிய தீர்த்த க்ஷேத்ரம் இங்கு 108 தீர்த்தங்கள் உண்டு என புராணநூல்களில் விவரிக்கப்பட்டுள்ளன. அரூபமாக ப்ரத்யட்சமாகாமல் இருக்கக் கூடிய தீர்த்தங்களும் ஆண்டுக்கொருமுறை இங்கு வந்து கூடுகின்றன. சில முக்கியமான தீர்த்தங்கள் இங்கு வகைப்படுத்துகிறேன்.

**1. குமார தாரிகை அல்லது குமார தீர்த்தம் :-**

மாசி மாதம் மகம் நட்சத்திரம் வரும் தினத்தன்று (மாசிப் பௌர்ணமி) சகல தீர்த்தங்களும் வந்து இந்த தீர்த்தத்தில் தீர்த்தமாடுகின்றன. மனத்திற்கு உற்சாகமும், உடலுக்கு இளமையும் தரும் இத் தீர்த்தத்தில் மூழ்குவோர் ராஜ சூய யாகம் செய்த பலனைப் பெறுகின்றனர்.

**2. தும்புரு தீர்த்தம் :**

பகவானை நாம ஸங்ககீர்த்தனத்தால் பாடும் தும்புரு முனிவர், வேங்கடவனைக் குறித்து தவம் செய்த இடத்திற் கருகில் இருப்பதால் தும்புரு தீர்த்தம் பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்தன்று (பங்குனி பௌர்ணமி இதில் நீராடு வோருக்கு பரமபதம் உண்டு).

**3. இராம க்ருஷ்ண தீர்த்தம் :**

தை மாதம் வரும் பௌர்ணமியில் இதில் நீராடினால் இகபரசுகம் இரண்டும் சித்திக்கும்.

**4. ஆகாச கங்கை:**

தினந்தோறும் அதிகாலையில் இந்த தீர்த்தத்தாலேயே வேங்கடவனுக்கு அபிஷேகம் நடைபெறுகிறது. சகல பாபங் களையும் போக்கும் இத்தீர்த்தத்தின் அருகில் எண்ணற்ற ரிஷிகள் தவமிருந்தனர். அந்த காலத்திலேயே திருமலை நம்பிகள் தினமும் இந்த தீர்த்தத்தில் இருந்து ஒரு பெரிய

குடத்தில் வேங்கடவனுக்கு அபிஷேக தீர்த்தம் எடுத்துக் கொண்டு நடந்தே வருவாராம். கோவிலிலிருந்து சுமார் 2 மைல் தூரம். எம்பெருமான் இவரது தீர்த்த கைங்கர்யத்தை மெச்சி காட்சி கொடுத்தார். சகல சித்திகளையும் அளிக்கும் இத் தீர்த்தத்தில் சித்திரை மாதம் பௌர்ணமியன்று நீராடுவது மிக விசேடம்.

**5.பாண்டு தீர்த்தம்:**

வைகாசி மாதம் சுக்கில பட்ச துவாதசியுடன் கூடிய செவ்வாய் கிழமையில் பல தீர்த்தங்கள் இதில் கூடுவதால் அது போழ்து இதில் நீராடுவோர் சகல பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர்.

**6. பாபவிநாசன தீர்த்தம்:**

இத் தீர்த்தம் இயற்கை எழில் கொஞ்சும் சூழ்நிலையில் அமைந்ததுள்ளது. மிக்க சுவையுடன் விளங்கும் தீர்த்தங் களில் இதுவும் ஒன்று. ஐப்பசி மாதம் வளர்பிறை சப்தமி திதியும் உத்திராட நட்சத்திரமும் கூடிய ஞாயிற்று கிழமையில் இதில் சில தீர்த்தங்கள் கூடுகின்றன. அன்றைய தினத்தில் இதில் நீராடுவோர் பெறற்கரிய ஞானம் பெறுகின்றனர். பாவங்களின்றும் விடுபடுகின்றனர்.

**7. ஸ்வாமி புஷ்கரிணி :**

தீர்த்தங்களின் அரசி என்று அழைக்கப்படுவதும் சரஸ்வதி தேவி தவம் செய்ததும், ஸ்வாமி புஷ்கரிணிக்கு அருகாமையில் தான் ஆதிவராஹ மூர்த்தி எழுந்தருளி யுள்ளார். மிக விசேஷமான தீர்த்தமிது மார்கழி மாதம் வளர்பிறையில் துவாதசி நாளில் சூர்யோதயத்திற்கு 6 நாழிகை முன்பிருந்து சூர்யோதத்திற்கு பிறகு 6 நாழிகை வரை இம் மலையில் உள்ள தீர்த்தங்கள் யாவும் இதில் கூடுகின்றன. அப்போது இதில் நீராடுவோர் பூவுலகில் சிறப்புடன் வாழ்ந்து இறுதியில் இறைவன் திருவடியிலும் எப்போதும் வீற்றிருக்கும் பேறு பெறுவர்.

தீர்த்த மகிமை மிக்க திருவேங்கடத்தில் சுமார் 40 நாட்கள் தங்கி அனைத்து தீர்த்தங்களிலும் நீராடி அங்கப்பிரதட்சணம் செய்தும், சுப்ரபாதத்தின் போதும் வேங்கடவனைச் சேவிப்பவர்கள் தெளிவு பெற்ற மதியின ராகவும், பெரும் பொலிவு பெற்ற தோற்றத்தையும் பெற்றவராகின்றனர், என்பதில் ஐயமில்லை. தீர்த்தாடனம் செய்யும் முறை பற்றியும் ஈண்டு சற்றுச் சொல்ல விரும்புகிறோம். தீர்த்தாடனம் செய்வதற்கு நித்தியம், நைமி த்தியம், காமியம் என்ற மூன்று முறைகள் உள்ளன. நாள்தோறும் அதிகாலையில் நீராடுவது நித்தியம் சூரியனும், சந்திரனும் சேரும் அமாவாசையிலும், சூரியனும்,சந்திரனும் சரி விகித கோணத்தில் இருக்கும் பௌர்ணமி தினங்களிலும் கிரஹண காலங்களிலும், சூரியன் ராசிகளில் பிரவேசிக்கும் மாதப்பிறப்பு நாள்களிலும் புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவது நைமித்தியம். இன்ன தீர்த்தத்தில் மூழ்கினால் இன்ன பலன் கிடைக்குமென்று எண்ணி அந்தத் தீர்த்தத்தில் மூழ்குவது காமியம், தீர்த்த யாத்திரையை நைமித்தியமாகச் செய்வது சிறப்பு பலன் கருதாது புண்ய தீர்த்தத்தில் நீராடும் போது பகவான் நாமத்தை உச்சரிக்க வேண்டும். அவ்வாறு செய்யாதவர்கள் தீர்த்தத்திலேயே கிடப்பினும் தவளையைப் போன்றவர்கள் தான்.

இத்தகைய சிறப்பு பெற்ற இந்த வேங்கடவனை

"ஆடு தாமரையோனும் ஈசனும்
அமரர் கோனும் நின்றேத்தும் வேங்கடத்து
பொன்னை மாமணியை அணியார்ந்த தோர்
மின்னை வேங்கடத்துச் சியிற் கண்டு போய்"

என்று சொல்லப்பட்ட இந்த வேங்கடவன் சகல பிணிகளையும் தீர்க்கும் மருத்துவன் என்றும் ஆழ்வார்கள் பாடியுள்ளனர்.

வேங்கடவனின் பெருமையை ஆழ்வாராலே உணர்த்த முடியாதென்று தலைக்கட்டும் போது பாவியேன் எங்ஙனம் கூற இயலும்.

**உணர்வாரார்உன் பெருமை? ஊழிதோறூழி ***
**உணர்வாரார்உன்னுருவந்தன்னை * – உணர்வாரார்**
**விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! * நால்வேதப்**
**பண்ணகத்தாய்! நீகிடந்தபால்**

(முதல் திருவந்தாதி 68)

**ஏழுமலையானின் சிறப்பு :**

திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும் திருமலையின் இயற்கை எழிலிலும் மலையின் உயர்ச்சியிலும் ஈடுபட்டாலும் அங்கு திருக்கோயில் கொண்டுள்ள இறைவன் பால் தம் மனத்தைப் பறி கொடுக்கின்றனர். பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார் எம்பெருமானின் பெருமையைப் பலவாறு பேசி இனியவராகின்றார். எம்பெருமான் பல்வேறு அவதாரங்கள் எடுத்து மக்களுக்காகச் செய்த, பல்வேறு நற்செயல்களை எடுத்துக்காட்டி அக மகிழ்கின்றார். திருவேங்கடமுடையான் குருந்தம் ஒசித்த கோபாலனாக வந்தவர். கொக்கின் வடிவமாக வந்த பகாசுரனை வாய் பிளந்து வானுலகத்திற்கு அனுப்பிய வித்தகர் - (பெரிய திரு 1-8-1) கல் நெஞ்சத்தை உடைய பூதனையிடம் பாலமுதம் பருகியதுடன் அவள் உயிரையே குடித்து அற்புதச் செயலைப் புரிந்தவர் : கிருதயுகத்தில் கருமை நிறத்தையும், துவாபரயு கத்தில் நீலமணி நிறத்தையும் கொண்டிருப்பவர் - (பெரிய திரு -1-8-2) என்றும்,

இன்னும் எம்பெருமான் இராவணனின் திண் ஆகம் பிளக்க அம்பு கோத்தது, இலங்கை அரக்கர்களை மடியச் செய்தது, நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு ஆலிளந் தளிர் மேல் துயில் கொண்டது. உரி மேல் நறு நெய்யை அமுது செய்தது. குறளுருவாய் நின்று ஈரடிகளால் நிலமனைத்தையும்

கவர்ந்தது, அரியாய்த் தோன்றி அவுணன் உடல் பிளந்தது முதலிய செயல்களில் ஆழங்கால்பட்ட வண்ணம் (பெரிய திரு -1-10-1 to 5) என பல வேண்டுகோள்களை விடுவிக்கின்றார். "அடியேனுக்கு அருளாயே" என்றும், "அடியேனுக்கு அருள்புரியாயே" என்றும் "குறிக்கொள் எனை நீயே" என்றும் பிரார்த்திக்கின்றார். அடுத்து திருவேங்கட முடையான் அவருடைய திருவுள்ளத்தில் வந்து புகுந்த பெருஞ்செயலை பேசி அநுபவிக்கின்றார். (பெரிய திரு 1-10-67) திருவேங்கடம் மேய என் ஆனை என் நெஞ்சில் உள்ளானே என்றும், "திருவேங்கட மாமலை மேய கோனே! என் மனம் குடிகொண்டு இருந்தாயே" என்றும் பேசி இனியராகின்ற மையும் காணலாம்.

எம்பெருமான் திறத்தை எடுத்துரைத்த ஆழ்வார் தம் குற்றங்களை யெல்லாம் விரித்துக் கூறித் தம்மை ஆட் கொள்ளுமாறு வேண்டிச் சரண் புகுகின்றார். "எம்பெருமானே உறவினரல்லாதாரை உறவினர்கள் என்று நம்பிக் கெட்டொ ழிந்தேன் அநுபவிக்கத் தகாதவற்றை அநுபவித்த எண்ணற்ற பாவங்களை செய்தேன் பல உயிர்களை கொன்று பல வகைப் பாவங்களைப் பண்ணினேன் ஒருவிதமான நற்செயல்களை யும் புரிந்தேன் இலேன் பஞ்ச பூதங்களாலான யாக்கையில் புகுந்து புலம்பித் தளர்ந்தொழிந்தேன் அறியாப் பருவத்தே பல அவச் செயல்களை செய்து விட்டேன். இளமை பருவத்தில் பெண்டிற்காகவே அலைந்து சதிர் கேடனானேன் இங்ஙனம் பாவமே செய்து பாவியான அடியேன் உன்னை விட்டுத் தரிசிக்க மாட்டாத அன்பு பிறந்து உன்னையே அடைக்கல மாகப் பற்றிக் கொண்டேன். முன்னைத் தீவினைகளை எண்ணி என்னைக் கைவிடாது ஆட்கொள்ள வேண்டும் என்று கூறி அவனைச் சரணமடைகின்றார் ஆழ்வார்.

ஆழ்வார்களுள் தலைவராகக் கருதப்பெறும் நம்மாழ் வாரின் அருளிச் செயல்களில் திருவேங்கடத்தைப் பற்றி வரும் செய்திகள் மிக அற்புதமானவை. விசிஷ்டா த்வைத

தத்துவத்தின் உயிர்நாடியாகவுள்ள சரணாகதியின் அருமையை உலகுக்கு உணர்த்தும் பெருமையை இங்குக்காணலாம். திருமலையில் எழுந்தளியிருக்கும் எம்பெருமான் இந்த ஆழ்வாருக்குத் "தாள் பரப்பி மண்தாவிய ஈசனாகவும்" - (திருவாய் 3-3-11) "என் கண் பாசம் வைத்த பரஞ்சுடராகவும்" - (திருவாய் -3-3-4) வேதியர் முழுவேதத்து அமுதமாகவும் (திருவாய்3-3-5) காட்சி அளித்து அவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றான். இத்தகைய எம்பெருமானின் திருவடியில்

**"அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல்மங்கையுறை மார்பா!**
**நிகரில் புகழாய்! உலகம் மூன்று உடையாய்! என்னை யாள்வானே!**
**நிகரிலமரர் முனிக் கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே!**
**புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"**

(திருவாய்மொழி 6-10-10)

"**நிகரில் புகழாய்**" என்பதால் வாத்ஸல்யத்தையும்
"**உலகம்மூன்றுடையாய்**" என்பதால் ஸ்வாமித்துவத்தையும்
"**என்னை ஆள்வானே**" என்பதால் சௌசீல்யத்தையும்
"**திருவேங்கடத்தானே**" என்பதால் சௌலப்பியத்தையும்

தெரிவிக்கின்றார். ஆழ்வார் புகல் ஒன்று இல்லா அடியேன் என்பதால் பிரபத்திக்கு அதிகாரமான "ஆகிஞ் சந்யம்" - (கை முதல் இல்லாமை நம் காரியத்திற்கு நாம் கடவோம் அல்லோம் என்றிருக்கை) "அநந்யகதித்வம்" - (வேறு புகல் இல்லாமை - இறைவன் ஒருவனே காப்பாற்று பவன் என்றிருக்கை) "அலர்மேல் மங்கை" - என்பதால் (புருஷகாரம்-சேர்ப்பிக்கும் தன்மையை கூறுகிறது. இந்த பாசுரம் வைணவர்கட்கு சரமச்லோகம் போல் இனிப்பது. அதுபோல் ஆன்மாவை ஈடேற்றும் புணை போல் இருப்பது. இது தான் எம்பெருமானைக் கால் கை பிடித்து ( காக்கை பிடித்து?) உய்யும் வழியாக இருப்பது வைணவ தத்துவ மொழியில் கூறினால் சரணாகதியாக இருப்பது. இப்பாசுரத்

திற்கும், இப்பாசுரம் அடங்கிய பதிகத்திற்கும் ஈட்டாசிரியர் ஆற்றும் சொற்பொருள்கள் சிந்தைக்கும், செவிக்கும் இனிப்பவையாகும். இத்திருவாய்மொழியின் ஒன்பதாம் பாசுரத்தின் இறுதியடி அந்தோ அடியேன் உன பாதம் "அகலகில்லேன் இறையுமே" என்பது. ஆழ்வார் பாசுரங்கட்கு உரை சொல்லும்போதே, வைணவ தத்துவம் அனைத்தையும் குழைத்துத் தந்து விடுவார்கள்.

அன்னை பிள்ளைக்கு முலைப்பாலுடன் மருந்தைக் குழைத்துத் தருவதைப் போல, உடலுக்கு மருந்து ஊட்டு கின்றாள். ஆசாரியர்கள் உயிருக்கு மருந்து ஊட்டுகின்றனர். இப்பாசுரம் சரணாகதியைக் குறிப்பதால் இத்திருவாய் மொழி முழுவதும் சரணாகதி சாரமாயிருக்கும் என்று வைணவ ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுவார்கள். அதற்கேற்ப இந்த ஆறாம் பத்து முழுவதிலும் "உலகளந்த திருவடி" அடிக்கடி கூறப் பெறுவதையும் காணலாம். "நெடியோன்" என்ற பெயர் திரிவிக்கிரமனைக் குறிப்பது. மூன்று ஆச்சரியமான செயல் களைச் செய்தவன் திரிவிக்கிரமன். இத்திருப்பாசுரத்தைத் துவய மந்திரத்தின் பதங்களோடு ஒப்பிட்டுப் பொருள் கூறுவர் நம்பிள்ளை.

ஏழுமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடம் பொலியும் திருக்குணத்தை ஆசாரிய ஹிருதயம்

**"மண்ணோர் விண்ணோர் வைப்பில், போகின்ற ஏழுலகுக்கு உயிர் பாசம் வைத்த நிகரில் வாத்ஸல்யம் உஜ்வலம்"** (ஆ.ஹிரு-160)

(வைப்பு - திருமலை ; வாத்ஸல்யம் - கன்றிடத்தில் பசு இருக்கும் இருப்பு ; உஜ்வலம் - மிக்குப் பொலிதல்)

அன்று ஈன்ற கன்றின் உடம்பிலுள்ள அழுக்கினை ஆதரித்து உண்ணும் பசுவைப் போன்று அடியார்களுடைய குறைகளை இனியனவாகக் கொள்ளும் குணம் (வாத்ஸல்யம்) என்று அழகியமணவாளப்பெருமாள் நாயனார் திருவுள்ளம் பற்றுகிறார்.

கலியுகம் முடியும் வரை பெருமாள் தனது சாந்நித்தியத்தை இங்கே இருந்து வழங்கி பக்தர்கட்கு அருள் பாவித்து பாவங்களைப் போக்கி நிற்கிறார் என்பது ஐதீஹ்யம். பொய்யான பக்தியுடனும் ஆடம்பரமான பக்தி வேஷத்தையும் சரணாகதித்வம் இல்லாத நேரத்திற்கேற்றவாறு போடக்கூடிய பக்தி வேஷத்தையும் உதாசீனப்படுத்தி தூய பக்தியில் நிறைந்த உள்ளம் கொண்ட பக்தர்களின் மேன்மையை உலகறியச் செய்து கொண்டே இருக்கிறான் வேங்கடவன்.

ஆழ்வார் பெருமக்களாலும், இராமாநுசராலும் அவர்பின் வந்த ஆசாரியப் பெருமக்களாலும் திருவேங்கடம்-நெடியோன் குன்றம் பெரும் புகழ் பெற்றதைக் காணலாம். இதனால் இங்கு கற்றவர்கள், கல்லாதவர்கள், பக்தர்கள், சுற்றுலாச் செல்வோர், முதலிய எண்ணற்ற மக்கள் நாடோறும் திருமலைக்கு வருவதும் போவதுமாக உள்ளனர்.

திருவேங்கடமுடையான் பெருமையைப் பறைசாற்றும் எண்ணற்ற கதைகள், செவிவழிச் செய்திகள் வழங்கி வருகின்றன. இவை தலபுராணத் திலும் இடம் பெற்றுள்ளன. சில தனிப்பாடல்களும் திருவேங்கடமலையைப் பற்றிப் புனையப் பெறுகின்றன. இவை மேலும், மேலும் மக்களிடையே பக்திச் சுடர் கிளர்ந்தெழுவதற்குக் காரணமாக அமைகின்றன. சில பாடல்கள் அழியா வாழ்வும் பெற்று விடுகின்றன.

"கூன் கொண்டு சென்றவன் கூன் நிமிர்ந்து ஒட்
குருடன் கொம்பில்
தேன் என்று காட்ட, முடவன்
அத் தேனை எடுக்க அயல்
தான் நின்ற ஊமை எனக்கென்று
கேட்க தருவன் வரம்
வான் நின்ற சோலை வடமலை
மேல் நின்ற மாதவனே!"

பழம் பாடல்

என்பது அங்ஙனம் அழியா வாழ்வு பெற்ற ஓர் அழகிய பாடல். மக்கள் மனத்தில் மலை மேலிருக்கும்மாதவன் நிலையான இடம் பெற்றிருப்பது போலவே, பக்திச்சுவை கிளர்ந்தெழச் செய்யும் இப்பாடலும் நிலையான இடம் பெற்றுவிட்டது. இன்று மக்கள் மனமாகிய தேசப்படத்தில் மலையின் பெயரும், மலையன் பெயரும், நெடியோன் குன்றமும், குன்றத்துக் கோயில் கொண்டுள்ள முகில் வண்ணனும், அழியா வாழ்வு பெற்றுத் திகழ்கின்றன.

இத்தனைச் சிறப்புகளுக்கும் காரணம் என்ன? திரு வேங்கடமுடையான் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையே யாகும். இந்த நம்பிக்கையைத் திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்,

> "தானே சரணமுமாய்த், தானே பலமுமாய்த்
> தானே குறைமுடிக்கும் தன்மையோன் – தேனேய்
> திருவேங்க கடந் தொழுதேம் தீய விபூதிக்குள்
> மருவேம் கடந்தனெம் வாழ்வு "
>
> - (நூற்றெட்டு திருப்பதியந்தாதி)

(சரணம் - உபாயம் ; பலம் - பயன் ; தேன்ஏய் - தேன்நிறைந்த; தீய விபூதி - லீலா விபூதி; மருவேம்- பொருந்தமாட்டோம் ; கடந்தனெம் - கடந்து விட்டோம்)

என அழகாகக் கூறுவர். திருவேங்கடமுடையானை அடைவதற்கு அவனே உபாயமாக இருக்கின்றான். அவனை அடைந்தவர்களுக்குப் பயனே அளிப்பவனாகவும் திகழ் கின்றான். அவனை அடைய வொட்டாமல் குறுக்கே வருகின்ற விரோதிகளையும் போக்குகிறவனாகவும், அமைந்து விடுகின்றான். இவன் வேண்டுவோர்க்கு வேண்டுவன நல்கும் கலியுகவரதனாக இருப்பதால் தான், நாலா பக்கங்களி லிருந்தும் மக்கள் திரண்டு வந்து அவன் அருளாலே அவனுடைய திருவடிகளை வணங்குகின்றனர். அவனும் குன்றின் மேலிட்ட விளக்காக இருந்து கொண்டு மக்களை

ஈர்க்கின்றான். எண்ணற்ற அடியார்கள் நாள்தோறும் குவிந்த வண்ணம் உள்ளனர்.

வேங்கடமெனில் பாவங்களைச் சுட்டெரிக்கக் கூடியது என்ற "வேம்கடங்கள் மெய்ம்மேல் வினைமுற்றவும்" என்னும் பாசுரமும் இதே பொருளையுடையதே பொருள் கொண்ட இத்தலத்தைப்பற்றி பிரம்மாண்ட புராணம்,வராக புராணம், ஸ்காந்த புராணம், பாத்ம புராணம் என்ற புராணங்கள் வாயிலாக அறியப்படுகிறது. எண்ணற்ற நூல்களில் இத்தலம் பற்றிய பல குறிப்புக் கிடைக்கின்றது.. எண்ணற்ற மொழிகளில் இத் தலவரலாறு எழுதப்பட்டுள்ளது. எழுத்து வடிவம் பெறாமல் ஒலி வடிவிலேயே இன்றும் இருந்து கொண்டிருக் கும் சில மொழிகளில் எண்ணற்ற வருடங்கட்கு முன்னால் இப்பெரு மானைக் குறித்துச் செய்யப்பட்ட ஸ்தோத்திரங்கள் இன்னும் ஒலி வடிவமாகவே, தொடர்ந்து பரம்பரை பரம்பரையாகச் சொல்லப்பட்டு ஸேவிக்கப்பட்டு வருகிறது.

இத்தலம் பற்றி எழுதப்புகின், அல்லது அறியப்புகின் கிடைக்கின்ற ஆதாரங்களும், விவரங்களும் ஏராளம், ஏராளம்.



## 3.வலம் செய்யும் வானோர் மாலிருஞ்சோலை

சிந்துரச்செம் பொடிப்போல் திருமாலிருஞ் சோலை யெங்கும்*
இந்திரகோபங்களே எழுந்தும்பரந்திட்டனவால்*
மந்தரம் நாட்டிஅன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட *
சுந்தரத் தோளுடையான் சுழலையில் நின்றுஉய்துங்கொலோ?

(நாச்சியார் திருமொழி 9-1)

என்று ஸ்ரீஆண்டாளால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட இத்தலம் மதுரைக்கு வடக்கே 12 மைல் தொலைவில் எழிலார்ந்த மலையடிவாரத்தில் அமைந்துள்ளது.

**வரலாறு :**

இத்தலத்தைப் பற்றி வராகபுராணம், பிரம்மாண்ட புராணம், ஆக்னேய புராணம் போன்றன விவரித்துக் கூறுகின்றது. வராகபுராணத்தில் ரிஷபாத்திரி மகாத்மியம் என்னும் தலைப்பில் இத்தலம் பற்றி பரக்கப் பேசப் பட்டுள்ளது. ரிஷபம் என்றால் காளை. இந்த மலையினைச் சுற்றியுள்ள மலைகள் யாவும் பசுவினைப் போலவும் இந்த மலை மட்டுமே காளை போன்றும் தோன்றுவதால் இதற்கு ரிஷபாத்திரி என்று பெயர் ஏற்பட்டதென்பர்.

மலய பர்வதம் எனப்படும் பொதிய மலைக்கு வடக்கே 10 யோஜனை தூரத்திலும், காவிரி நதிக்குத் தெற்கே 6 யோஜனைத் தூரத்திலும் வராக பர்வதம் எனப்படும் பழனிக்கு கிழக்கே 6 யோஜனை தூரத்திலும் அமைந்துள்ளதாக எல்லைகள் குறிப்பிட்ட இப் பகுதியை கூடலூர் நாடு என்றும், மாலிருங்குன்றமென்றும், திருமால் சோலையென்றும், வனகிரியென்றும், தமிழ்மொழி பலபெயர்களைச் சூட்டு கின்றது. அதே போல் இங்குள்ள உற்சவப் பெருமாளுக்கும் அழகர் என்னும் வெகு அழகான சொல் வாய்த்து விட்டது.

இம் மலையைத் திருமாலின்இருப்பிடமென்றும் இம்மலை நோக்கித் தொழுவதை திருமாலைத் தொழுவ

தற்குச் சமம் எனக் கருதி மக்கள் இம்மலை நோக்கித் தொழுதனர் என்று பரிபாடல் என்னும் தமிழிலக்கியம் கூறுகிறது.

சிலப்பதிகாரத்தில் திருமாலைத் தரிசித்து விட்டு திருவரங்கம் செல்லும் மாடலன் என்பான் இந்த மலையில் அமைந்துள்ள மூன்று தீர்த்தங்களைப் பற்றி வழியில் சந்தித்த கோவலன், கண்ணகி, கவுந்தி அடிகள் ஆகியவரிடம் கூறுகிறான். இங்கிருந்து நீங்கள் இடப்பக்கமாக உள்ள காட்டுவழியிற் சென்றால் திருமால் குன்றத்தை அடைவீர்கள். அங்கே ஒரு சுரங்க வழி இருக்கிறது. அவ்வழியிற் சென்றால் மூன்று தீர்த்தங்களைக் காணலாம். அவை புண்ணிய சிரவணம், பவகாரிணி, இட்ட சித்தி என்பன. புண்ய சிரவணத்தில் நீராடினால் இந்திரனால் எழுதப்பட்ட ஐந்திர வியாகரணம் என்னும் நூல் அறிவை நீங்கள் பெறுவீர்கள். பவ காரிணியில் நீராடினால் நினைத்ததெல்லாம் கை கூடும்.

துவாதசி தினத்தில் இந்த நூபுர கங்கையில் நீராடுபவர்கள் சகல விதமான பாபங்களிலிருந்தும், விடுபட்டு விடுகிறார்கள் அதிலும் குறிப்பாக ஐப்பசி மாதத்தின் வளர்பிறையில் வரக்கூடிய துவாதசியன்று நீராடக் கூடியவர்கள் விஷ்ணு ஸாயுஜ்யம் எனச் சொல்லப்படும் மோட்சத்தை அடைந்து விஷ்ணுவுக்குச் சமீபத்தில் இருக்கும் நிலையினைப் பெறுகின்றார்கள். இம்மலையில் வேறு பல தெய்வங்களும் இருப்பதாகக் காலப்போக்கில் கூறப்படும் பழக்கம் உண்டாயினும் பௌத்தமும், ஜைனமும், அழகரே முக்கியமான தெய்வமென்று ஒப்புக் கொண்டதாக திருமங்கையாழ்வார் தமது பாசுரங்களில் பாடியுள்ளார்.

இங்குள்ள 18 ஆம்படி கருப்பண ஸ்வாமி மிகவும் பிரசித்தி. மலையாளத்தரசன் ஒருவன் இவ்வழகரை அங்கு கொண்டு செல்ல வேண்டுமென்று திருடிச் செல்லச் முயன்றான் அது முடியாமல் போகவே 18 பேர்களை (மந்திர தந்திரங்களில் தேர்ச்சிபெற்ற பணிக்கர்கள்) இங்கு அனுப்பி

எப்படியாவது அழகரை கொண்டு செல்ல வேண்டுமென்று திட்டமிட்டான். இவர்கள் வந்து அழகரை திருடிச் செல்ல எத்தனிக்கையில் இதையறிந்த இங்கிருந்த ஒரு சாஸ்திரி தமக்கு வேண்டியவர்களை அழைத்துக் கொண்டு வந்து பதினெட்டு பேரையும் பிடித்துப் படிக்கொருவராக புதைத்து வைத்தனர்.

இந்த பதினெட்டுப் பேரின் மந்திர சக்திக்கு கட்டுப்பட்டு அவர்களுக்கு துணையாக வந்த காவல் தெய்வம் ஒன்று, இப்பெருமானின் பேரழகில் மயங்கி இவரைக் கொண்டு போக முடியாவிட்டாலும் பரவாயில்லை. இவருக்கு காவலாவது இருப்போம் என்றெண்ணி, அங்கிருந்த அர்ச்சகரையும், பிறரையும் நோக்கி, தான் இந்தப் பெருமாளின் வாசலையும், இந்த பதினெட்டுப் படிகளையும் காப்பதாக உறுதி கூறி, அதற்கு அர்த்த ஜாம பூஜாப் பிரசாதத்தைத் தமக்கு அளிக்க வேண்டு மென்று கேட்க அவர்களும் அதற்கு ஒப்புக் கொண்டனர். அந்தக் காவல் தெய்வமே பதினெட்டாம் படி கருப்பண சுவாமியாவான். இவ்விதம் கருப்பணசுவாமி கள்ளழகருக்கு காவற்கடன் பூண்டான்.

இன்றும் பொய், சூது குற்றம் களவு போனறன பற்றி நடக்கும் பஞ்சாயத்துக்கள் இவன் முன்னிலையில் பேசப்படுகிறது. பாரபட்சமின்றி தண்டிப்பவன் கருப்பண்ண சுவாமி என்பது மக்கள் நம்பிக்கை.

சுதபா என்னும் முனிவர் திருமாலிஞ்சோலையில் தவம் செய்து கொண்டு இருந்தார். ஒரு நாள் அவர் நீராடிக் கொண்டிருக்கும் போது, துர்வாசரும் அவரது சீடர்களும், அங்கு வர இவர்களைக் கவனியாது சுதபா முனிவர் வெகுநேரம் நீரில் மூழ்கியிருந்ததால் துர்வாசருக்கு சினம் வந்து விட்டது. என்னை மதியாது தண்ணீருக்குள்ளேயே கிடந்ததால் நீ தண்ணீரில் வாழும் தவளையாகக் கடவது

நிலையுணர்ந்த சுதபன் முனிவர் துர்வாசரிடம் மன்னிப்பு வேண்டினார். மனங்கனிந்த துர்வாசர் "நீ நாராயணன் நித்ய வாசம் செய்யும் வராக பர்வதம் சென்று அங்குள்ள தர்மாத்ரி என்றழைக்கப்படும் பர்வதத்தில் சென்று தவம் புரிக, எம்பெருமான் காட்சி கொடுத்ததும் உனக்கிட்ட சாபம் அகலும்" என்றார் அதற்கு சுதப முனிவர் திருமாலிருஞ் சோலை நின்ற சுந்தரராஜனையே நான் நித்ய தரிசனம் செய்பவன். அந்தப்பெருமானையே சென்று வழிபட வேண்டு மென நினைக்க அவ்விதமே ஆகும் என்றார் துர்வாசர். இவ்வாறு திருமாலிருஞ்சோலை சுந்தரராஜப் பெருமாள் வராஹ பர்வதத்தில் உள்ள தர்மாத்ரி என்னும் அழகிய பர்வதத்திற்கு எழுந்தருளினார். இந்த அழகர் தான் இன்றைய காட்டழகர் திருக்கோவிலாகும் (இது குறித்து ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்தல வரலாற்றில் விரிவாகக் காணலாம்).

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பாக இடைக் காடர் என்பவரால் இந்த அழகர் மலையில் மருத்துவ மன்றம் ஏற்படுத்தப்பட்டு சித்த வைத்திய சாஸ்திரங்கள் வளர்க்கப் பட்டுள்ளன. இங்குள்ள மரங்களின் உயர்ந்த மருத்துவ குணங்களைப் பற்றி வைத்திய நூல்கள் அரிய குறிப்புகளைத் தருகின்றன.

## ஆழ்வார்கள் அழகரை அனுபவித்த விதம்:

### பெரியாழ்வார் :

எம்பெருமானுடைய அவதார வைபவங்களை இரு வகையாக்கி ஒருவாறு அநுபவித்தார் ஆழ்வார். அவதாரங்கள் பிற்காலத்தவருக்கு அநுபவிக்க அரிதாகையாலே, அவர்களுக்கும் எளியனாய் அநுபவிக்கத்தக்கவனாக எம்பெருமானே உகந்தருளின நிலங்களிலே அர்ச்சாவதார மாக எழுந்தருளியிருப்பதை உணர்ந்து அநுபவிக்க ஆசைப்படுகிறார் ஆழ்வார். அவற்றிலும் தென்னன் உயர்

பொருப்பான திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானை அநுபவிக்க நினைத்தார். அது தன்னிலும் எம்பெருமானோடே சம்பந்தப்பட்டிருக்கும் திருமாலிருஞ்சோலை மலையே தமக்கு அடையத்தக்கது என்று அறுதியிட்டு அத்திருமலையை வருணித்து அநுபவிக்கிறார்.

**அலம்பாவெருட்டாக்கொன்று திரியும்அரக்கரை ***
**குலம்பாழ் படுத்துக் குல விளக்காய் நின்ற கோன்மலை***
**சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடும் சீர்***
**சிலம்பாறுபாயும் தென் திருமாலிருஞ்சோலையே!**

(பெரியாழ்வார் திருமொழி 4-2-1)

உயிரினங்களைப் பலவாறு அலைக்கழித்தும் அச்சமூட்டியும் இறுதியில் கொலை செய்தும் திரிந்த அரக்கர்களைக் குலத்தோடு பாழ்பட அழித்து, இஷ்வாகு குலத்துக்கு விளக்குப் போல ப்ரகாசமாக நின்ற எம்பெருமான் நிற்கும் மலை எது என்னில் பாதச் சிலம்புகள் ஒலிக்க வானத்திலிருந்து வந்த தேவ மாதர்கள் நீராடுகின்ற சிறப்பைப் பெற்ற சிலம்பாறு (நூபுரகங்கை) பாய்கின்ற அழகிய திருமாலிருஞ்சோலையாகும். வலிய ஆண்மையுடையவனும், சிவபிரானால் அளிக்கப்பட்ட வாளையுடையவனுமான இராவணனுடைய தோள்களையும் மூக்கினையும் அறுப் புண்டு போகும் படி செய்தவனாகிய பெருமாள் மனம் பொருந்தி எக்காலமும் நிற்கும் மலை எது எனில் : பிற பயன் கருதுவோர், எம்பெருமானையே பயனாகக் கருதுவோர், பிற நெறிகளைத் தழுவுவோர் என்று பார்க்கப்படும் எல்லோரு டைய இடங்களிலும், அழகர் திருமலையின் பரப்பு எங்கும் வ்யாபித்துப் பல்லாண்டு ஒலியானது நிறைந்து நிற்கும் சிறப்பையுடைய அழகிய திருமாலிருஞ்சோலை ஆகும்.- (பெரியாழ்வார் திருமொழி 4-2-2)

**மன்னர்மறுக மைத்துனன்மார்க்கு ஒருதேரின்மேல் ***
**முன்னங்கு நின்று மோழையெழுவித்தவன்மலை ***
**கொன்னவில்கூர்வேற்கோன் நெடுமாறன் தென்கூடற்கோன் ***
**தென்னன்கொண்டாடும் தென்திருமாலிருஞ்சோலையே.**

- (பெரியாழ்வார் திருமொழி 4-2-7)

அர்ஜுனனுடைய தேர்க்குதிரைகள் தண்ணீர்க்கு விடாய்த்து இளைத்தவளவில் அவன் பக்கல் பக்ஷபாதியான கண்ணபிரான், கடுமையான ஸ்தலத்திலும் நீர் நரம்பு அறிய வல்லவனாதலால், அங்கு வருணாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கீழே உண்டான நீர் குமிழியுடன் மேலே கிளரும் படி செய்து, நீரை வெளிக் கிளப்பிக் குதிரைகளை விட்டு நீருட்டிப் புரட்டியெழுப்பிக் கொண்டு போந்து பூட்டிக் கொண்டு வந்து முன்னே நிறுத்த, இதைக் கண்ட மாற்று அரசர்கள் எல்லாம் "அர்ஜுநன் பக்கல் இக்கண்ணனுக்குப் பக்ஷபாதமிருந்தபடியென் இனி நாம் அவனை வெல்லுகையென்று ஒன்றுண்டோ? " என்று குடல் மறுகினமை முன்னடிகளிற் கூறப்பட்டது.

மறுக - மனம் குழம்புகைக்காக முன் அங்கு நின்று - ஸாரத்யம் பண்ணுகைக்கு உரிய இடத்தில் நின்று என்றபடி மோழை - கீழாறு; எழுவித்தலாவது - மேலெழும்படி செய்தல்.

அகஸ்திய முனிவன் வீற்றிருக்கும் மலய பர்வதத்திற் சென்று "தர்மமே நடத்தக் கடவேன் என்று மலய பர்வதத்தை யெழுதிக் கொடியெடுத்த மலயத் வஜன்" என்ற அரசன் தேரேறிக் கங்கை நீராடப் போகா நிற்கச் செய்தே, மதிதவழ் குடுமியளவிலே சென்றவாறே தேர் வடக்கு ஓடாமல் நிற்க, அவ்வரசன் அவ்விடத்திலே தேரை நிறுத்தி, இங்கே தீர்த்த விசேஷமும் எம்பெருமானும் ஸந்நிதி பண்ணியிருக்க வேணும் என்று நினைத்து இறங்கி ஆராய்ந்து பார்க்க அவ்விடத்தில் நித்திய ஸந்நிஹிதரான அழகர் அவ்வரசனை நோக்கி, இவ்வாற்றிலே நீராடு என்று நியமித்தருள

நாமங்கேட்டுணர்ந்து நீராட வேண்டுகையால் இவ்வாற்றுக்கு பெயர் என்? என்று அரசர் கேட்க, முன்பு நாம் உலகளந்த போது பிரமன் திருவடி விளக்கின் காலத்தில் நம் பாதச் சிலம்பின் நீர் இதிலே தெறித்துச் "சிலம்பாறு" என்று பெயர் பெற்றது. என்று அழகர் அருளிச் செய்ய அதுகேட்ட அரசன் அவ்வாற்றில் நீராடி கங்கா ஸ்நாந விருப்பத்தையும், தவிர்ந்து, அத் திருமாலிருஞ்சோலைமலை பால் பேரன்பு பூண்டிருந் தானென்ற வரலாற்றைத் திருவுள்ளம் பற்றி "தென்னன் கொண்டாடும்" என்று அருளிச் செய்தார்.

கோட்டு மண் கொண்டிடந்து குடங்கையில் மண் கொண்டளந்து*
மீட்டுமதுண்டுமிழ்ந்து விளையாடும்விமலன் மலை*
ஈட்டியபல் பொருள்கள் எம்பிரானுக்கு அடியுறையென்று*
ஓட்டரும் தண் சிலம்பாறுடை மாலிருஞ்சோலையதே
- (பெரியாழ்வார் திருமொழி 4-3-9)

திருமாலிருஞ்சோலைமலையை மீண்டும் ஆழ்வார் அநுபவித்து வருணிக்கிறார் இதற்கு முன் இராமாவதார வைபவத்தை முற்பட பேசிப் பின்னரே க்ருஷ்ணவதார வைபவங்களைப் பாடியநுபவித்தார். இதில் முதலில் கிருஷ்ணவதார லீலைகளை அழகர் மேலிட்டு அநுபவித்துப் பின்னர் இராமாவதார விசேஷங்களை அநுபவித்து மகிழ்கிறார். ஹிரண்யாக்ஷனாலே தள்ளப்பட்டு ப்ரளயத்தில் அகப்பட்ட பூமியை நீருக்கும், சேற்றுக்கும் இளைக்காத வராஹ வேஷத்தைக் கொண்டு உட்புகுந்து அண்டச் சுவற்றிலிருந்து ஓட்டுவிடுவித்து எடுத்துத் திருவயிற்றிலே கொண்டு பின்பு மஹாபலியால் அபஹரிக்கப்பட்ட பூமியை இந்திரனுக்கு வாங்கிக் கொடுப்பதற்காக வாமன வேஷத்தை எடுத்து யாசகனாய்ச் சென்று கொடுத்து வளர்ந்த தன்னுடைய திருக்கையால் நீரேற்று தானமாகப் பெற்றுக் கையில் நீர் விழுந்த அக்கணமே திருமேனியை வளர்த்துத் திருவடிக ளாலே அளந்து; மீண்டும் இடைப்பட்டு வந்த ஒரு ப்ரளயத் திலே அப்பூமி அழியத் தொடங்கியபோது அதனை உண்டு

திருவயிற்றிலே வைத்துக் காத்து. ப்ரளயம் முடிவுற்றபோது அப்படியே உமிழ்ந்து; இங்ஙனம் திருவிளையாடலைச் செய்யும் தூய்மையாளன் எழுந்தருளி பொன்னும் மணியுமான பல வகைப் பொருள்களையும் எம்பெருமானுக்கு சமர்ப்பிக்க வேண்டும் என்ற விருப்பால் வேகமாக ஓடிவரும் சிலம்பாற்றையுடைய மாலிருஞ்சோலையாகிய அதுவேயாகும்.

**ஆண்டாள் :**

ஆண்டாள் கண்ணெதிரே தோன்றின கார் முகிலை நோக்கி. "நீங்கள் எம்பெருமானிடம் சென்று எனது நிலைமையை அவனுக்கு உணர்த்தி என்னை அவனுடன் கூட்ட வேணும்" என்று வேண்டினாள். ஆனால்மேகங்கள் நகரவில்லை. நன்றாக மழை பொழிந்தன. அதனால் அக்காலத்திற்கான இந்திரக் கோபங்கள் (பட்டுப்பூச்சிகள்) எங்கும் பரந்தன; கருவிளை, முல்லை, காயா முதலிய மலர் கள் நன்கு அலர்ந்தன; வண்டுகள் மலர்களில் படிந்து மதுவுண்டு களித்து ஒலித்தன; குருவிகள் பண்ணிசைத்தன. இவற்றைக் காணும் போது ஆண்டாளுக்கு எம்பெருமானு டைய திருமேனி நிறம், ஒலி முதலியன நினைவுக்கு வந்தன. அவற்றை நினைத்துக் காமத்தால் பீடிக்கப் பெற்றவளாய்த் தான் உயிர் வாழும் வகையில்லை என்கிறாள்.

சிந்துரச்செம்பொடிப் போல் திருமாலிருஞ்சோலை யெங்கும்•
இந்திரகோபங்களே எழுந்தும் பரந்திட்டனவால்•
மந்தரம் நாட்டி அன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட•
சுந்தரத் தோளுடையான் சுழலையில் நின்றுஉய்துங்கொலோ?
(நாச்சியார் திருமொழி 9-1)

திருமாலிருஞ்சோலையில் பார்த்த இடங்களெங்கும் பட்டுப் பூச்சிகளானவை சிந்துரப் பொடி போல் மேலெழுந்து (மலையை மறைத்துக் கொண்டு) பரவிக்கிடக்கின்றன. அந்தோ! (கடலைக் கடைந்து அமுதமளிக்க வேணுமென்று தேவர்கள் சரணம்புகுந்து வேண்டின அக்காலத்திலே மந்திர

மலையை (பாற்கடலில் மத்தாக) நாட்டிக் கடல் கடைந்து மிகவும் மதுரமான அம்ருத ரஸம் போன்ற பிராட்டியை ஸ்வீகரித்த ஸ்ரீ சுந்தரபாஹுநாதனுடைய சூழ்வலையில் நின்றும் பிழைப்போமோ?

**சந்தொடுகாரகிலும்சுமந்து தடங்கள் பொருது ***
**வந்திழியும்சிலம்பாறுடை மாலிருஞ்சோலைநின்ற**
**சுந்தரனை * சுரும்பார்குழல்கோதை தொகுத்துரைத்த**
**செந்தமிழ் பத்தும் வல்லார் திருமாலடிசேர்வர்களே**

- (நாச்சியார் திருமொழி 9-10)

சந்தனக்கட்டைகளையும் காரகிற்கட்டைகளையும் அடித்துக் கொண்டு, கரைகளை அழித்துக் கொண்டு ஓடி வந்து பெருகுகின்ற நூபுரகங்கையை உடைத்தான திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளியிருக்கிற அழகரைக்குறித்து, வண்டுகள் படிந்த கூந்தல் முடியை உடையவளான ஆண்டாள் அழகாக அருளிச்செய்த செந்தமிழ லாகிய இப்பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர்கள். ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளை அடையப் பெறுவர்கள்.

பிறந்தகத்திலிருந்து புக்ககத்திற்குப் போகும் பெண் பிள்ளைகள் தனம் கொண்டு போவது போலே, மலையில் பிறந்து சிலம்பாறும் எம்பெருமான் இருப்பிடமான இப்புக்ககத் துக்குப்போகும் போது, சந்தனத் தோடு காரகிற்கட்டைகளை அலைக்கரங்களாலே சுமந்து கொண்டு புக்ககத்துக்குச் செல்லும் வேகத்தாலே கரைகளை அழித்து கொண்டு ஓடி வந்து பெருகுகின்றது. மதம் கொண்ட யானை கரைகளை தந்தத்தாலே குத்திக் கொண்டு வருவது போலே வருகிறது. இச்சிலம்பாறு, பரமபதத்துக்கு விரஜாநதி போலேயாயிற்று. இத்திருமலைக்கு நூபுர கங்கை வண்டுகள் படிந்த கூந்தல் முடியையுடையவளான ஆண்டாள் எம்பெருமான் மீது கொண்டுள்ள காதல் பெருக்கால் திருமாலிருஞ்சோலையின்

அழகையும், அழகருடைய அழகையும், அழகருடைய கல்யாண குணங்களைச் சேர்த்துப் பாமாலையாகத் தொகுத்து பாடுகிறார்.

ஆண்டாளுடைய காதல் பெருக்கு வழிந்து இப் பாமாலையாகப் புறப்பட்டதாகையாலே இது செவ்விய தமிழா யிருக்கிறது. இப்பத்துப் பாசுரங்களையும் அர்த்தத்தோடு அநுஸந்திக்க வல்லவர்கள். திருமாலும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடிமை செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டு அது கிடையாமையாலே இத்திருமொழியில் இவள் இப்பாடுபட்டாள். இதை அநுஸந்திக்க வல்லவர்கள் இப்பாடெல்லாம் படாமல் இவள் ஆசைப்பட்ட பேற்றைப் பெறுவர். பரமபுருஷார்த்தமான கைங்கர்யத்தைப் பெறுவர் எனக் கூறுகிறார் ஆண்டாள். மகாவிஷ்ணுவிற்கும், அவரது இராம கிருஷ்ண அவதாரங்களுக்கும் அழகர் என்னும் சொல் சமஸ்கிருதத்தில் பயன் படுத்தப்பட்டுள்ளது. இம்முறை தமி ழிலும் பின்பற்றப் பட்டுள்ளது.

மதுரையிலிருக்கும் எம்பெருமானுக்கு கூடலழகர் என்பதும் ஒரு திருநாமம். இவருக்கும் அழகர், கள்ளழகர் என்று திருநாமங்கள், குழலழகர், வாயழகர், கொப்பூழில் எழுகமலப் பூவழகர் என்பது ஆண்டாளின் மங்களாசாசனம் அழகர் என்னும் சொல்லே வடமொழியில் சுந்தரராஜர் என்றாயிற்று.

இம் மலையில் இருக்கும் நூபுர கங்கை எம்பெருமானின் திருமேனிக்கு தீர்த்தமாகி வயல் வெளிகளில் நெளியும் இந்த நூபுர கங்கையின் மகத்துவம் எழுத்தில் அடங்கும் தன்மையதன்று. இதில் நீராடி விஷ்ணு சாமீப்யம் பெற்றவர் பலருண்டு இந்த நதி இக பர சுகத்தைத் தருவதால் இந்த நதிக்கு இஷ்டசித்தி என்ற ஒரு பெயரும் எண்டு. பகவானுடைய பாதார விந்தங்களிலிருந்து தோன்றி ஸம்ஸார பந்தத்தினால் உண்டான அழுக்கைப் போக்கடிக்கும்

இந்நதிக்குப் புண்யச்ருதி என்றும் சகல ஜனங்களின் ஜனன மரண துக்கத்தைப் போக்கடிப்பதால் "பவஹாரி" என்றும் பல பெயர் உண்டு.

இந்த மாலிருங்குன்றத்தைப் பற்றி பரி பாடல் என்னும் சங்க கால நூல் பின் வருமாறு கூறுகின்றது

"தாங்கும் நீள் நிலை ஓங்கு இருங்குன்றம்.
நாறு இணர்த்துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறு பெறு துறக்கம்?
அரிதின் பெறு துறக்கம் மாலிருங்குன்றம்
எளிதில் பெறல் உரிமை ஏத்துகம், சிலம்ப.
..................................................
மாயோன் ஒத்த இன் நிலைத்தே
சென்று தொழுகல்லீர்! கண்டு பணிமின்மே—
இருங்குன்று என்னும் பெயர் பரந்ததுவே
பெருங்கலிஞாலத்து தொன்றியல் புகழது"

- 15ஆம் பரிபாடல்

சிலப்பதிகாரமும்,

"தடம்பல கடந்து காடுடன் கழிந்து
திருமால் குன்றம் செல்குவீராயின்"

என்று திருமாலிருஞ்சோலையைக் குறிக்கிறது.

எமதர்மராஜன் விருஷபம் என்றரூபத்தோடு தபசு செய்து இம்மலைக்கு விருஷபாத்ரி எனப் பெயரிடுமாறு பகவானை வேண்ட அவ்வண்ணமேயாயிற்றென்பர். தர்மத்திற்கு அதிபதியான தர்மதேவன் இங்கு ஸ்ரீமந்நாராய ணனைக் குறித்து தவமிருந்து சுந்தர ராஜனைத் தரிசித்து அதே திருக்கோலத்தை யாவருக்கும் காண்பிக்க இங்கேயே எழுந்தருளுமாறு வேண்டி நிற்க. அவ்வண்ணமே எழுந்தருளிய தாகவும், உடனே தர்மதேவன் விச்வகர்மாவை அழைத்து விமானம், கோபுரம், கோட்டை கொத்தளத்துடன்

எம்பெருமானுக் கோவில் எழுப்புமாறு பணித்திட, சந்திரனைப் போன்ற அழகு வாய்ந்த சோமச்சந்த விமானத்துடன் விச்வகர்மா இக் கோவிலை உருவாக்கினான் என்பது வரலாறு.

எம்பெருமான் திருவிக்கரம அவதாரம் எடுத்த போது ஒரு பாதத்தால்·ல் உலகளந்து விட்டு மறு பாதத்தால் விண்ணளக்க அது பிரம்மனின் சத்திய லோகம் வரை செல்ல பிரமன் தனது கமண்டல நீரால் பாத கமலங்கட்கு அபிஷேகம் செய்ய அந்த கமண்டலநீர் பெருமாளின் காலிலுள்ள பொன் சிலம்பில் பட்டுத் தெறித்து இவ்விடத்தே சிலம்பாறாகப் பெருகி, இது எங்கே உற்பத்தியாகிறது என்று சொல்ல முடியாதவாறு வற்றாத ஜீவநதியாய் ஓடிக் கொண்டு தேனை விட இனிமையாக இனிக்கும் தன்மை பெற்று எம்பெருமானின் திருமஞ்சனத்திற்கும் இலக்காகி நிற்கிறது.

இந்த சிலம்பாறு தான் நூபுர கங்கையாகும். இந்த தீர்த்தம் தவிர்த்து வேறு தீர்த்தங்களில் இங்குள்ள உற்சவருக்கு திருமஞ்சனம் செய்தால் பெருமாள் கறுத்து விடுவதால் இரண்டு மைல் தொலைவில் உள்ள இந்த தீர்த்தமே எப்போதும் திருமஞ்சனத்திற்குப் பயன்படுத்தப் படுகிறது.

| | |
|---|---|
| மூலவர் | ஸ்ரீபரமஸ்வாமி, பஞ்சாயுதங்களுடன் ஸ்ரீதேவி பூதேவி சூழசங்கு சக்கரங்களுடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம். |
| தாயார் | சுந்தரவல்லி. ஸ்ரீதேவி என்ற பெயரும் உண்டு. |
| உற்சவர் | சுந்தரராஜன், கள்ளழகர் என்னும் திருநாமம். இங்கு உற்சவர் மிகவும் பேரழகு வாய்ந்தவர். இந்த உற்சவர் அபரஞ்சியால் செய்யப்பட்டவர். |

இந்தியாவிலேயே இங்கும் திருவனந்தபுரத்திலும் மட்டுமே அபரஞ்சியால் செய்யப்பட்ட உற்சவர்கள் உள்ளனர். சோலை மலைக்கரசர் என்றே திவ்ய பிரபந்தம் இந்த உற்சவமூர்த் தியை வர்ணிக்கிறது. புராணம் "ரிஷபாதீசர்" என்று அழைக்கிறது. மூலவரைவிட உற்சவர் பெரும் புகழ் பெற்ற ஸ்தலங்களுள் இதுவும் ஒன்று. இங்கு உற்சவரும் பஞ்சாயுதங்களுடன் திகழ்கிறார்.

தீர்த்தம் - நூபுரகங்கை என்னும் சிலம்பாறு

ஸ்தல விருட்சம் - விருஷபகிரி,சந்தன விருட்சம்

விமானம் - ஸோமஸ்கந்த விமானம்

காட்சிகண்டவர்கள் - மலயத்வஜ பாண்டியன் எமன் தர்மதேவதை

**சிறப்புகள் :**

கிழக்கு மேற்காக 10மைல் தூரமும், 1000 அடி உயரமும் உள்ள இம்மலை எண்ணற்ற பூம்பொழில் களையும்,பல சுனைகளையும், அரிய மூலிகைகளையும், நிறைந்த குளிர்ச்சியினையும், கொண்டு திகழ்கிறது. இந்த மலையில் ஆயிரம் தலைகள் உடைய ஆதிசேடன் வாழ்ந்து வருவதாக ஐதீஹ்யம். ஆயிரம் தலைகள் இருப்பதால் ஆயிரம் தடாகங்களும், ஆயிரம் பொழில்களும் அவன் வாழ்வதற்கு வேண்டுமல்லவா? அதனால்தான்.

**ஆயிரம் தோள் பரப்பி முடியாயிரம் மின்னிலக*
ஆயிரம் பைந்தலைய அனந்தசயனன் ஆளும்மலை*
ஆயிரமாறுகளும் சுனைகள் பலவாயிரமும் *
ஆயிரம் பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே.**

(பெரியாழ்வார் திருமொழி 4-3-10)

என்று இந்த மாலிருஞ்சோலை மலையினை ஆழ்வார் மங்களாசாஸனம் செய்கிறார்.

**நண்ணா அசுரர் நலி வெய்த நல்ல அமரர் பொலி வெய்து*
எண்ணா தனகளென்னும் நன் முனிவர் இன்பம் தலைசிறப்ப*
பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னை தான்பாடி*
தென்னாவென்னும் என்னம்மான் திருமாலிருஞ்சோலையானே!**

திருவாய்.10-7-5

கிட்டக் கடவோம்அல்லோம் என்று இருக்கிற அசுரக் கூட்டங்கள் அழியும் படியாகவும், சிறந்த குணங்களையுடைய வர்களான தேவர்கள் மேன்மையினை அடையும் படியாகவும், மற்றை மக்கள் எண்ணாதனவற்றை எண்ணுகின்ற, சிறந்த முனிவர்களுக்கு இன்பம் மேலும், மேலும் ஓங்கும் படியாகவும், பண்ணோடு கூடிய இசையையுடைய இனிய பாட்டுகளைத் தானே யானாகித் தன்னையே தான் பாடித் தென்னாதெனா என்று ஆளத்திவையா நிற்கும் எம்பெருமான் திருமாலிருஞ் சோலை மலையிலே உள்ளவன் ஆவான்.

தென்னாவென்னும் - செருக்காலே "தென்னா, தென்னா" என்று ஆளத்திவையாநிற்குமாயிற்று, பிறப்பு இறப்புகளிலே உழல்கின்ற ஒருவன் பகவானைப் பெற்றால், மேலே சொல்லப் போகிற சாமத்தைப் பாடிக் கொண்டிருக் கிறான் என்கிறபடியே சாமகானம் பண்ணுமாறு போலே; வார்த்தை ஆடாதவன் விருப்பம் இல்லாதவன் எனப்படுமவன் அத்தன்மை நீங்கிப் பாடா நிற்பான் ஆயிற்று.

என் அம்மான் - குழந்தையின் வார்த்தை இனிதாம் போது சம்பந்தம் உண்டாக வேண்டும் அன்றோ? அதற்கு அடியான சம்பந்தத்தைச் சொல்லுகிறது.

திருமாலிருஞ்சோலையானே பாட்டினால் இவரை பாடுவித்த முக்கோட்டை. "பாட்டினால் உன்னை என் நெஞ்சத்து இருந்தமை காட்டினாய்", என்று தாம் பாடின கவிகளின் இனிமையை நினைத்தார். இவை தாம் அடியாகப்

பிறந்தன. திருமாலிருஞ்சோலையில் இருக்கும் எம்பெருமான் என் தன் நெஞ்சிலே புகுந்திருந்து பாடுவித்தானாய் இருந்தது என்று ஆழ்வார் பாடுகிறார். அதனால் திருவாய்மொழிக்கு வித்து திருமாலிருஞ்சோலையில் உள்ளது என்று கூட நிர்வாஹிக்கலாம்.

திருமாலையாண்டான் குமாரரான சுந்தரத் தோளுடையான். இவரை பெரியாண்டான் என்று கூறுவர். இவர் திருமாலிருஞ்சோலை அனுபவத்திற்கும், பரமபதத்தில் உள்ள அனுபவத்திற்கும் உள்ள வாசியை கூறுகிறார். பெரியாண்டான்பாஷ்யகாரர் ஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்து எம்பார் பக்கலிலே ஜ்ஞாநோப ஜீவநம் பண்ணினார். "வ்யவஸாயாத்மக ஜ்ஞாந விசேஷம்ப்ரபத்தி" என்று பெரியாண்டான் அருளிச் செய்வர். "ஒரு கிணற்றிலே விழுந்தானொருத்தனை இரண்டு பேராக எடுக்குமோ பாதியிறே" பாஷ்யகாரரும் என்னை உத்தரித்தபடி என்று பெரியாண்டான் அருளிச் செய்தார்.

அழகர் திருவோலக்கத்திலே பிள்ளையழகப் பெருமாள் வந்து புகுந்து பெரியாண்டானைப் பார்த்து,"பரமபதமிருக்கும்படியென்" "பரமபதத்தில் உள்ள அனுபவத்திற்கும், திருமாலிருஞ்சோலையில் உள்ள அனுபவத்திற்கும் என்ன வாசி" என்று கேட்க ,இப்படியேயிருக்கும் என்று அருளினார்.

பெரியாண்டான் கூறியதாவது, திருமாலிருஞ்சோலையில் உள்ளபடி அங்கும் எம்பெருமான் இருப்பான். அங்கும் சென்று பகவத்கைங்கர்யம் செய்யலாம் என்று கூறினார். அப்படியானால் இத்தை விட்டு அங்கே போவானேன்? என்ன, இங்கிருந்தால் முதுகு கடுக்கும் ; அங்கு போனால் அது செய்யாது என்று அருளிச் செய்தார். பகவத் குணாநுபவத்துக்கு எடுத்துக் காட்டாய் இருந்தவர் பெரியாண்டான். இங்கு விரோதியான உடம்போடு பண்ணும் கைங்கர்யம். அங்கு ஆர்த்தி தோன்ற செய்யும் கைங்கர்யம் என்று அருளிச் செய்வர்.

பெரியாழ்வார், ஸ்ரீஆண்டாள், நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார் ஆகிய 6 ஆழ்வார் களால் 123 பாக்களால் பாமாலை சூட்டப்பட்ட மாண்புடைத்தது இத்தலம். தந்தையும் மகளுமான ஒரு வீட்டு ஆழ்வார்களான பெரியாழ்வாரும் ஆண்டாளும் இப்பெருமானிடம் கொண்ட பக்தி பற்றி தனிநூல் ஒன்றே எழுதி விடலாம்.

**திருவரங்கமும் திருமாலிருஞ்சோலையும் :**

திருவரங்கமும் திருமாலிருஞ்சோலையும், அநேக விஷயங்களில் ஒன்று படுகின்றன. இரண்டு கோவில்களும் கோட்டைகளும் உயர்ந்த மதிற்சுவர்களும் வாய்க்கப் பெற்றவை. நெல் மணிகளைச் சேர்த்து வைக்கும் குதிர்கள் இரண்டு தலங்களிலுமுண்டு. இரண்டு கோவில்களிலும் உள்ள பிரதான வாயில்கள் "ஆர்யன் வாசல்" என்றும், "ஆர்ய படர் வாசல்" என்றும் அழைக்கப்டுகின்றன. இரண்டு ஸ்தலங்களிலும் பிரசாதங்கள் தயாரிப்பதும் விளக்கிடுவதும் தனி நெய்யிலேயே நடைபெறுகின்றன. திருவிழாக்களின் நடை முறையும் இரண்டு கோவில்களில் ஒத்துக் காணப்படு கின்றன. திருவரங்கத்தின் மதில்களை திருமங்கை யாழ்வார் பாடியுள்ளார். திருமாலிருஞ்சோலை மதில்களை பெரியாழ் வார் பாடியுள்ளார். திருவரங்கன் இராமானுசருக்கு அருள் பாலித்தான். மாலிருஞ் சோலையான் கூரத்தாழ்வானுக்கு அருள் பாலித்தான். இருவரும் அழகில் விஞ்சியவர்கள். திருவரங்கன் சயன திருக்கோலத்தில் தனது பேரழகைக் காட்டினான், இவன் நின்ற திருக்கோலத்திலும், அமர்ந்த திருக்கோலத்திலும் காட்டினான். பெரியாழ்வாருடன் ஆண்டாளும் இப்பெருமானைக் குறித்துப் பாசுரம் பாடி இறுதியில் இவ்வழகரையே ஆண்டாள் ஏற்றுக் கொண்டதாக ஐதீஹ்யம். இதிலும் இவ்விரண்டு ஸ்தலங்களும் ஒன்று படுகின்றன. அமர்ந்த திருக்கோலத்தில் ஆண்டாள் இருப்பது இந்த இரண்டு தலங்களிலும்.

இந்த அழகர் மலையில் உள்ள அழகிய மணவாளன் கிணற்றில் தான் முகம்மதியர் படையெடுப்பின் போது அரங்கனை இரு முறை கொணர்ந்து பத்திரப்படுத்தி வைத்தனர் என்று கோயில் வரலாறு கூறுகிறது.

**திருவிழாக்கள் :**

ஸ்ரீ கள்ளழகருடைய திருவிழாக்களில் மிகவும் முக்கிய மானது சித்திரை மாதம பௌர்ணமி அன்று வரும் சித்திரைத் திருவிழாவாகும். ஸ்ரீ அழகர் சித்திரை மாதத்தில் அலங்கா நல்லூர், தேனூர் வழியாக மதுரை வந்து வைகையில் இறங்கி வண்டியூரில்தங்கி மீண்டும் அழகர் மலையடைவது வழக்கம். திருமலை மன்னர் இநத இரண்டு விழாக்களையும் ஒன்று சேர்த்தால் அது சிறப்பாக இருக்கும் என்று கருதியே இரண்டையும் ஒன்று சேர்த்தார் 9 நாட்கள் நடைபெறும் இத்திருவிழா மதுரைத் திருவிழா எனவும் சித்திரை திருவிழா எனவும் சிறப்புடன் அழைக்கப்படுகிறது. இது தான் மதுரையில் நடக்கும் பெரிய திருவிழாவாகும்.

இதறகு கூறபபடும் கதை, தன் தங்கையான மீனாட் சியின்திருக்கலியாணம் காண எம்பெருமான் மதுரைக்கு எழுந்தருளி வரும் சமயம் எதிரில் பல மண்டபங்களில் தங்கி இளைப்பாறிவர (12 மைல் தொலைவல்லவா) இவர் வருவதையறிந்த மதுரை மக்கள் எதிர் கொண்டு வரவேற்க சேவிக்க செல்லும் வழக்கமே எதிர் சேவையாயிற்று. இந்நிகழ்ச்சிக்குப் புராதன ஆதாரமில்லை. சைவ, வைணவ மதம் பேதம் நீங்கி ஒற்றுமை உண்டாகவே இப்படியொரு விழாவை உண்டாக்கினாரோ என்று கருத வேண்டியுள்ளது.

அழகர் குதிரை வாகனத்தில் வைகையை நோக்கிச் செல்லும்போது வைகையில் இறங்கும் முன் ஸ்ரீவில்லிபுத்தூரி லிருந்து வரும் சூடிக் கொடுத்த ஆண்டாளின் மாலையைச் சூட்டிக் கொள்கிறார். இது ஆண்டு தோறும் தவறாது நடக்கும் நிகழ்ச்சி. ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்து ஆண்டு தோறும் மாலையும் இங்கு வந்து சேர்கிறது.

வைகையிலிறங்கியதும் ஸ்ரீவீரராகவப் பெருமாள் இவரை எதிர் கொண்டழைப்பார். இந்தத் திருவிழாவிற்கு தமிழகமெங்குமிருந்தும் லட்சோபலட்சம் பேர் கூடுவதும் வேறெங்கும் இல்லாத நிகழ்ச்சியாகும். இந்நிகழ்ச்சியின் போது ராமராயர் மண்டபத்திற்கு அழகர் வந்து சேர்ந்ததும் நடைபெறும் வாண வேடிக்கை நிகழ்ச்சிகளும், பக்தர்கள் திரி எடுத்துக் கொண்டு வண்ண உடைகளில் தம்மை அலங்காரம் செய்து கொண்டு ஆடுவதும், கோவிந்தா, கோவிந்தாவென விண்ணதிரக் கூவுவதும் செவிக்கும் கண்களுக்கும் பக்தி பூர்வமான ஞானத்திற்கும் ஒரு அரிய விருந்தாகும்.

அழகர் ஆற்றில் இறங்கும் போது என்ன விதமான பட்டாடை உடுத்தி கொண்டு வந்துள்ளார் என்று அறிய மக்கள் அதிக ஆர்வம் காட்டுவர். அழகர் அணிந்து வரும் பட்டாடைக்கும் அடுத்த ஆண்டு விளையப்போகும் விளைச்சலுக்கும் தொடர்புண்டு என்பதும் இங்குஉள்ள மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

''கிளரொளியிளமை கெடுவதன் முன்னம் *
வளரொளிமாயோன் மருவிய கோயில் *
வளரிளம் பொழில் சூழ் மாலிருஞ்சோலை *
தளர் வில ராகில் சார்வது சதிரே ''

(திருவாய்மொழி -2-10-1)

ஆழ்வார் விரும்பிய புருஷார்த்தத்தை எம்பெருமான் தந்தருள இசையவும், இங்கே இவ்வுடம்புடனே பெற வேணும் என்று அவர் கேட்கிறார். எம்பெருமானும், இவர்க்கு தெற்குத் திருமலையாகிய திருமாலிருஞ்சோலைமலையைக் காட்டு கிறான். உடனே ஆழ்வாரும் திருப்தியுற்றவராய் இனி அடிமைதான் வேணுமோ? திருமலை தானே எனக்கு மிகவும் வேண்டிய பயனும் இடமும் என்று இப்பத்து பாசுரத்தில் அருளிச்செய்கிறார்.

கிளர்ந்து வரும் ஒளியையுடைய இளமைப் பருவம் கெடுவதற்கு முன்பாகவே திருமாலிருஞ்சோலை மலை அடைவது ஆத்மாவுக்குப் பேறு ஆகும். அங்கே வளர் ஒளி மாயவன் ஆகிய திருமால் எழுந்தருளி உள்ளான்.இளமை பொருந்திய சோலைகள் சூழ்ந்த அந்தத் திருமாலிருஞ் சோலை மலையைச் சென்று சேர்வதே தளர்ச்சிஇல்லாமல் இருக்கச் சிறந்தது ஆகும்.

சூதென்று களவும் சூதும் செய்யாதே *
வேதமுன் விரித்தான் விரும்பிய கோயில் *
மாதுறுமயில்சேர் மாலிருஞ்சோலை *
போதவிழ்மலையே புகுவது பொருளே

(திருவாய்மொழி 2-10-10)

வெற்றி கிடைத்து விடுமென்று தவறாக எண்ணிச் சூதும் களவும் செய்யாதீர்கள். அவற்றை விடுத்துத் திருமாலிருஞ் சோலை மலையை அடைவதே பேறு என்று கருதுங்கள் வேதங்களை விரித்துக் கூறிய எம்பெருமான் ஆசைப்பட்டு அமர்கின்ற கோயில் இது. ஆண்களும், பெண்களுமாய், மயில்கள் கூடி வாழும் திருமாலிருஞ்சோலை மலையை அடைவதே இப்பிறவி எடுத்ததன் பயன் ஆகும். என ஆழ்வார் திருமாலிருஞ்சோலை மலை அழகரின் வடிவில் ஈடுபட்டு ஆனந்தம் அடைகிறார்.



## 4.திருநாடு காட்டும் திருநாராயணன்

### திருநாராயணர் தோன்றிய வரலாறு :

கடவுள் கோயில் கொண்டுள்ள இடங்களெல்லாம் உயர்ந்த இடங்கள் தாம். என்றாலும், சில இடங்களில் அவர் விசேஷமான சக்தியை காண்பித்து அடியார்களை காக்கின்றார்.இவ்விடங்களை திவ்ய தேசங்கள் என்கிறோம். இவைகளை எவ்வாறு அறிவது? என்றால் ஆழ்வார்கள் அவ்விடங்களில் உள்ள மூர்த்திகளையும், அவ்வெம்பெரு மானின் திருக்கல்யாண குணங்களையும் பாடியுள்ளனர். அவ்விதம் ஆழ்வார்களால் பாடித் துதிக்கப்பட்ட தலங்கள் தான் திவ்ய க்ஷேத்திரங்கள் (பாடல் பெற்ற தலங்கள்) ஆகும்.

அர்ச்சையாக நிற்கும் கடவுளை எவரும் எளிதில் காணலாம். கோயில்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெரு மானை ஸேவித்து தமக்குத் தேவையானவற்றை வேண்டிப் பெற்றவர்கள் பலர். திவ்ய தேசங்களுக்கு யாத்திரையாக சென்று பெருமாளை ஸேவித்தாலே புண்ணியம் உண்டு, பாவம் அகலும் என்று யாத்திரை செல்வது வழக்கம். கடவுளைக் கொண்டு எல்லா மதத்தினரும் தாங்கள் தங்கள் புண்ணியத்தலங்களுக்கு யாத்திரை செய்து வருகிறார்கள் என்பது உலகறிந்த விஷயம்.

இங்கு ஆழ்வார்கள் பாடிய "108" திவ்யதேசங்களில் மூன்று திவ்ய தேசத்தை முக்கியமானதாக கூறியுள்ளனர். 1.திருவரங்கம் அதாவது ஸ்ரீரங்கம் 2. வேங்கடாத்ரி என்ற திருவேங்கடம் 3. ஹஸ்திசைலம் என்று கூறப்படும்அத்தகிரி என்ற காஞ்சிபுரம். ஆழ்வார்கள் தேர்ந்தெடுத்த இந்த மூன்றோடு நான்காவதாக யதுசைலத்தையும் சேர்த்தனர். இந்த யதுசைலம் தான் திருநாரர்யணபுரம் ஆகும்.

**ஸ்ரீ ரங்கமங்கள மணிம் கருணு நிவாஸம்**
**ஸ்ரீ வேங்கடாத்ரி சிகராலய காளமேகம் !**

**ஸ்ரீ ஹஸ்தி சைல சிக ரோஜ்வல பாரிஜாதம்**
**ஸ்ரீ சம் நமாமி சிரஸா யது சைல தீபம் !!**

முதலில் திருவரங்கம் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீரங்கத்தில் கோயில் கொண்டுள்ள பெருமாளைப் பெரிய பெருமாள் என்றும், பிராட்டியை பெரியபிராட்டியார் என்றும் அழைப்பது வழக்கம். அடுத்தபடி வேங்கடநாதன் கூறப்பட்டுள்ளார். "கலௌ வேங்கட நாயக" என்று பெரியோர்கள் அனைவரும் கூறுகிறார்கள். வேங்கடவன் என்றதற்கு பாவங்களைப் போக்குபவன் என்பதாகும். கலியுகத்தில் பாபம் அதிகம் செய்வோர் பிறப்பரென்று புராணங்கள் சொல்லும். பாவத்தை போக்கிக் கொண்டால் மட்டிலுமே மோட்சம் பெற முடியும். அதற்கெனவே திருமலையில் வந்து நிலைத்து உள்ளான் எம்பெருமான், அடியார்களின் குற்றங்களையே பார்த்து, தண்டிக்காது காத்தருள வேண்டும் என அவர்களுக்காகப் பரிந்து பேசும், என்றுமே தண்டித்தல் என்பதையே அறியாத மஹாலக்ஷ்மி யுடனேயே பிரியாது இருப்பவர். நம்மாழ்வார் இவரை "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா?" என்று அழைக்கிறார். அரங்கனை நினைத்ததும், அவனையடையப் பாவங்களை நீக்கியருளும் வேங்கடவனை நினைத்து போற்றுவது இதமென இப்பெருமாளைக் கூறினார்கள்.

மூன்றாவதாக வரதராஜர் அவர் அவதரித்தது முக்தி தரும் நகரேழில் முக்கியமாம் கச்சி தன்னில் ஆகும். நமது நாட்டில் முக்தியளிக்கும் நகரங்கள் ஏழு என்று ஆன்றோர் கூறியுள்ளனர். அவைகளில் முக்கியமானது காஞ்சி ஆகும். பூ மண்டலத்தில் செய்யும் விரதம் பலிக்கும் படி அருளும் க்ஷேத்திரம் இதுவே, எனவே இது ஸத்திய விரதமென்றே அழைக்கப்படுகிறது. மேலே கூறப்பட்டுள்ள எம்பெருமான்கள் அனைவரும் வேறு வேறு அல்லர் அடியார்களுக்கருளும் பொருட்டு வேறு வேறு பெயரில் இங்கு கோயில் கொண்டுள்ள

அவர், திருவுடன் கூடிய மால் என்பது தெரியவும், அவர் பெயர் நாராயணர் என்று தெரியவும் திருநாராயணபுரத்தை நினைவுக்கு கொண்டு வரட்டும் என்று பெரியோர் யது சைலத்தை கூறியுள்ளனர். வேங்கடத்தைப் போல் நாராயணன் என்ற சொல் "நாரங்களுக்கு கதி" என்று பெருள்படும், எனவே இது அவசியம் என்று இதனை கூறினர்.

**திருநாராயணர் :**

ஒரு மஹாப்ரளயத்தில் ஆலிலைமேல் பள்ளி கொண்டிருந்த பராத்பர வஸ்து கருணை மிகுந்தவராய் யோசிக்கத் தொடங்கினார். பாவ மிகுதியால் அதன் பலனை அனுபவிக்க முடியாமல் மிகத் தத்தளித்த உயிர்களின் மீது இரங்கி மருந்து கொடுக்கும் வைத்தியரை போல் பவரோக வைத்தியரான பரமாத்மா இவை தூங்கட்டும் என்று எல்லாவற்றையும் தமது வயிற்றினுள் வைத்துக் காத்தார். ப்ரளயம் ஏற்பட்டது இவ்வாறு தான். தூங்கியாயிற்று. இவ்வாறே அஸத்துக்கள் போன்று இவ்வுயிர்கள் இருக்க வேண்டாம் ஸத்தையைக் கொடுப்போம், சாஸ்த்ரம் தருவோம். செய்யவேண்டுவன செய்து செய்யாதன செய்யாமல் நம்மை அடைந்து எப்பொழுதும் ஆனந்த அநுபவம் செய்து கொண்டு இருக்கட்டுமே என்று தான் அந்த "ஆலமரத்தின் இலை மேல் ஒரு பாலகனாய் ஞாலமேழு முண்டான்" கருணை காரியமாக மாறிற்று. உந்தியில் தாமரை உண்டாகிப் பூத்தது. அப் பூவின் மீது தாமரையான் பிரமன் உண்டானான். "நாராயணன் படைத்தான் நான் முகனை" என்று ஆழ்வார் பாடியுள்ளது இதனைத்தான். பூவின் மீது தோன்றிய பிரமன் சுற்று முற்றும் பார்த்தார். நாமெங்கிருந்து வந்தோம்? என எண்ணினார். தாமரைத் தண்டினைப் பிடித்துக் கொண்டு இறங்கிப் பார்க்கலாம் எனத் தோன்றவே அவ்வாறு செய்ய முற்பட்டார். இறங்கிக் கொண்டே இருந்தார். ஏதும் அகப்படவில்லை. அகப்படுவ தாகவும் தோன்றவில்லை. கை சளைத்து இறங்கவும் முடியாமல் ஏறுவும் முடியாமல்

போய்விட்டால் என்ன கதி ஆவோம்! என்று எண்ண முண்டாகவே உட்கார்ந்திருந்த இடத்தை அடைந்து பின் யோசிப்போம் என்று தீர்மானித்தார். அவ்வாறே செய்தார். பிரமபட்டத்துக்காகவே தக்க புண்யம் செய்த சேதனன் ஆகையால், நாராயணர் தோன்றி வேதங்களை உபதேசித்து, படைப்புக் கிரமத்தை உபதேசித்துப் படைக்கும்படி கட்டளையிட்டு மறைந்தார். உபதேசித்தபடியே விச்வம் முழுமையும் படைத்தார். படைப்புக் கடவுளாகிய பிரம்மா. எப்பொழுதும் நாராயணனை ஸேவித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று எண்ணிய பிரம்மா நாராயணனை வேண்டினார். நாரயணனும் பிரமன் முன் தோன்றி நாராயண மூர்த்தி விக்ரஹத்தை கொடுத்து திருவாராதனைச் செய்யும்மாறு கூறினார். பிரமனும் பல காலம் சிரத்தையுடன் ஆராதித்து வந்தார்.

பிரம்மா படைக்கத் தொடங்கிய காலத்தே ஸனகர், ஸனத்குமாரர் முதலிய நால்வரை மனத்தால் படைத்தார். அவர்களுக்கு பிரமமானஸ புத்திரர்கள் என்ற பெயர் ஏற்பட்டது. இந்நால்வரில் ஸனத் குமாரர் பிரம்மாவுக்கு பல காலம் பணி விடை செய்து வந்தார். அதனால் மிகவும் ஸந்தோஷங்கொண்ட பிரம்மா அவருக்கு வரம் கொடுக்க முன் வந்தார். ஸனத்குமாரர் திரு நாராயண மூர்த்தியை தந்தருள வேண்டும் என கேட்க, பிரம்மாவும் தாம் ஆராதித்த நாராயண மூர்த்தியை, குமாரருக்கு கொடுத்தார்.

ஸனத்குமாரர் திருநாராயணரை ஆராதித்து வந்தார். அவரை ஓரிடத்தில் பிரதிஷ்டை செய்து, அனைவரும் ஸேவிக்க வேண்டும் என நினைத்தார். யது சைலத்தை தேர்ந்தெடுத்தார். அங்கு ஆனந்த விமானத்துடன் பிரதிஷ்டை செய்தார் பிரம்மாதி தேவர்கள் அங்கு வந்திருந்து ஸேவித்து மகிழ்ந்து சென்றார்கள். ஸனத்குமாரர் அவ்விடத்திற்கு நாராயணாத்ரி எனப் பெயரிட்டார். திரு நாராயணர் "ஸ்ரீசர்" அடியார்களுக்கு அருள் வழங்கியவாறு எழுந்தருளியிருந்தார்.

**ஹ்ருதயோத்பவர் :**

பிரம்மா தான் ஆராத்ய தெய்வத்தைக் கொடுத்து விடுவது சுலபமல்ல அதுவும் மோக்ஷம் அளிக்கும் தெய்வம் அது. அதனால் பிரம்மா மிகவும் மனம் வருந்தினார். கொடுத்து விட்டோமோ என்று அல்ல. தாம் ஆராதனை எவ்வாறு செய்வது என வருந்தினார். நாராயணனை மன முருகி வேண்டினார். எம்பெருமான் உகந்து திருநாரா யணனை உற்சவ விக்கிரஹத்தை நிருமித்து "ஹ்ருத்யோத் பவர்" என்று கூறிப் பிரமனுக்களித்தார். அவரைப் பிரம்மா ஆராதித்து வந்தார்.

இஷ்வாகு சக்ரவர்த்தி கால முதல் ஆராதிக்கப்பெற்று வந்த இஷ்வாகு குலதனம் என்று பேர் பெற்ற பிரணவாகார விமானத்துடன் திருவரங்கத்தில் ஸ்ரீரங்கசாயியை சக்ரவர்த்தித் திருமகன் விபிஷணாழ்வாருக்கு அளித்தார். பிறகு சக்ரவர்த்தித் திருமகன் தாம் ஆராதிக்க தெய்வம் தேடினார். பிரமன் தான் ஆராதித்து வந்த ஹ்ருதயோத்பவரை அவருக்கு அளித்தார்.

பிராட்டியும் பெருமாளுமாக ஹ்ருத்யோத்பவரை வெகு காலம் ஆராதித்து வந்தார்கள். பகவானாகிய ராமன் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளும் போது தான் ஆராதித்த மூர்த்தியை சிறிய திருவடியின் கையில் ஒப்படைத்து, தம்மை போல அவரை எண்ணிப் பேணி வருமாறு பணித்தார். அவரும் அவ்வாறே செய்து வந்தார். காலக்ரமத்தில் அம்மூர்த்தி ஸ்ரீராமரது திருக் குமாரரான குசரிடம் சேர்ந்து அவரால் ஆராதிக்கப்பட்டு வந்தார் ஸ்ரீராமன் ப்ரியத்துடன் ஆராதித்த ஹ்ருத யோத்பவர் ஸ்ரீராம ப்ரியராயினார்.

குசருக்குக் கனக மாலினி என்றொரு பெண். கனக மாலினியைக்குசர் யதுவமிசத்திளவரசருக்கு மணம் செய்து கொடுத்தார். மாப்பிள்ளையின் பெயர் யதுசேகரன் ஆகும். இந்த ஸம்பந்தம் நாரத மகரிஷியினால் ஏற்பட்டது. திருமணம் மிக்க விமரிசையாக நடந்தேறியது. பெண்ணைப் புகுந்த இடம்

அனுப்பும் போது, குசலர் கனக மாலினியை பார்த்து உனக்கு என்ன வேண்டும் எதனைக் கேட்டாலும் கொடுக்கிறேன் என்றார். கனக மாலினியும் "தந்தையே! என்னுடன் ஸ்ரீராமப்ரியனை அனுப்பிக் கொடுக்க வேண்டும் அவரையே நான் வேண்டுவது" என்றாள். ஸ்ரீராமப்ரியனைப் பெற்றுக் கொண்டு கனக மாலினி கணவனில்லம் புறப்பட்டாள். மதுரையில் (வட) கோலாஹலமான வரவேற்புக் கிடைத்தது, தம்பதிகள் ஸ்ரீராமப்ரியனை அழகாக ஆராதித்து வந்தனர். அவரது அருளால் அரசர்கள் செல்வம் ஓங்கியது. வமிசமும் வளர்ந்தது. அவ்வம்சத்தில் அவதரித்த ஸ்ரீகிருஷ்ணபகவானும் பலராமனும் ஸ்ரீராமப்ரியனை ஆராதித்து வந்தனர்.

ஸனத்குமாரர் க்ருதயுகத்தில் பெருமாளை ப்ரஹ்மாவிட மிருந்து பெற்று வந்து இங்கு வைத்து ஆராதித்ததால் நாராயணாத்ரி என்றும், த்ரேதாயுகத்தில் தத்தாத்ரேயர் வேதங்களைச் சீடர்களாகக் கொண்டு வேதாத்யயனம் பண்ணிக் கொண்டிருந்தமையால் "வேதாத்ரி" என்றும், த்வாபரயுகத்தில் கண்ணனும்,பலராமனும் ராமப்ரியர் என்றும் உத்ஸவ மூர்த்தியைச் சேர்த்து வழிபட்ட தனால் "யாதவாத்ரி" என்றும் இக் கலியுகத்தில் மறைந்து நின்ற அவர்களை எம்பெருமானார் பிரதிஷ்டை செய்து பழிபட்டதனால் யதிகரி என்றும் பெயர் பெற்று விளங்குகிறது.

ஸ்ரீகிருஷ்ணனும் பலராமனும் தான் ஆராதித்து வந்த ராமப்ரியரை, ஸ்ரீநாராயணாத்ரியை அடைந்து உற்சவரை மூலவரோடு சேர்த்து வைத்து, (கிருஷ்ண) அபிமானித்து பிரதிஷ்டை செய்து ப்ரம்மோற்சவம் கண்டருளி செய்தார். இடைக்காலத்தில் கோயில் இல்லாமல் போயிற்று. ஸ்ரீ ராம ப்ரியர் வட நாட்டில் போய் சேரும்படி ஆகிவிட்டது. எப்பொழுது இவ்வாறு ஆயிற்று. எவ்வாறு ஆயிற்று, என்று திடமாகக் கூறுவது கடினம். மூலவர் புதையுண்டு போனார். புற்று வளர்ந்து விட்டது. எங்கும் காடு மண்டி, புண்ணியத் தலம் அடையாளம் தெரியாமல் போய்விட்டது.

**யதுசைலம் யதிசைலமாயது :**

இங்குள்ள யதி என்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸித்தாந்தமான விசிஷ்டாத்வைதத்தை நிலை நிறுத்திய இராமாநுசரைக் குறிக்கும். இராமானுசர் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீவைஷ்ணவத் திரளோடு, ரக்ஷித்து வாழ்ந்து வரும் காலத்திலே அந்த தேசத்துக்கு அதிபதியான சோழ அரசன் சைவ மதத்தைச் சார்ந்தவன். சோழ அரசன் சைவ சமயத்தில் ஊற்றங் கொண்டு "சிவனைக் காட்டிலும் மேலான தெய்வமில்லை "சிவாத் பரதரம் நாஸ்தி" என்று ஓலையில் எழுதி அதில் எல்லா வித்வான்களையும் நிர்ப்பந்தம் பண்ணியும் வேண்டுவன தந்தும் பயமுறுத்தியும் கையொப்பமிடச் செய்து நல்லோர்களை நலிந்து வந்தான். இது கண்ட நாலூரான் என்பவர் அரசனக்கு விஷ்ணுவே பரன் என்று உணர்த்த எண்ணி அரசனின் ஆணவத்தின் விளைவைச் சிறிதும் உணராமல் அவ்வரசனிடம் இவர்கள் கையெழுத்திட்டதால் என் பயன் ? "இராமாநுசர் இட்டால் அன்றோ சம்மதமாகும்" என்று கூறினார் உடனே அரசன் இராமாநுசரை அழைத்து வரும்படி ஆள் அனுப்பினான். அப்பொழுது பாஷ்யகாரர் நீராடிக் கொண்டிருந்தார். ராஜ மனுஷ்யன் வந்ததையறிந்து கூரத்தாழ்வான் எம்பெருமானாருக்கு ஏதும் தீங்கு நேரக் கூடாது என்று எம்பெருமானாரின் காஷாய திரி தண்டங்களைத் தரித்து கொண்டு அம்மனுஷ்யருடனே புறப்பட்டார். இதையுணர்ந்த பெரியநம்பிகளும் ஆழ்வானுக்கென் வருமோ என்று துணையாகத் தம் மகளான அத்துழாயுடன் புறப்பட்டார்.

உடையவர் நீராட்டம் முடிந்ததும் காஷாயம் முதலியவற்றைத் தருமாறு கேட்டார். அங்கிருந்தவர்கள் ராஜ மனுஷ்யன் வந்ததும், அதன்பின் நடந்தவற்றையெல்லாம் விவரமாக ஸ்வாமிக்கு கூறினர். அப்படியா! என்று ஆழ்வானுடைய வெள்ளை வஸ்த்ரத்தை உடுத்துக் கொண்டார். உடனே ஆழ்வானுக்கும் பெரிய நம்பிகளுக்கும்

என்ன நேரிடுமோ? என்று வேதனைப்பட்டார். பெரியோர்களும் முதலியாண்டான் முதலானோரும் "ஸ்வாமி! தேவரீர் இங்கிருக்க வொண்ணுது; விரைவாக இத் தேசத்தை விட்டு செல்ல வேண்டும்" என்று வற்புறுத்தினார். எம்பெருமானாரும் முதலியாண்டான் முதலானவர்களுடன் ஸ்ரீரங்கத்தை விட்டு மேல்திசை நாட்டுக்கு எழுந்தருளினார். பின்பு அங்கிருந்து மேற்கு திசை நோக்கி எம்பெருமானார் பயணப்பட்டார்.

மேற்கு திசையில் தொண்டனூருக்கு சென்றார். அங்கு தம் சீடரான தொண்டனூர் நம்பியை அபிமானிக்க ஸ்வாமி தம் பரிவாரத்துடன் எழுந்தருளினார். ஆசார்யரைக் கண்டதும் நிதி கண்டவர் போலத் தொழுது ஆசி பெற்று அவர்களை அமுது செய்தருளும் படி செய்தார். ஸ்வாமி அங்கு சில காலம் எழுந்தருளியிருந்தார்.

அந்நாட்டை மைசூரை ஆண்டு வந்த அரசன் ஹொய்ஸளவமிசத்து அரசன், பிட்டி தேவன் எனப்பட்டவன் ஆட்சி செய்து வந்தான். அவன் சமண மதத்தைச் சார்ந்திருந்தவன். சமணர்களை ஆதரித்து வந்தவன். அவ் அரசனுடைய பெண்ணை பிசாசு பிடித்திருந்தது. அப்பெண் நிர்வாணமாகத் திரியும் நிலை கண்டு அந்த ராஜ பத்னி மிகவும் வருந்தியிருந்தாள். அவ்வரசனுக்குக் குருவாக விளங்குமவர் முதற் கொண்டுயாராலும் அதை ஓட்ட முடியவில்லை.

தொண்டனூர் நம்பி பிக்ஷைக்காக அரண்மனை சென்ற போது அரசியின் அவலநிலை அறிந்து, தம் ஆசார்யரால் அது தீரும் என்றார். அரசன் தன் பெண்ணின் பிசாசைப் போக்கி விட்டால் அவரையே ஆசார்யராகக் கொள்வேன் என்று கூறி எம்பெருமானாரைத் தம் அரண்மனைக்கு வரும்படி ஆள் அனுப்பினான். அரண்மனை செல்ல விரும்பாத எம்பெரு மானாரை தொண்டனூர் நம்பி முதலானோர் அரசனைச் சீடனாக்கி கொண்டால் நமக்குப் பல காரியங்களை சாதித்து

கொள்ளலாம் என்று கூறி எம்பெருமானாரை இசைய வைத்து அரண்மனைக்கு அழைத்து சென்றனர். ஸ்வாமியுடன் சென்றவர்கள் ஸ்வாமியின் ஸ்ரீபாத தீர்த்தத்தை அப் பெண்ணுக்கு கொடுத்து, தலை மீதும் தெளித்தனர்.

உடனே அப்பெண் அப்பிசாசினால் விடுபட்டுத் தன் நிலையடைந்து ஸ்வாமிக்கு தண்டனிட்டாள். அரசனும் அரசியும் ஸ்வாமியிடம் அடிபணிந்து அவருக்கு சீடர்களா யினர். அவ்வரசனுக்கு விஷ்ணு வர்த்தநாராயணனென்று பெயர் வழங்கினார். பிறகு பல ஜைனர்கள் அரசன் வைணவனானமையை அறிந்து இராமனுசரிடம் வாதிட வந்தனர். வந்தவர்கள் ஆயிரக்கணக்கானவர்களாதலால் ஓரிடத்தில் திரையிட்டுத் தம் சுய உருவான ஆதி சேஷனாகி ஆயிர நாவால் அவரவர்களுக்குப் பதில் வாதம் செய்து, அத்தனை பேரையும் வென்று அவர்களை யெல்லாம் தண்டனைக் குள்ளாக்கினார். விஷ்ணு வர்த்தனன் பல விஷ்ணு ஆலயங் களைக் கட்டுவித்தான். தொண்டனூரில் ஒரு பெரிய ஏரியை வெட்டுவித்து அதற்கு திருமலஸாகரம் எனப் பெயரிட்டான். அவ்வூரில் யாத்திரையாக ஸ்ரீவைஷ்ணவர் களுக்குச் சாப்பாடு வசதியும், தங்கும் வசதியும் செய்து கொடுத்தான்.

இச்சமயம் தம்மிடமிருந்த திருமண் தீர்ந்து போயிற்று. சுமங்கலிக்கு நெற்றியில் திலகம் போல ஸ்ரீவைஷ்ண வனுக்குத் திருமண் அவசியம்.அதனால் திருமண் கிடைக்கும் இடம் தெரியாது, மனம் வருந்தி கண் வளர்ந்தருளினார். "திரு நாராயணப் பெருமாள்" அவர் கனவில் "பக்கத்திலுள்ள யதுகிரியில் நிறைய திருமண் கிடைக்கிறது. நாமும் உம் வரவை எதிர்பார்த்துக் கொண்டி ருக்கிறோம். உடனே வாரீர்" என்று கூறினார். அதன்படி விடிந்தவாறே அக்கனவைக் கூறினார். எல்லோரும் மகிழ்ந்து யதுகிரியின் மேல் ஏறி வேத புஷ்கரிணியைக் கண்டு அதில் நீராடி, அதன் கரையிலுள்ள, முன் தத்தாத்ரேயர் ஸந்நியாஸம் மேற்கொண்ட "பரிதான

சிலை'' என்ற இடத்தில் காவி வஸ்த்ரங்களை, சாஸ்த்ரோக்த வழியில் தரித்துக் கொண்டார்.

பிறகு திருநாராயணனைத் தேடினார் அகப்படவில்லை. "நாம் என்ன அபசாரம் பண்ணினோமோ பெருமாள் நேரில் காட்சி தரவில்லையே'' என வருந்தி கண் அயர்ந்தார். பெருமாள் நேரில் காண்பது போலே கனவில் தோன்றி "திருத்துழாய் கொழுந்து சிந்தியிருக்கும் அடையாளத்தைக் குறியாகக் கொண்டு வாரும்; அங்கே கல்யாண தீர்த்தத் துக்குத் தென்மேற்கில் ஒரு திருத்துழாய் செடியின் கீழே புற்றுக்குள் இருக்கிறோம்; காண்பீராக! மேலும் கருடனால் மேற்கில் ஒரு திருத்துழாய் செடியின் கீழே (பெரிய திருவடி கொணர்ந்து குறையாது சேமித்து வைத்திருக்கும் திரு மண்ணையும் கொண்டு பன்னிரு திருமண்களையும் தரிப்பீராக'' எனக் கூறி மறைய, ஸ்வாமியும் ஆச்சர்யமடைந்து எழுந்து அதன் படியே சென்று அத்திருத்துழாய்ச் செடியைக் கண்டார்.வேர் மண்ணைக் கீறியெடுத்தார். திருநாராயணன் அப்புற்றிலிருப்பதைக் கண்டு ஆநந்த பரவசராய் ஆடிப் பாடினார். எல்லோரையும் காண செய்தார். கல்யாணி தீர்த்தத்தின் மேற்கு திசையில் திருமண் கண்டு பேரானந்தங் கொண்டு திருமண் சாத்திப் பெருமிதம் அடைந்தார். இது பகுதான்ய தை மாதம் சுக்ல சதுர்த்தி புனர்வஸு நக்ஷத்திரத்தன்று நிகழ்ந்தது. அப் பெருமாளை மேலே எழுந்தருளச் செய்து ஸ்வாமி தம் திருக்கரங்களாலேயே பாலால் திருமஞ்சனம் செய்தருளி மூன்று நாட்கள் திருவாராதன்ம் செய்தருளினார். பிறகு அவ் விஷ்ணுவர்தன ராஜாவைக் கொண்டு மலைமேல் நாடாக்கிப் பெருமாளுக்குப் பெரிய கோயில் செய்து, நல்ல நாளில் பாஞ்சராத்திர ஆகம விதிப்படி தேவதேவனின் பிரதிஷ்டை நடை பெற்றது. திருநாரணர் கோயில் கொண்டார். ப்ரகார கோபுரங்கள் எல்லாம் அழகுறக் கட்டி முடிக்கப்பட்டன. ஊர் ஏற்பட்டது. திரு வீதிகள் உண்டாயின. தேவ தேவனுக்குத் நித்யப்படி

திருவாராதனை நடைபெறும் படி செய்தார். அந்நகரத்துக்கு திருநாராயணபுரம் எனப் பேரிட்டார்.

பிறகு எம்பெருமானார் பெருமாளுக்கு ப்ரஹ்மோத்ஸவம் செய்யக் கருதினார் அதற்கு உத்ஸவ மூர்த்தி வேண்டுமே என்று கலங்கிய போது அத்திருநாராயணன் முன்போல கனவில் வந்து ராமப்ரியர் என்ற உத்ஸவ மூர்த்தி தில்லியில் பாதுஷாவிடமிருக்கிறதாகக் கூறினான். எம்பெருமானாரும் தம் சீடர் சிலருடன் டில்லி சென்றார்.டில்லி அரசன் ஸ்வாமியின் திவ்ய தேஜஸ்ஸால் கவரப்பட்டு அவரை எதிர் கொண்டு வரவேற்று வரவுக்குக் காரணம் கேட்டறிந்தான். பின் நாடெங்குமுள்ள சிலைகளைக்கொள்ளை கொண்டு வந்து அடைத்து வைத்திருக்கும் அறைகளைத் திறந்து காட்டித் தங்கள் பெருமாளை எடுத்துக் கொள்ளச் சொன்னான். இராமானுசருக்குக் காட்சி தந்த பெருமாள் அங்கு காணவில்லை. பிறகு எம்பெருமான் பாதுஷாவின் பெண்ணின் அறையிலே இருப்பதை கூறினார். விடிந்ததும் எம்பெருமானார் இவ்விவரத்தை அரசனிடம் தெரிவிக்க அவனும் ஆச்சரியப்பட்டு அவ்வறைக்கு சென்று பார்த்தான். அரசன்,தன்னுடைய பெண்ணின் கையில் இருக்கும் ராமப்ரியரைக் கண்டான். உடனே இராமானுசரிடம் உங்கள் பெருமாள் என்றால் கூப்பிடுங்கள் வரட்டும் என்றான். உடனே ராமானுஜர் "கோவில் பிள்ளாய் இங்கே போதராயே" என்று அழைக்கவும் அப்பெருமாள் காலில் சலங்கை ஒலிக்க அர்ச்சா நிலையிலும் குதித்துக் குதித்து வந்து எம்பெருமானாரின் மடியின் மீது அமர்ந்து கொண்டான். ஸ்வாமிக்கு ஆநந்தக் கண்ணீர் சொரிந்தது. "என்னுடைய ஸம்பத் குமாரனே!" என்று அணைத்துக் கொண்டார். அரசனும் பெரு வியப்புடன் விடை கொடுத்து அப்பெருமாளோடு ஸ்வாமியை அனுப்பி வைத்தான்.

பிறகு பெருமாளைத் திரு நாராயணபுரத்தில் தக்கவாறு பிரதிஷ்டை செய்து ஆராதனைக்குத் தக்கவாறு ஐம்பத்

திருவரை அங்குக் குடியேற்றி அவரவர்களுக்குத் தக்க காரியங்களை நியமித்து "நித்ய, பக்ஷ, ஸம்வத்ஸர," உத்ஸவங்களை நடத்திக் கொண்டு பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்திருந்தார். அந்த மலைக்கு "திருநாராயணபுரம்" எனப் பெயரிட்டு அங்கு குடியிருப்பார், பெரியோர்களுக்கும் தமக்கு முண்டான பரமபதத்தையும் இங்கு ஆச்சார்ய கைங்கர்யத் தையும் பெற்று இன்புறுவர் என்று அநுக்கிரஹித்தார்.

எம்பெருமானார் ஸ்ரீரங்கம் விரோதியற்றிருப்பதால் உடனே புறப்பட நினைத்து அதை கேட்ட அனைவரும், இடி விழுந்தது போல ஸ்தம்பித்துப் பின் பிரிவிற்கு ஆற்றாது ஸ்வாமி திருடிகளில் விழுந்து அழுதனர். இந்நிலை கண்ட எம்பெருமானார் இவர்களுக்கு நாம் என் செய்வோம் எனச் சிந்தித்துப் பின் சிற்பியைக் கொண்டு தம்மைப் போல் பிம்பத்தை உண்டாக்கி அதைத் தாம் தழுவித் தக்கவாறு ப்ரதிஷ்டை செய்வித்தார். பின் அங்குள்ளாரின் விருப்பங் களை அத் திருமேனியிலே கேட்டு உத்தரவு பெற்றுத் தெளியும் படி செய்து "எம்பெருமானாரின் உண்மையான ப்ரதிபிம்பமே" எனக் காட்டி, அவர்களையெல்லாம் திரு நாராயணனையும் செல்வப் பிள்ளையையும் பிரியாது கைங்கர்யங்களைச் செவ்வனே செய்து வரும்படி நியமித்து அவர்களை அங்கேயே இருக்கச் செய்து மற்று முண்டான அடியார்களுடன் ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளினார்.

**திருநாராயணர் கண்டருளும் உத்ஸவங்கள் :**

ஸ்ரீ பாஷ்யகாரர் திருநக்ஷத்திரம், பூரட்டாதி நக்ஷத்திரத் தில் தொடங்கப்பட்டுச் சித்திரை மாதம் திருவாதிரை நட்சத்திரம் வரை பத்து நாட்கள் நடைபெறும். "வஸந்தோத் ஸவம்" "பெரிய ஊஞ்சல் உற்சவம் " "திருபவித் ரோத்ஸவம்" " அஷ்ட தீர்த்த உத்ஸவம் " " ராஜமுடி உத்ஸவம்", அத்யயன உத்ஸவம் மார்கழியில் நடைபெறும்.

பங்குனி மாஸம் பூச நட்சத்திரத்தில் செல்வப்பிள்ளை வைரமுடி சாற்றிக் கொண்டு உத்ஸவம் கண்டருள்வார். இதனைச் சேவிக்க தென்னிந்தியாவின் பல ஊர்களிலிருந்தும், ஆயிரக்கணக்கான ஜனங்கள் வருகிறார்கள் இம்முடி அரண்மனையில் இருந்து முத்திரை இட்ட பெட்டியில் காவலுடன் வரும். வழியில் மண்டகப்படி உண்டு. கோயிலில் தான் முத்திரை நீக்கப்படும். உத்ஸவம் முடிந்தவுடன் மறுபடியும் பெட்டி முத்திரையிடப்பட்டு அரண்மனைக்குத் திரும்பி விடும்.

திருநாராயண புரத்தில் ஸ்ரீபத்ரி நாராயணரது நியமனத்தால் சாண்டில்ய ரிஷி தவம் செய்து ஸித்தி பெற்றார். அப் பெருமானால் தென் பத்ரி என்று இது பெயரிடப் பெற்றது. ராஜ உடையார் யதுகிரிக்குக் கோட்டை கட்டினார். அது முதல் "மேல் கோட்டை" யென்று பிரஸித்தி பெற்றது. ஸ்ரீ வேதாந்த தேசிகர் இங்கு சில ஆண்டுகள் தங்கியிருந்தார். திருநாராயாணபுரம் சென்று ஸேவிக்க வேண்டிய புண்ணிய ஸ்தலமாகும். நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய திருவாய்மொழியின் நாலாம் பத்து முதல் திருவாய்மொழி முதற் பாசுரத்தில் கடைசி அடியில் திரு நாரணன் கூறப்பட்டிருக்கிறார்.

**ஒருநாயகமாய் ஓடவுலகுடனாண்டவர் *
கருநாய் கவர்ந்தகாலர் சிதைகிய பானையர் *
பெருநாடுகாண இம்மையிலே பிச்சைதாம்கொள்வர் *
திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ**

- (திருவாய்மொழி 4-1-1)

நம்மாழ்வார் " வீடுமின் முற்றவும்", " சொன்னால் விரோதம்" , " ஒரு நாயகம்", " கொண்ட பெண்டிர் " ஆகிய நான்கு திருவாய்மொழிகளிலும் உலகோர்களுக்கு உபதேசம் செய்கிறார். அவர்கள் நெஞ்சில் பட்டதோ, இல்லையோ, இவை மூன்றும் ஆழ்வார் இதயத்தில் பகவான் மீதுள்ள

அன்பைப் பல்வகையாலும் வளர்த்துப் பெருக்கி விட்டன. மூன்றுகளை பறித்த பயிர் போலே அவர் தம் ப்ரேமத்தை நூற்றுக்கணக்காகக் கிளை கிளைக்கச் செய்தன. உபாயத்தை அருளிச் செய்கிறார். உபாயமாவது திரு நாரணன் தாள் என்கிறார்.

"வீடுமுன் முற்றத்திலும்" பிறர்க்கு உபதேசம் செய்தார். "சொன்னால் விரோதமும்" , இந்த " ஒரு நாயகம் " திருவாய்மொழியும் பிறர்க்கு உபதேசங்களாக அமைந்தன. இவைகளில் ஒன்றுக் கொன்று வாசியாவது மூன்றிலும் எல்லாம் சொல்லி இருந்தாலும், ஒவ்வொன்றுக்கும் ஒரு கருத்து முக்கியமாயிருக்கும். " வீடுமுன் முற்றத்தில்" மற்றைய வற்றில் பற்றறவிட்டு பகவத் விஷயத்தைப் பற்றுங்கள் என்றார். " சொன்னால் விரோதத்தில் " பகவத் விஷயத்துக்கே உரித்தான காரணங்களைக் கொண்டு பிறிதோரைப் பாடாதே பகவானையே பாடுங்கள் என்கிறார். இதில் ஸம்ஸாரிகளானவர்கள் பிறரைப் பாடுவதும், சில ப்ரயோஜனங்களுக்காக என்றும், அவைகள் தான் அற்பங்களாயும், அழிவுடையவைகளாயும், தகாதவைகளு மாயும், குறையுடையனவாயுமன்றோ இருக்கின்றது. அதில் இவ்வுலகச் செல்வங்களோ சுவர்க்கம் முதலான பரலோகச் செல்வங்களோ அற்பங்களாய் அழிவுடையனவாய் தகாதனவாயுள்ளன. ஆத்மாவின் இயல்பை எய்துவதான கைவல்யமோ பகவானை அடைவதான பெரும் பயனைக் குறித்து அற்பமாய், அழிவற்றதாய் இருந்ததே ஆகிலும் தன்யதார்த்தமான இயல்புக்குத் தகாததான குறையுண் டென்று இவைகளின் குறைகளைச் சொல்லி பகவானா னாவன் நற்குணக் கடலாய், எல்லாப் பயன்களும் தருபவனாய், தகுதி உடையவனுமாய், இருப்பவனா கையாலே இவனையே பற்றுங்கள் என்று பிறர்க்கு உபதேசம் செய்கிறார். ஸம்ஸாரிகள் தாம் கலங்கினவர்களாய் எங்களுக்கு நல்வார்த்தைகளைச் சொல்லுங்கள் என்று

கேட்கச் சொல்லுகிறாரன்றே. சீதாபிராட்டியும், ஸ்ரீவிபீஷணாழ் வானும், ராவணனுக்கு உபதேசித்தாற் போன்றே இவர் இரக்கமே காரணமாக உபதேசிக்கிறார்.

ஐச்வர்யத்தின் நிலையில்லாமையையும், ஆத்மாநுபவத்தின் தன்மையையும், பகவதநுபவமே பரம புருஷார்த்தமென்பதையும் பரோபதேசஞ்செய்கிறார். " ஒரு நாயகம் " பதிகத்தில்.

பூமிப் பரப்படங்க தான் மட்டுமே தனித்து அரசனாக வீற்றிருந்து சகல வித அதிகாரங்களுடன் உலகத்தை எல்லாம் ஆளும் சக்ரவர்த்தியாய் இருந்தாலும், போரில் தோற்று அரசை இழக்க நேரிட்டால் உயிர் வாழ்வதற்குப் பிச்சை எடுத்தே பிழைக்க வேண்டி இருக்கும்.இத்தகைய சக்ரவர்த்திகள் அரசாட்சியை இழந்த பிறகு, இரவில் பிச்சை எடுக்கக் கையில் பானையுடன் செல்கையில் கருத்த நாய் கவ்வவும், பானை உடைந்து சிதையவும் (உணவின்றி) வருந்துவர். முன்பெல்லாம் அரசர்களுக்கு ராஜ்யம் வழங்கிய இந்தச் சக்ரவர்த்திகள் தற்போது பிச்சை ஏற்கும் படியான இழிந்த நிலை ஏற்பட்டு விட்டது. ஆகவே அரசாட்சியின் நிலையாத தன்மையை உணர்ந்தால் நீங்கள் அவற்றைப் புறக்கணித்து விட்டு நித்ய ஸ்ரீமாந் ஆகிய நாராயணன் திருவடிகளைப் பற்றி உய்வு பெறுவதற்கு முந்துங்கள் ; இதில் காலம் கடத்துவதைத் தவிர்ந்து எம்பெருமான் திருவடியைப் பணிந்து பற்றுங்கோள். இதனால் செல்வத்தின் நிலையாமையை கூறுகிறார். " ஒரு நாயகத்தில்,

**பணிமின் திருவருளென்னும் அம்சீதப்பைம்பூம்பள்ளி***
**அணிமென்குழலார் இன்பக்கலவியமுதுண்டார் ***
**துணி முன்பு நாலப் பல் ஏழையர் தாம்இழிப்பச்செல்வர்***
**மணி மின்னு மேனி நம்மாயவன்பேர் சொல்லி வாழ்மினோ**
**(திருவாய்மொழி 4-1-5)**

**சக்ரவர்த்திகளாக வாழ்ந்தவர்களும் அழகிய மென்மையான கூந்தலையுடைய பெண்களுக்கு அடிமைப்பட்டவர்களே ஆனார்கள். அவர்கள் குளிர்ச்சி பொருந்திய படுக்கை**

யிலே பெண்களோடு சேர்ந்திருந்த பொழுது அவர்களுக்குத் தாழ நின்று "திருவருள் புரிய வேண்டும்" என்று பல்லிளிக்க வேண்டினார்கள். இவ்வாறு இன்பமாகிய அமுதம் உண்ட அச்சக்ரவர்த்திகளே பின்னொருகால் யாவற்றையும் இழந்து நிலைகெட்டுத் துணி முன்னே தொங்கவும், பெண்கள் பலரும் இழித்து கூறவும் செல்லு வார்கள். (இத்தகைய நிலை கெட்ட வாழ்வை நம்பாதீர்) ஆதலால் நீலமணி போலச் சுடர் விடும் திருமேனியுடைய பிரசித்தி பெற்ற நம் எம்பெருமானுடைய திரு நாமத்தை வாயாலே சொல்லி வாழுங்கள் என்கிறார் ஆழ்வார்.

**குறுக மிக உணர்வத்தொடு நோக்கி எல்லாம் விட்ட***
**இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும் அப்பயன் இல்லையேல்***
**சிறுக நினைவது ஓர் பாசம் உண்டாம் பின்னும் வீடில்லை***
**மறுகலில் ஈசனைப் பற்றி விடா விடில் வீடு அஃதே**
(திருவாய்மொழி 4-1-10)

தவம் செய்ய விழைபவர்கள் பழைய இந்தப் பூமியின் மீதுள்ள பற்றை விட்டு விடுவார்கள். பல்வேறு ஆபரணங்கள் மீதுள்ள ஆசையையும் நீக்கித் தம் ஐந்து இந்த்ரியங்களையும் வென்று தவம் செய்வார்கள். அவர்கள் உடம்பெல்லாம் தூறு மண்டும். இவ்வாறு கடுந்தவம் மேற்கொள்பவர்கள் எம்பெருமானைப் பற்றாவிட்டால் அவர்களுக்குச் சுவர்க்கம் கிடைக்காது குடிகள் மன்னும் சுவர்க்கத்தை அவர்கள் அடைந்தாலும், எம்பெருமான் திருவருள் இல்லையாயின் அங்கிருந்து இங்கே மீண்டும் வருவார்கள். ஆதலால் கருடக் கொடியுடைய பகவானுடைய கழல்கள் அணியப் பெற்ற திருவடிகளைப் பற்றினால் மீண்டு வருதல் இல்லாத நிலையான வீட்டைப் பெறலாம்.

**கைவல்ய அநுபவம் அடைய விரும்புகிறவன் தன் வசப்பட்ட மனத்தை ஞான வடிவமான ஆத்மாவுடன் ஒன்று படுத்திப் பற்றுக்களை அறவே விட்டு அதன் அநுபத்தில் திளைக்கிறான். இப்படி ஏற்படும் ஆத்மாநுபவத்தை மோக்ஷமாக எண்ணும் ஞானிகளுக்கும், தானே புருஷார்த்**

தமாய் இருக்கும் எம்பெருமானை உபாயமாகப் பற்றாவிடில் கர்மம் போகாதே நிற்கும். பகவானை உபாசனை பண்ணா விட்டால் அந்த ஞானிக்கும் ஆத்மாவை த்யானம் செய்ய முடியாது. பின்னும் மோக்ஷமும் இல்லை. ஆகவே குற்றமற்ற எம்பெருமானை அடைந்து, அகலாது கைங்கர்யம் செய்வதே மோக்ஷம். கீழ்ப் பாசுரத்தில் கூறிய " அண்ணல் கழல்கள் குறுகுமினோ! " என்னும் கைங்கர்யமே புருஷார்த்தம் ஆகும். உலகிற்கு ஒரு நாயகமாய் விளங்கும் திருமாலுக்கு அடிமை செய்கையே இனிதாம் என்பது இத் திருவாய் மொழியின் கருத்து.

எம்பெருமானார் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்த போது தினந்தோறும் ஸ்ரீரங்கத்திலிருந்து யாராவது வருகிறார்களா என்று மலையிலிருக்கும் த்வாரம் வழியாகப் பார்ப்பராம். ஒரு நாள் புஷ்கரிணியில் அநுஷ்டானம் பண்ணிக் கொண்டிருக்கும் போது, சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் வந்து " சோழ தேசத்து ராஜா புழுத்து மாண்டான் " " தேவரீர் திரும்பவும் ஸ்ரீரங்கம் எழுந்தருள வேணும் " என்றார்களாம். எம்பெருமான் தன் உத்தரீயத்தை எறிந்து " கல்யாணம், கல்யாணம் " என்று மகிழ்ந்து " நீர் மாருதியாண்டானோ ?" என்றாராம். (மாருதி-ஹநுமாந்) பெருமானுக்குத் திருவடி தூது சொன்னாற்போலே யன்றோ நீர் வந்து சொன்ன விஷயம் ! என்று மகிழ்ந்து, " ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஶ்ரியம் அநுபத்ரவாம் அநுதினம். ஸம்வர்த்ய " என்று இத்தையே இருமுறை சாற்றுமுறை சேவிக்கும் போதேல்லாம் சேவிக்கும்படி நியமித்தாராம்.

| | | |
|---|---|---|
| **ஸ்ரீமந்** | - | செல்வத்தோடு கூடிய |
| **ஸ்ரீரங்கச்ரியம்** | - | திருவரங்கச் செல்வமானது |
| **அநுபத்ரவாம்** | - | உபத்ரவமின்றிக்கே |
| **அநுதினம்** | - | தினந்தோறும் |
| **ஸம்வர்த்தய** | - | வ்ருத்தியடையட்டும் |

**இந்த ச்லோகம் அவதரித்தது திருநாராயணபுரத்துக்கு மிகுந்த ஏற்றம்.**

• • • • • • • •

## 5. கல்லார் மதின் சூழ் கச்சி

அத்தியூரான் புள்ளையூர்வான் * அணிமணியின்
துத்தி சேர் நாகத்தின் மேல் துயில்வான் * – மூத்தீ
மறையாவான் மாகடல் நஞ்சுண்டான் தனக்கும் *
இறையாவான் எங்கள் பிரான்

(இரண்டாம் திருவந்தாதி - 96)

கருடனாகிய புள்ளை வாகனமாகக் கொண்டு ஊர்பவன். அழகார்ந்த மணிகளுடன் கூடிய நாகமான ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்டு அறிதுயில் செய்பவன் மூன்று வகையான அக்னியாவான். வேதங்களு மாகி நிற்பவன். திருபாற்கடலைக் கடைந்த போது உண்டான ஆலகாலம் என்னும் கொடிய நஞ்சை உண்ட சிவனுக்கும் இறையாவான். அவன் தான் இந்த அத்தியூரான் எங்கள் பிரானும் அவன் தான் என்று பூதத்தாழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பட்டது. இத்தலம் காஞ்சிபுரத்திலேயே உள்ளது. காஞ்சி என்றதும் நமக்கு நினைவுக்கு வரக் கூடியது பிரம்மாண்டமான இந்த வரதராஜன் சன்னிதியேயாகும். இத்தலம் சின்னக் காஞ்சிபுரத்தில் உள்ளது.

இத்தலம் பற்றி பாத்ம புராணத்தில் ஏழு அத்தியாயங் களிலும்,கூர்ம புராணத்தின் 52,57 ச்லோகங்களிலும் பேசப் பட்டுள்ளது. தமிழ் இலக்கியங்களிலும் இத்தலம் பற்றி குறிப்புகள் கிடைக்கின்றன. தேவாதி தேவர்கள் அனைவருக் கும் கேட்கும் வரமெல்லாம் கொடுத்ததால், எம்பெருமானுக்கு வரதர் என்னும் திருநாமம் உண்டாயிற்று. ஸ்ரீமந்நாராயணன் புண்ணிய கோடி விமானத்துடன் இங்கு எழுந்தருளிய நன்னாள் ஒரு சித்திரை மாதத்து திருவோண தினத்திலாகும். எம்பெருமான் இங்கு நித்யவாசம் செய்து, வேண்டியவர்க்கு வேண்டிய வரமெல்லாம் கொடுக்க வேண்டுமென தேவர்கள் அனைவரும் பிரார்த்திக்க எம்பெருமானும் அதற்கிசைந்தார். உடன் தேவலோகத்தில் உள்ள ஐராவதம் என்ற யானை

வடிவங்கொண்டு எம்பெருமானைத் தாங்கி நின்றது. அதனால் இதற்கு அத்திகிரி என்று பெயர் எற்பட்டது. ஐராவதம் வெள்ளை நிற யானை என்பதால் ஸ்வேதகிரி என்றழைக்கப்பட்டு வேதகிரி என்று மருவியது. 'க' என்றால் பிரமன் என்றும் அஞ்சிரம் என்றால் பூஜிக்கப்படல் என்பதாலும் கஞ்சிரம் என்றாகி, கஞ்சிதபுரியாகி காலப் போக்கில் மருவி காஞ்சிபுரமாயிற்றென்பர்.

இத்தலத்தை க்ருதயுகத்தில் பிரமனும், த்ரேதாயுகத்தில் கஜேந்திரனும், துவாபரயுகத்தில் பிருஹஸ்பதியும், கலியுகத்தில் அனந்தனும் பூஜித்து உய்ந்தனர்.

ஸ்ருங்கி பேரர் என்ற முனிவருக்கு ஹேமன், சுக்லன் என்று இரண்டு புத்திரர்கள் இருந்தனர். இவர்கள் கொங்கண தேசத்தில் கௌதம முனிவரிடம் வித்தை பயின்றனர் இவ்விருவரும் விஷ்ணு பூசைக்கு பழம், புஷ்பம் , தீர்த்தம் கொடுக்கும் கைங்கர்யத்தை மேற் கொண்டிருந்தனர். ஒரு நாள் தீர்த்தத்தை மூடாமல் வைக்க அதில் ஒரு பல்லி விழுந்து விட்டது. அதைக் காணாது அப்படியே கொணர்ந்து குருவிடம் கொடுக்க அதிலிருந்து பல்லி தாவியோடியது.இதைக் கண்டு சினந்த முனிவர் இவ்விருவரையும் பல்லிகளாகும்படி சபித்தார். தமது தவறுணர்ந்த சீடர்கள் மன்னிப்பு வேண்டி பிராயச் சித்தம் கோரினர்.

இந்திரன் வரதனைத் தரிசிக்க இச்சன்னிதியில் நுழைவான். அப்போது உங்கள் சாபம் அகலும் என்று தெரிவிக்க இருவரும் இத்தலத்தின் பிரகாரத்தில் பல்லிகளாக வந்தமர்ந்தனர் பின்பு இந்திரன் இத்தலத்தில் நுழைந்ததும் இவர்களின் சாபமகன்று தங்கள் பூர்வஜென்ம உடம்பைப் பெற்று வரதனைச் சேவித்து முக்தியடைந்தனர். இந்நிகழ்வைக் குறிக்குமாறு தற்போது இத்தலத்தின் பிரகாரத்தில் 24 வது படிக்கெதிரில் தங்கத்தினாலும், வெள்ளியினாலுமான இரண்டு பல்லிகள் செய்து அமைக்கப்பட்டுள்ளன. கடுமையான

நோயினால் பாதிக்கப்பட்டவர்கள் இப்பல்லிகளைத் தொட்டு வரதாராஜப் பெருமாளைச் சேவித்தால் நோயினின்று விடுபடுகின்றனர் என்று ஐதீஹம்.

**மூலவர்:** வரதராஜர், பேரருளாளன், தேவாதிராஜன், தேவப்பெருமாள், அத்தியூரான், மேற்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

**தாயார்:** பெருந்தேவித் தாயார். மஹாதேவி. தனிக்கோயில்

**தீர்த்தம் :** வேகவதி நதி, அனந்த ஸரஸ், சேஷ தீர்த்தம், வராஹ தீர்த்தம், பிரம்ம தீர்த்தம்.

**விமானம்** : புண்ய கோடி விமானம்.

**காட்சி கண்டவர்கள் :** பிரம்மா, பிருகு, நாரதர், ஆகியோர், கஜேந்திரன், இந்திரன், சரஸ்வதி.

**சிறப்புகள்** : திருவேங்கடம் போன்றும் திருவரங்கம் போன்றும் எண்ணற்ற பெருஞ்சிறப்புகள் கொண்ட திவ்ய தேசமாகுமிது. காஞ்சியில் உள்ள வைணவத் தலங்கட்குத் தீபம் போலவும், தொண்டை நாட்டுத் தலங்கட்குத் திலகம் போன்றும் திகழ்வதாகுமிது. விஷ்ணு காஞ்சியென்றும், அத்திகிரி யென்றும், திருக்கச்சி என்றும், ஸத்யவ்ரத க்ஷேத்ரமென்றும் பெயர் கொண்ட இத்தலம் வைணவ வல்லுனர்களும், பாகவதோத்தமரான பக்தர்களும், எந்நேரமும் சுற்றிச் சூழ வந்து கொண்டிருக்கும் திவ்யதேச மாகுமிது. இங்குள்ள குளத்தில் மூழ்கியிருக்கும் அத்திவரதர் என்றழைக்கப்படும் அத்திமரத் தாலான சிலையை 40 வருடங்கட்கு ஒரு முறை வெளியே எடுத்து பூஜை செய்து 10 தினங்கட்குப் பொது மக்கள் தரிசனத்திற்கு வைக்கப்படுகிறது.சித்ரா பௌர்ணமியன்று இப்போதும் ஒவ்வொரு ஆண்டும் இரவு 12 மணிக்குமேல் பிரமனே இங்கு நேரில் வந்து எம்பெருமானை வழிபடுவதாக ஐதீஹ்யம். இந்த

தினத்தில் எம்பெருமானுக்குப் பிரசாதம் செய்து வைத்து விட்டு பட்டர் வெளியே வந்து விடுவார்கள். ஒரு நாழிகை (24 நிமிஷம்) கழித்து எடுத்துப் பார்த்தால் அதில் தூய நறுமணம் கமழும் இக்காட்சி ஆண்டு தோறும் இங்கு நடைபெறும் வைபவமாகும்.

சித்திரை மாதம் பௌர்ணமி கழிந்த 15 தினங்கட்கு சூரியன் மறையும் போது சூரியனிடமிருந்து வரக்கூடிய கதிர்கள் மூலவரின் திருமுகத்தில் விழுமாறு அமைக்கப் பட்டுள்ளது. 15 நாட்களும் கண்டு களிக்கக் கூடிய இவ்வரிய காட்சி மற்றெந்த திவ்யதேசத்திலும் இல்லாததாகும்.

திருமங்கையாழ்வாரால் 4 பாசுரங்களாலும் பூதத்தாழ் வாரால் இரண்டு பாசுரங்களாலும், பேயாழ்வாரால் ஒரு பாசுரத்தாலும் மங்களாசாஸனம் செய்யப்பட்டுள்ளது.

108 வைணவத் திருத்தலங்களில் கோயில் என்று திருவரங்கத்தையும், திருமலை என்று திருவேங்கடத்தையும், பெருமாள் கோயில் என்று இத்தலத்தையும், குறிப்பர். இக்கோவிலின் முதல் பிரகாரத்திற்கு ஆளவந்தார் பிரகாரமென்றும், நான்காவது பிரகாரத்திற்கு ஆழ்வார் திருவீதியெனவும், 5வது பிரகாரத்திற்குள் தான் ஸ்ரீ ஆளவந்தார் இராமானுசரை முதன் முதலில் கண்டு "ஆம் முதல்வனிவன்" என்றருளினார்.

நம்மாழ்வார் தமது திருவாய்மொழியில் "அயர்வறு அமரர்கள் அதிபதி" என்றது இப்பெருமாளைத்தான் என்று பெரியோர்கள் பொருள் கூறுவர். இதற்கொப்பவே வேறெங்குமில்லாதவாறு இத்தலத்தில் உள்ள நம்மாழ்வார் "துயரறு சுடர் அடி தொழுதொழு என் மனனே" என்று கூறுவது போல் ஞான முத்திரையின்றி தம் நெஞ்சில் கை வைத்து எழுந்தருளியுள்ளார்.

இங்கு நடைபெறும் வைகாசி விசாகக் கருட ஸேவை மிகப் பிரஸித்தி பெற்றதாகும்.

இங்கு வாழ்ந்ததிருக்கச்சி நம்பிகள் இப்பெருமானுக்கு ஆலவட்ட கைங்கர்யம் செய்தார். அதாவது பெருமாளுக்கு வியர்க்கும் என்று எப்போதும் பெரிய விசிறி கொண்டு விசிறிக் கொண்டேயிருப்பாராம். இந்த திருக்கச்சி நம்பியைக் காஞ்சி பூர்ணர் என்றும் மொழிவர். இவரிடம் இப்பெருமாள் தினந்தோறும் உரையாடுவாராம். இப்பெருமாளுக்குத் தீர்த்த கைங்கர்யம் செய்து கொண்டிருந்த இராமானுசரை ஸ்ரீரங்கத் திற்குத்தந்தருள வேண்டுமென இப்பெருமானிடம் பெரிய நம்பி விண்ணபிக்க திருக்கச்சி நம்பிகள் மூலமாகவே பதில் கூறி இராமானுசரை திருவரங்கத்திற்கு செல்ல வைத்தார். இராமானுசரை திருவரங்கத்திற்கு தந்தருளியது இந்த வரதர் தான்.

திருக்கச்சி நம்பிகள் ஆளவந்தாருடைய சிஷ்யராவர். அவரளித்த திருநாமம் " பேரருளாள தாஸர் " என்பது. இப்பெருமாள் அர்ச்சை நிலையை கடந்து இவரோடு வார்த்தை கொண்டிருந்த சமயம், ஒரு நாள், " அந்திம காலத்தில் மோக்ஷம் விரும்பிய நம்பிக்கு, " நீர் விசிறி வீசினீர்; நான் பேசினேன் இரண்டுக்கும் சரியாயிற்று " என்று கூறினார் பெருமாள். "ஓர் பரம பாகவதரின் அபிமானத்தைப் பெற்றாலே உமக்குப் மோக்ஷம்" என்றும் வரதன் கூறி விட்டார். அதற்குப் பின் மாறு வேஷத்துடன் திருக் கோட்டியூர் நம்பியிடம் மாடு மேய்க்கும் கைங்கர்யம் செய்து " நம் பையல்" என்று அவரால் அபிமானிக்கப்பெற்று, அவ்வபிமானமே காரணமாக வரதனிடம் மோக்ஷம் பெற்றார் திருக்கச்சி நம்பிகள் என்று வரலாறு கூறுகிறது.

**இராமானுசர் :-**

இராமானுசர் காஞ்சி வரதராஜனை வணங்கி அவருக்குச் சாலைக் கிணற்று நீரை அளித்தல் முதலான கைங்கர்யங்களைச் செய்கின்றவராய் இருந்தார். ஒரு சமயம் "நாம் இனிச் செய்யவேண்டியது என்ன? " என்று சிந்தித்தார்.

அக்காஞ்சியிலிருந்தவராய் வர்ணாச்ரம ஆசாரங்களைத் தாமும் அநுஷ்டித்துப் பிறரையும் அனுஷ்டிக்கச் செய்பவராய் வரதனுக்கு அந்தரங்கரான திருவாலவட்ட கைங்கர்யம் செய்கின்ற திருக்கச்சி நம்பியை பார்த்து, "நம்பியே! நான் நெஞ்சில் கொண்டுள்ள அர்த்தங்களைத் தேவப் பெருமாளிடமிருந்து அறிந்து, அவை பெருமாள் உகந்தவையா?" என்பதை எனக்குச் சொல்லுவீர் என்று பிரார்த்தித்தார்.

1. "அஹ மேவ பரம் தத்வம் !"

நானே, (ஸ்ரீமந் நாராயணனே) (உலகிற்கும் உலக காரணிகட்கும் தத்துவமாய் விளங்கும் பரம்பொருள்.

2. " தர்சனம் பேத ஏவச! "

ஜீவாத்மா, பரமாத்மா (ஜீவன் -ஈச்வரன்) இரண்டும் வெவ்வேறானவை.

3."உபாயேஷு ப்ரபத்தி ஸ்யாத்"

பகவானை அடைய, (மோட்சம் அடைய) சரணாகதியே சிறந்த வழி. (சரணுகதியே உபாயம்)

4."அந்தமஸ்மருதி வர்ஜனம்"

அந்திம காலத்தில் பெருமாளை நினைக்க முடியாவிட்டால் தவறில்லை.

5."தேஹஅவஸானே முக்தி ஸ்யாத்"

என்னை உபாயமாக கொண்ட இத்தகைய பக்தர்கட்கு இந்தவுடல் கழிந்தவாறே (இப்பிறவி முடிந்ததும்) மோட்சம் நானே அருளுகிறேன்.

6." பூர்ணுசார்ய ஸமாச்ரய"

நற்குண பண்டிதராய் இருக்கும் மகா புருஷரான பெரிய நம்பியை ஆச்சார்யராக ஏற்றுக் கொள்ளத் தக்கது.

இவ்விதம் திருமங்கையாழ்வாரிடம் திருநறையூரான் ஈடுபாடு கொண்டது போல ஸ்ரீஇராமானுஜரிடம் வரதராஜன் ஈடுபாடு கொண்டு அவருக்கு வழிகாட்டினார்.

ஸ்ரீஇராமானுஜருக்காக சோழ மன்னனிடம் கண்களை யிழந்த கூரத்தாழ்வான் அவர் நியமனப்படியே வரதராஜ ஸ்தவம் அருளிச் செய்து இழந்த தம் கண்களைப் பெற்றது இத்தலத்தில் தான்.

இப்பெருமானைத் திருக்கச்சி நம்பிகள் தேவராஜாஷ்டகம் என்னும் ஸ்தோத்திரத்தாலும், வேதாந்த தேசிகர் வரதராஜ பஞ்சாசத் என்னும் ஸ்தோத்திரத்தாலும், மணவாள மாமுனிகள் தேவராஜ மங்களம் என்னும் ஸ்தோத்திரத்தாலும் ஏத்தியுள்ளனர்.

பாரதம் பாடிய பெருந்தேவனார் சங்க காலப் புலவர் சங்க காலத்திலேயே இத் தலம் சிறப்புற்றிருந்ததை,

தேனோங்கு நீழற் திருவேங்கட மென்னும்
வானோங்கு சோலை மலையென்றும் – தானோங்குத்
தென்னரங்க மென்னுந் திருவத்தியூர் என்றுஞ்
சொன்னார்க்கு உண்டோ துயர்.

நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில்
பொருளாசை மண்ணாசை பூங்குழலார் போகத்
திருளாசை சிந்தித்திராதே – அருளாளன்
கச்சித் திருப்பதியாம் அத்தியூர்க் கண்ணன் தாள்
இச்சித் திருப்பது யாமென்று.

என்கிறார் பிள்ளைபெருமாளையங்கார்.

வைணவத்திற்கு அளவில் அடங்காத் தொண்டு செய்த வைணவப் பெருந்தகை மாமேதை பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமிகள் இங்கிருந்து ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது.

எம்பெருமான் இங்கு புண்ய கோடி விமானத்துடன் எழுந்தருளியதால் இங்கு செய்யப்படும் ஒரு புண்ணியமானது கோடியாக விருத்தியடைகிறது என்பது ஐதீஹ்யம்.

தியாக மண்டபம் எனப்படுவது இத்தலமாகும். தனக்கே திருமஞ்சன தீர்த்தம் கொணரும் கைங்கர்யத்தை மேற் கொண்டிருந்த இராமானுஜரை ஸ்ரீரங்கத்திற்கு ஆளவந் தார்க்கு அடுத்தபடியாக வைணவத் தலைமையேற்க தியாகம் செய்து அனுப்பி வைத்ததால் இத்தலத்திற்கு தியாக மண்டபம் என்றும் பெயருண்டாயிற்று.

யாதவப்பிரகாசருடன் கங்கைக்குச் சென்ற இராமா னுசரை த்ரிவேணி ஸங்கமத்தில் நீராடச் செல்லும் போது தீர்த்துக்கட்ட திட்டம் போட்டிருந்தார் யாதவ பிரகாசர் இச்சதித்திட்டத்தை தன்னுடன் யாத்திரை வந்த தனது சிற்றன்னையின் மகனான கோவிந்தன் மூலம் அறிந்து கொண்ட ராமானுஜர் விந்திய மலைக்காட்டிலேயே தங்கி விட்டார். வழி தவறித் திகைத்து அலைந்த இராமானுசருக்கு இத்திவ்ய தேசத்து பெருமாளும் பிராட்டியுமே, ஒரு வேடுவ வேட்டுவச்சி வேடம் பூண்டு, ஒரே இரவில் இராமானுசரைக் காஞ்சிக் கருகில் இருந்த சாலைக் கிணறு ஓரமாகக் கொணர்ந்து விடுத்து தாக சாந்திக்குத் தண்ணீர் கேட்க இராமானுசர் தீர்த்தம் கொண்டு வந்து கொடுக்க வந்த போது அவ்விருவரும் மறைய சற்றே திரும்பி பார்த்த இராமானுசர், சற்றுத் தூரத்தில் புண்ய கோடி விமானத்தையும், காஞ்சி மாநகர் நோக்கிச் செல்லும் மக்களையும, கண்டு பெரிதும் வியந்து தம் பொருட்டு எம்பெருமான் வேடுவ வடிவங் கொண்டு வந்ததை யெண்ணி கண்ணீர் உகுத்தவராய் வைய மாளிகை அடைந்தார்.

நடந்த வ்ருத்தாந்தங்களைத் தம் தாயாரிடம் கூறி அவரது அறிவுரையின் படி திருக்கச்சி நம்பிகளை ஆச்சாரியனாக எற்று அன்று முதல் சாலைக் கிணற்றிலிருந்து வரதராஜ பெருமாளுக்கு திருமஞ்சனத்திற்குத் தீர்த்தம் கொணர்ந்து கொடுக்கும் கைங்கர்யத்தை மேற்கொண்டார். இன்றளவும் இக்கிணற்றின் தீர்த்தமே கச்சிவரதனுக்கு திருமஞ்சன தீர்த்தமாக எடுத்து வரப்படுகிறது. பெருமாள்

இராமானுசரை மீட்டுக் கொணர்ந்த நாள் இன்றும் உற்சவ தினமாகக் கொண்டாடப்படுகிறது.

இத்தலத்தின் கிழக்கு வாசலுக்கு எதிரில் செல்லும் வீதியில் இராமானுசர் தமது இளமைக் காலத்தைச் செலவிட்ட திருமாளிகை இன்றும் உள்ளது. இதற்கு உடையவர் திருமாளிகை என்று பெயர். தேவப்பெருமாள் இவ்வழியில் எழுந்தருளும் நாட்களில் இங்கு மண்டபப்படி உண்டு. இப்பெருமானை திருமங்கையாழ்வாரும், பூதத்தாழ்வாரும் மங்களாசாஸனம் செய்துள்ளனர்.

**ஆழ்வார் அனுபவித்த அத்தியூர் எம்பெருமான் :-**

**திருமங்கையாழ்வார்**

**பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனைதிரிதந்துண்ணும்*
உண்டியான் சாபம் தீர்த்த ஒருவனூர் * உலக மேத்தும்
கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று
மண்டினார் * உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே?**
- (திருக்குறுந்தாண்டகம் - 19)

ஸர்வேச்வரன் உகந்துறையும் திருப்பதிகளிலே நெஞ்சு மன்னுமவர்களே உய்வர் என்கிறார்.

உளுத்த பொடிகள் உதிருகிற தலையோட்டைக் கையிலே ஏந்திக் கொண்டு அயலார்களது வீடுகளில் திரிந்து இரந்து உண்கிற தவக்கோலம் கொள்ளும் ருத்ரன் அநுபவித்த சாபத்தைத் தீர்த்த ஒப்பற்ற ஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள் திருக்கண்டியூர், திருவரங்கம், திருமெய்யம், திருக்கச்சி, திருப்பேர் திருக்கடன்மல்லை என்று அவன் உகக்கும் திருப்பதிகளில் மண்டியவர்கள் உய்வதல்லது அல்லாதார் உய்ய வழியில்லை என்கிறார் திருமங்கையாழ்வார்.

(பிண்டி-மாவுதுகள்; மண்டை-மண்டையோடு; முண்டியான்-மொட்டையாண்டியான ருத்ரன்,தவக்கோல முள்ளவன்;

உண்டியான் என்றும் பாடமுண்டு). இப்பாசுரத்தில் இரந்து உண்கையே தவக் கோலமாம். "தாபஸ வேஷத்தை யுடைய ருத்ரன் நெடுங்காலம் கையோட்டைக் கொண்டு திரிந்து இரந்துண்டான்" என்பது இங்கு பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்துள்ளார்.

சிறந்தஎன் சிந்தையும் செங்கணரவும்*
நிறைந்த சீர்நீள் கச்சியுள்ளும் * உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமே *
தாம்கடவார் தண்துழாயார்.

(மூன்றாம் திருவந்தாதி 26)

நெஞ்சே ஸம்பந்தத்தை நினைத்து அங்குத்தைக்குத் தகுதியாய்க் கொண்டு ஆச்ரயித்தால் உனக்கு வருவதொரு தப்புண்டோ? என்கிறார் ஆழ்வார்.

குளிர்ந்த திருத்துழாய் மாலையை அணிந்துள்ள எம்பெருமான், ஒரு நாளும் விட்டு நீங்காதவனாய்க் கொண்டு, நித்யவாஸம் பண்ணுமிடங்கள் (எவையென்றால்) அனைத்திலும் சிறந்ததான என்னுடைய நெஞ்சமும், சிவந்த கண்களையுடைய திருவனந்தாழ்வானும், நிறைந்த செல்வத்தையுடைய பெரியகச்சித் திருப்பதியும், திருமலையும், திருவெஃகாவும், திருவேளுக்கைத் திருப்பதியுமாம்.

இப்படிச் சிறந்து தொழுத தம் திருவுள்ளத்தை, நித்ய ஸூரிகளிலும், உகந்தருளின நிலங்களிலுங் காட்டிலும், அவன் விரும்பி நின்ற படியை அருளிச்செய்கிறார். தேவர்களுக்கு மதுவைப் போல் இனியவன் என வேதாந்தங் களில் முழங்கப்படும் ஆராவமுதை எப்பொழுதும் அநுபவிக்கையாலே சிவந்த திருக் கண்களை உடையவனான திருவநந்தாழ்வானிடத்திலும் உகப்புடன் உறைந்தருளினான். இங்கு திருவனந்தாழ்வானைச் சொன்னது நித்யஸூரிகள்

அனைவர்க்கும் உபலக்ஷணம். "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்" - (முதல் திருவ-53) என்று எல்லாக் கைங்கர்யங்களையும் இடைவிடாமல் செய்கின்றவனாகை யாலே அவனையிட்டு நித்யஸூரிகளை உபலக்ஷிக்கிறார் திருப்பதிகள் பலவற்றாலே நிறைந்த செல்வத்தையுடையதாய் இனிமையிலே எல்லையற்று நீண்டிருக்கும் திருக்கச்சியிலும் உகப்புடன் உறைந்தருளினான் பல திவ்யதேசங்கள் நிறைந்திருக்கையாலே ஆழ்வாரைப் போலே பல சேதனர் களைத் திருத்த உறுப்பாகும் என்று மற்ற திவ்யதேசங் களைக் காட்டிலும் கச்சியிலே மிகுந்த உகப்பைச் செய்தருளி னான் என்று கருத்து. ஆக என் சிறந்த சிந்தையையும், அதைப் பெறுவதற்கு உறுப்பாக ஆதிசேஷன் முதலான நித்ய ஸூரிகளையும் கச்சிப்பதியையும் மிகவும் உகந் தருளினான் என்றாராயிற்று.

**கல்லார் மதிள்சூழ் கச்சி நகருள் நச்சிப் பாடகத்துள்***
**எல்லா வுலகும் வணங்கவிருந்த வம்மான்*இலங்கைக்கோன்**
**வல்லாளாகம் வில்லால் முனிந்த வெந்தை* வீபீடணற்கு**
**நல்லானுடைய நாமம் சொல்லில் நமோ நாராயணமே.**

(பெரியதிருமொழி 6-10-1)

வீபீடணனுக்கு நல்லானாகிய இந்த நம்பியின் நாமம் நமோ நாராயணமே. கல்லாலே அமைந்த மதிள்கள் சூழும் காஞ்சி நகரத்தில் உலகோர் யாவரும் விரும்பி வணங்குமாறு திருப்பாடகத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியார்; இலங்கைக்கு; அரசனாகிய இராவணனின் வலிமை மிக்க சரீரத்தை வில்லாலே கோபித்து அழித்த என் ஸ்வாமியாய் ஸ்ரீ விபீஷணாழ்வான் விஷயத்தில் விருப்பம் செய்வதாகிய நன்மையுடைய பெருமானாகிய இவன் திரு நாமம் சொல்லில் நமோ நாராயணமே தன்னை பற்றியவர்களது விரோதியை அழிக்க வல்ல பெருமான் திருநாமம் நமோ நாராயணமே.

## பின்னிணைப்பு

## 108 திவ்யதேசங்களின் அட்டவணை

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் மங்களா சாஸநம் செய்தருளிய திவ்ய தேசங்கள் 108.

| | | |
|---|---|---|
| சோழ நாடு | - | 40 |
| பாண்டிய நாடு | - | 18 |
| மலை நாடு | - | 13 |
| நடு நாடு | - | 2 |
| தொண்டை நாடு | - | 22 |
| வடநாடு | - | 12 |
| திருநாடு | - | 1 |
| | - | 108 |

ஆங்காங்கு கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பெருமாள், தாயார் திருநாமங்களைச் சுலபமாகத் தெரிந்து கொள்வதற்காகத் தொகுத்துக் குறிப்பிடுகிறேன். இவைகளைப் ப்ரதிதினம் ஒரு முறை வாசித்தால் (மனதால் த்யானித்தல்) அத்தனை திவ்யதேச எம்பெருமான்களின் நிர்ஹேதுக கடாக்ஷம் ஸித்திக்கும் என்பது திண்ணம்.



## சோழ நாட்டு திருப்பதிகள்:- 40

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 1. | திருவரங்கம் | ஸ்ரீரங்கநாதன், நம்பெருமாள் | ஸ்ரீரங்கநாச்சியார் |
| 2. | உறையூர் | அழகியமணவாளன் (திருப்பாணாழ்வார் அவதாரம்) | உறையூர் நாச்சியார் |
| 3. | தஞ்சை மாமணிக் கோயில் | நீலமேகப் பெருமாள் | செங்கமலவல்லி |
| 4. | திருவன்பில் | திருவடிவழகிய நம்பி | அழகியவல்லி |
| 5. | திருக்கரம்பனூர் | புருஷோத்தமன் | பூர்வாதேவி |
| 6. | திருவெள்ளறை | புண்டரீகாக்ஷன் | பங்கயச் செல்வி |
| 7. | புள்ளம் பூதங்குடி | வல்விலிராமன் | பொற்றாமரையாள் |
| 8. | திருப்பேர் நகர் | அப்பக்குடத்தான் | கமலவல்லி |
| 9. | திருஆதனூர் | ஆண்டளக் குமையன் | ஸ்ரீரங்கநாயகியார் |
| 10. | திருவழுந்தூர் | ஆமருவியப்பன் | செங்கமலவல்லி |
| 11. | திருச்சிறுபுலியூர் | அருமா கடல் | திருமா மகள் |
| 12. | திருச்சேறை | ஸார நாதன் | ஸாரநாயகி |
| 13. | தலைச் சங்க நாண் மதியம் | நாண்மதியப் பெருமாள் (ஒண்சுடர்ப்பெருமாள்) | செங்கமலவல்லி |
| 14. | திருக்குடந்தை | சார்ங்க பாணிப்பெருமாள்(ஆராவமுதன்) | கோமளவல்லி |

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 15. | திருக்கண்டியூர் | அரன்சாபந்தீர்த்த பெருமாள் | கமலவல்லி |
| 16. | திருவிண்ணகர் | ஒப்பிலியப்பன் | பூமிதேவி நாச்சியார் |
| 17. | திருக்கண்ணபுரம் | சௌரிராஜன் | கண்ணபுரநாயகி |
| 18. | திருவாலி திருநகரி | வயலாலி மணாளன் | அம்ருதகடவல்லி |
| 19. | திருநாகை | சௌந்தர்யராஜன் | சௌந்தர்யவல்லி |
| 20. | திருநறையூர் (நாச்சியார் கோவில்) | நம்பி | நம்பிக்கை நாச்சியார் |
| 21. | நந்திபுர விண்ணகரம் (நாதன் கோவில்) | விண்ணகரப் பெருமாள் ஜகந்நாதன் | செண்பகவல்லி |
| 22. | திரு இந்தளூர் | சுகந்த வனநாதன் | சந்திரசாபவிமோசன வல்லி |
| 23. | திருச்சித்திரகூடம் | கோவிந்தராஜன் | புண்டரீக வல்லி |
| 24. | காழிச் சீராம விண்ணகரம் | தாடாளன் மட்ட விழுங்குழலி | |
| 25. | கூடலூர் | வையங்காத்த பெருமாள் | பத்மாஸனவல்லி |

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 26. | திருக்கண்ணங்குடி | ச்யாமளமேனிப்பெருமாள் | அரவிந்த வல்லி |
| 27. | திருக்கண்ணமங்கை | பக்தவத்ஸலப் பெருமாள் | அபிஷேகவல்லி |
| 28. | கவித்தலம் | கஜேந்திர வரதர் | ரமாமணிவல்லி (பொற்றாமரையாள்) |
| 29. | திருவெள்ளியங்குடி | கோலவில்லி ராமன் | மரகத வல்லி நாச்சியார் |
| 30. | திருமணிமாடக் கோயில் | நாராயணன்,நந்தாவிளக்கு | புண்டரீக வல்லி |
| 31. | திருவைகுந்த விண்ணகரம் | வைகுந்த நாதன் | வைகுந்தவல்லி |
| 32. | திரு அரிமேயவிண்ணகரம் | குடமாடு கூத்தர் | அமிர்தகடவல்லி |
| 33. | திருத்தேவனார்தொகை | தெய்வ நாயகன் (மாதவன்) | கடல் மகள் நாச்சியார் |
| 34. | திருவண் புருடோத்தமம் | புருஷோத்தமன் | புருஷோத்தம நாயகி |
| 35. | திருச்செம்பொன்செய்கோயில் | பேரருளாளர் | அல்லி மாமமலர் நாச்சியார் |
| 36. | திருத் தெற்றியம்பலம் | செங்கண்மால் | செங்கமலவல்லி |
| 37. | திருமணிக்கூடம் | மணிகூடநாயகன் | திருமாமகள் |
| 38. | திருக்காவளம்பாடி | கோபாலக்ருஷ்ணன் | மடவரல்மங்கை |
| 39. | திருவெள்ளக்குளம் | கண்ணன் | பூவார் திருமகள் |
| 40. | திருப்பார்த்தன் பள்ளி | தாமரையாள் கேள்வன் | தாமரைநாயகி |

## பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் - 18

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 41. | திருமாலிருஞ்சோலை | சுந்தரபாஹு அழகர் (மாலலங்காரர்) | சுந்தரவல்லி நாச்சியார் |
| 42. | திருக்கோஷ்டியூர் | ஸௌம்ய நாராயணன் | திருமாமகள் |
| 43. | திருமெய்யம் | ஸத்யகிரிநாதன் | உய்யவந்தாள் |
| 44. | திருப்புல்லாணி (தர்ப்ப சயநம்) | கல்யாண ஜகந்நாதன் | கல்யாணவல்லி |
| 45. | திருத்தண்கால் | அப்பன் (தண்காலப்பன்) | அன்னநாயகி |
| 46. | திருமோகூர் | காள மேகப் பெருமாள் | திருமோகூர்வல்லி |
| 47. | திருக்கூடல் தென்மதுரை ) | கூடலழகர் | மரகதவல்லி |
| 48. | ஸ்ரீவில்லிபுத்தூர் | வடபத்ரசயநர் (ரங்கமன்னார்) | ஆண்டாள், கோதை |
| 49. | திருக்குருகூர் | ஆதிநாதன், பொலிந்து நின்ற பிரான் (ஸ்ரீநம்மாழ்வார் அவதாரம்) | ஆதிநாதவல்லி |
| 50. | தொலைவில்லிமங்கலம் | தேவபிரான் (அரவிந்த லோசனன்) | கருந்தடங்கண்ணி |
| 51. | ஸ்ரீவரமங்கை (வானமாமலை) | தெய்வநாயகன் தோதாத்ரி | ஸ்ரீவரமங்கை |
| 52. | திருப்புளிங்குடி | காய்சின வேந்தன் | மலர்மகள் நாச்சியார் |

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 53. | திருப்பேரை | மகரநெடுங்குழைக்காதர் | குழைக் காதுவல்லி |
| 54. | ஸ்ரீவைகுந்தம் | கள்ளபிரான், வைகுந்த நாதன் | வைகுந்த வல்லி |
| 55. | வரகுண மங்கை | விஜயாஸனர் | வரகுணவல்லி |
| 56. | திருக்குளந்தை(பெருங்குளம்) | மாயக்கூத்தன் | குளந்தைவல்லி |
| 57. | திருக்குறுங்குடி | வைஷ்ணவ நம்பி, மலைமேல் நம்பி நின்ற நம்பி, இருந்த நம்பி, கிடந்த நம்பி, திருப்பாற்கடல் நம்பி | குறுங்குடி வல்லி |
| 58. | திருக்கோளூர் | வைத்தமாநிதி (மதுரகவிகள் அவதாரம்) | கோளூர் வல்லி |

## மலை நாட்டுத் திருப்பதிகள் - 13

| | | | |
|---|---|---|---|
| 59. | திருவனந்தபுரம் | அனந்த பத்ம நாபன் | ஸ்ரீஹரிலக்ஷ்மி |
| 60. | திருவண்பரிசாரம் | திருக்குறளப்பன், திருவாழ்மார்பன் | கமலவல்லி |
| 61. | திருக் காட்கரை | அப்பன் | பெருஞ்செல்வநாயகி |
| 62. | திருமூழிக்களம் | திருமூழிக்களத்தான் | மதுரவேணி |
| 63. | திருப்புலியூர் (குட்டநாடு) | மாயப்பிரான் | பொற்கொடி |

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 64. | திருச்செங்குன்றூர் | இமையவரப்பன் | செங்கமலவல்லி |
| 65. | திருநாவாய் | நாராயணன் | மலர் மங்கை நாச்சியார் |
| 66. | திருவல்லவாழ் | கோலப்பிரான் | செல்வத்திருக்கொழுந்து |
| 67. | திருவண்வண்டூர் | பாம்பணையப்பன் | கமலவல்லி |
| 68. | திருவாட்டாறு | ஆதிகேசவன் | மரகதவல்லி |
| 69. | திருவித்துவக்கோடு | உய்ய வந்த பெருமாள் | வித்துவக் கோட்டுவல்லி |
| 70. | திருக்கடித்தானம் | அற்புத நாராயணன் | கற்பக வல்லி |
| 71. | திருவாறன் விளை | திருக்குறளப்பன் | பத்மாஸன நாச்சியார் |

## நடு நாட்டுத் திருப்பதிகள் – 2

| | | | |
|---|---|---|---|
| 72. | திருவயிந்திரபுரம் | தெய்வநாயகப் பெருமாள் | வைகுண்ட நாயகி |
| 73. | திருகோவலூர் | திருவிக்ரமன், ஆயனார் | பூங்கோவல் நாச்சியார் |

## தொண்டை நாட்டுத் திருப்பதிகள் – 22

| | | | |
|---|---|---|---|
| 74. | திருக்கச்சி அத்தகிரி | வரதராஜப் பெருமாள் | பெருந்தேவி |

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 75. | திருஅட்டபுயகரம் | ஆதிகேசவன் (அஷ்டபுஜநரஸிம்மன்) | புஷ்பவல்லி (அலர்மேல்மங்கை) |
| 76. | திருத்தண்கா | விளக்கொளி (தீபப்பிரகாசர்) (வேதாந்தசாரியர் அவதாரம்) | |
| 77. | வேளுக்கை | அழகிய சிங்கர் | வேளுக்கைவல்லி |
| 78. | பாடகம் | பாண்டவதூதர் | ருக்மணி,ஸத்யபாமை |
| 79. | திருநீரகம் | ஜகதீசப் பெருமாள் | நிலமங்கைவல்லி |
| 80. | நிலாத்திங்கள் துண்டம் | நிலாத்திங்கள்துண்டத்தான் | நேரொருவரில்லாவல்லி |
| 81. | திருவூரகம் (உலகளந்த பெருமாள் கோயில்) | உலகளந்த பெருமாள் | அமுதவல்லி |
| 82. | திருவெஃகா | யதோக்தகாரி (பொய்கை ஆழ்வார் அவதார ஸ்தலம்) | கோமளவல்லி |
| 83. | திருக்காரகம் | கருணாகரப் பெருமாள் | பத்மாமணி |
| 84. | திருக்கார்வானம் | கள்வர் | கமலவல்லி |
| 85. | திருக்கள்வனூர் | ஆதிவராகப் பெருமாள் | அஞ்சிலை நாச்சியார் |
| 86. | திருப்பவள வண்ணம் | பவள வண்ணப் பெருமாள் | பவளவல்லி |

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 87. | பரமேச்சுர விண்ணகரம் (வைகுண்ட பெருமாள் சந்நிதி) | பரமபத நாதன் | வைகுந்தவல்லி |
| 88. | திருப்புட்குழி | விஜயராகவப்பெருமாள் | மரகதவல்லி |
| 89. | திருநின்றவூர் | பக்தவத்ஸலன் பக்தராவி | என்னைப் பெற்ற தாயார் |
| 90. | திருவெவ்வுள | வீர ராகவப் பெருமாள் | கனகவல்லி |
| 91. | திருநீர்மலை | நீலமுகில் வண்ணன் | அணிமாமலர் மங்கை |
| 92. | திருவிடவெந்தை | நித்ய கல்யாணர் | கோமளவல்லி |
| 93. | திருக்கடல்மல்லை (மஹாபலிபுரம்) | தலசயனத்துறைவார் (பூதத்தாழ்வார் அவதாரம்) | நிலமங்கை நாச்சியார் |
| 94. | திருவல்லிக்கேணி | 1.வேங்கட க்ருஷ்ணன்(பார்த்தஸாரதி) (அநிருத்தன், ப்ரத்யும்னன் பலராமன் ஸாத்யகி.<br>2.மந்நாதன், ரங்கநாதன் (என்னையாளுடைய அப்பன்)<br>3.அழகிய சிங்கர் (தெள்ளிய சிங்கர்)<br>4.சக்ரவர்த்தித் திருமகன் | ருக்மிணிப் பிராட்டி |

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| | | (ஸ்ரீராமன், இளையபெருமாள்,பரதன் சத்ருக்னன்,மைதிலி) 5.தேவப் பெருமாள் | |
| 95. | திருக்கடிகை (சோள சிங்கபுரம்) | யோகந்ருஸிம்ஹர் | அமிர்தவல்லி |

வட நாட்டுத் திருப்பதிகள் - 12

| | | | |
|---|---|---|---|
| 96. | திருவேங்கடம் (திருமலை, திருப்பதி) | திருவேங்கடத்தான் | அலர்மேல் மங்கை |
| 97. | சிங்கவேள் குன்றம் (அஹோபிலம்) | நரசிம்ஹன் | லக்ஷ்மி நாச்சியார் |
| 98. | திருவயோத்தி | ரகுநாதன் (சக்ரவர்த்தி திருமகன்) | ஸீதா பிராட்டி |
| 99. | நைமிசாரண்யம் | தேவராஜன் | ஸ்ரீஹரி லக்ஷ்மி (புண்டரீகவல்லி) |
| 100. | சாளக்கிராமம் | ஸ்ரீமூர்த்திப் பெருமாள் | ஸ்ரீ தேவி நாச்சியார் |

| எண் | திவ்யதேசம் | பெருமாள் திரு நாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 101. | வதரியாச்சிரமம் | பதரி நாராயணன் | அரவிந்தவல்லி |
| 102. | திருக்கண்டங்கடி நகர் (தேவப் ப்ரயாகை) | நீலமேகப் பெருமாள் (புருஷோத்தமன்) | புண்டரீகவல்லி |
| 103. | திருப்பிரிதி | பரமபுருஷன் | பரிமளவல்லி நாச்சியார் |
| 104. | துவாரகை | கய்ாண நாராயணன் | கல்யாண நாச்சியார், அஷ்டமகிஷிகள் |
| 105. | வடமதுரை (கோவர்த்நம்) | கோவர்த்த நேசன் | சத்திய பாமை |
| 106. | திருவாய்பாடி (கோகுலம்) | நவமோஹன க்ருஷ்ணன் | ருக்மிணிப் பிராட்டி |
| 107. | திருப்பாற்கடல் | க்ஷீராப்திநாதன் | கடல்மகள் நாச்சியார் |

திரு நாடு - 1

| | | | |
|---|---|---|---|
| 108. | பரமபதம் | பரமபத நாதன் | பெரியபிராட்டியார் |

# 6.முடிவுரை

வைணவ சமயத்தின் கொடுமுடியாகத் திகழ்வது சரணாகதி தத்துவம்.இதனைப் பிரபத்தி எனவும் வழங்குவர் பிரபத்தியாவது பகவானை உபாயமாகப் பற்றுதல்.

**சரணம் ஆகும் தன தாள் அடைந்தார்க்கு எல்லாம்**
**மரணம் ஆனால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்**

(திருவாய் 9-10-5)

என்பது நம்மாழ்வார் திருவாக்கு. இறைவனிடம் சரண் புகுந்து விட்டாலும், (இரயில் நிலையத்தில் வண்டி வரும் வரையில் காத்திருக்குமாப்போலே) மரணம் ஏற்படும் வரையில் அதாவது பிராரப்த கர்மம்முடியும் வரை காத்திருக்க வேண்டியது தான். பிராரப்தத்தை அனுபவித்தே கழிக்க வேண்டும். இறைவன் சஞ்சித கர்மத்தை "தீயினில் தூசாகும் படி" செய்து விடுகின்றான் என்பது இத் திருவாய்மொழியின் கருத்தாகும்.

சாதி வேற்றுமை கருதாது எல்லோரும் எளிதாகப் பின் பற்றக் கூடிய வழி இப் பிரபத்தி.

**"பிரபத்திக்குத் தேசநியமமும், கால நியமமும், பிரகார நியமமும், அதிகாரி நியமமும் பல நியமமும் இல்லை"**

ஸ்ரீவசன பூஷணம் - 23.

நியமம் என்பது வரையறை. தேச நியமமாவது, தூய விடங்களில் செய்ய வேண்டுமவை. மற்றைய இடங்களில் செய்யலாகாதென்பது, கால நியமமாவது வேனிற்காலம் முதலான காலங்களிலே செய்ய வேண்டும், மற்றைய காலங்களிலே செய்யலாகாது என்பது. பிரகார நியமமாவது - நீராடல், கால் கழுவுதல் என்பன முதலானவற்றை முன்னாகக் கொண்டு செய்ய வேண்டும். வேறு வகையில் செய்ய வொண்ணாது என்பது. அதிகாரி நியமமாவது, முதல் மூன்று வருணத்தவர்கள் அல்லாதவர்களாக இருக்கலாகாது என்பது. பல பயன்நியமமாவது இம்மை மறுமைப் பலன்களில்

இன்ன பலத்திற்கு இது சாதனம், மற்றைய பலன்களுக்கு இது சாதனம் அன்று என்பது இவ்வளவு நியமங்களும் ப்ரபத்திக்குத் தேவை இல்லை.

"விஷய நியமமே உள்ளது" - (ஸ்ரீவசன பூஷணம்-24)

யாரை ப்ரபத்தி பண்ணுகிறோம் என்கிற விஷயமே முக்யம். என்று கூறி பிள்ளைஉலகஆசிரியர் "குணபூர்த்தி யுள்ளவிடமே விஷய மாகை" - (ஸ்ரீ வசன பூஷணம் - 34) இன்ன விஷயத்தில் செய்ய வேண்டும் என்ற நியமமே இந்தப் பிரபத்திக்கு உள்ளது. என்றபடி "குணபூர்த்தியுள்ள இடமே விஷயமாகை" என்பது பரத்துவம், வ்யூகம், விபவம், அந்தர்யாமித்துவம் அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளிலும் ஸௌலப்பியம் முதலிய குணங்கள் நிறைந்துள்ள இடமே விஷயமாகை என்றபடி, "இங்குச் சொன்ன ஸௌலப்பியத் திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்" - (முமுக்ஷுப்படி - 139) என்று முமுக்ஷுப்படி இதனை விளக்கும்.

எம்பெருமானிடம் ஸௌலப்பியம் என்ற திருக்குணம் நிறைந்திருப்பது அர்ச்சாவதாரம். பரமபுருடனாகிய தன்னை மலர்கள் முதலிய பொருள்களைக் கொண்டு வழிபட்டு வாழ வேண்டும் என்று கருதும் சேதனனுக்குக் கண்ணன் கீதையில் கூறுவது; சேதனன் தன் கையில் கிடைத்த தொன்றைத் திருமேனியாக எழுந்தருளப் பண்ணி எம்பெருமானே, இங்கு தேவரீர் எழுந்தருளி இருக்க வேண்டும் என்று வேண்டும் போது, இறைவனும் அதற்கு இணங்கித் தான், பரத்துவ நிலையில் செய்யும் விருப்பத்தை அத் திருமேனியில் செய்து இவனுக்குத் திருவருள் புரிவான். இந்த அர்ச்சாவதாரம் தொலைவினால் மனத்திற்கும் எட்டாத பரமபதம் திருபாற்கடல் போன்றும், தற்போது சேர்ந்து இன்பந் துய்த்தற்கியலாத இராம கிருஷ்ண அவதாரங்கள் போன்றும் அல்லாமல் எப்பொழுதும் நம் அருகில் நிலைபெற்றுக் கண்ணாற் கண்டு களிப்பதற்கு இடந்தருகின்றது. கதியற்றவர்

களுக்கு முற்சொன்ன நாலும் தேச, கால காரணங்களுக்கு அப்பாற்பட்டது. ஆதலால் கிட்ட முடியாது. ஆராய்ந்து பார்த்த விடத்தில் அர்ச்சாவதாரமே ப்ரத்யக்ஷ ஸாக்ஷாத்காரமாக இருக்கும்.

ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட திவ்ய தேசங்களில் இன்றைக்கு கைங்கர்ய பரர்கள், மிகவும் குறைவாக உள்ளனர். ஸேவார்த்திகள் அவ்வப்போது உற்சவ காலங்களில் வந்து போனாலும், மக்களின் குடியிருப்புகள் அதிகம் இல்லாத காரணத்தால், வெறிச் சோடியுள்ள திவ்ய தேசங்கள் நிறைய உள்ளன பாண்டிய நாட்டில் உள்ள நவதிருப்பதிகள் கேரள மாநிலத்தில் உள்ள திவ்ய தேசங்கள், சோழநாட்டு திவ்யதேசங்கள் போன்ற இடங்களில், ஸ்ரீவைஷ்ணவர்களின் குடும்பங்கள், ஒவ்வொரு திவ்யதேசத் திலும் இருபது குடும்பங்கள் கூடத் தேறாது. எம்பெருமானின் கைங்கர்ய பரர்களும் வேறு சிலரும் மட்டுமே ஊரிருள்ளனர். அவ்வூர்களுக்கு வந்து போகும் பேருந்துகளும் வெகு சொற்பமே. வசதிகளே இல்லாததால் சேவார்த்திகள் மட்டும் ஓரிரு கைங்கர்ய ஸபைகள் அந்த, அந்த திவ்ய தேசத்தை சேர்ந்தவர்கள் ஏற்படுத்தி, ததீயாராதனம் செய்கின்றனர். விசேஷமான ஸ்தலங்களில் தங்கும் வசதி செய்ய வேண்டும். இங்கு கைங்கர்யம் செய்பவர்களுக்கு ஊதியத்தை அதிகரித்தும் அவர்களுக்குத் தேவையான வசதிகளை செய்ய வேண்டும்.

நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் புருஷார்த்தம் எனப் படுவது கைங்கர்யமே. இந்த கைங்கர்யம் இன்ன வகைப் பட்டது என்று வரையறுக்க முடியாது. தமது சிந்தையாலும், சொல்லாலும், செய்கையாலும், ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் ஏதாவது கைங்கர்யத்தில் ஈடுபட வேண்டும். டாக்டர்.இரா "அரங்கராஜன்" எம்.ஏ., பி.எச்.டி., அவர்களும், ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமி அவர்களும், அடிக்கடி திவ்ய தேசங்களுக்கு பல பாகவதோத்தமர்களை அழைத்துச்

சென்று, அங்குள்ள எம்பெருமான்கள் திருமுன்பு ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்த பாசுரங்களை சேவித்தும், உபன்யாசம் செய்தும், அந்த திவ்யதேசத்தில் திருவிளக்கு ஏற்றி வைப்பது, எம்பெருமானுக்கு தளிகை ஸமர்ப்பித்தல் புஷ்பம் சாத்துதல், போன்ற கைங்கர்யங்களை செய்தும் வருகின்றனர்.

**அடிமையிற் குடிமையில்லா அயல்சது பேதிமாரில்***
**குடிமையில் கடைமைபட்ட குக்கரில் பிறப்பரேலும்***
**முடியினில் துளபம் வைத்தாய்! மொய்கழற்கு அன்பு செய்யும்***
**அடியரை உகத்தி போலும் அரங்கமாநகருளானே**

(திருமாலை - 39)

"எல்லா தெய்வங்களுக்கும் மேம்பட்டவன் என்பதற்கு அடையாளமாகத் திருமுடியில் திருத்துழாய் மாலையை அணிந்தவனே! உனக்கு கைங்கர்யம் (அடிமை) செய்வதில் ஊற்றமில்லாதவராய், அடிமை செய்வதில் மாறுபட்டவர்களாய் நான்கு வேதங்களையும் முற்றும் ஓதினவர்களான வேதியர்களைக் காட்டிலும், குடிப்பிறப்பினால் கீழானதான சண்டாளர்களுக்கும், கீழ்ப்பட்ட குலத்தில் பிறந்தவர்களே யானாலும் உன் நெருங்கிய திருவடிகளுக்குப் பரியும்படியான அடியவர்களையே உமக்குமவன்றோ நீ" என்கிறார். தொண்டரடி பொடியாழ்வார். கோவில்களில் நம்மாலான கைங்கர்யங்களைப் பண்ணுவது என்று எல்லோரும் உறுதிகொள்ள வேண்டும். எம்பெருமான் எல்லோரையும் குளிரக் கடாக்ஷித்து அவனுக்கு அடியராய், அடியார்க் கடியாராய் கைங்கர்யங்களை செய்து உஜ்ஜீவிக்கும் படி எம்பெருமான் கிருபை செய்யவேண்டும் என ப்ராத்திக்கிறேன்.

**"திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும், முறுவலும், ஆசன பத்மத்திலே யழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்."**(முமுக்ஷுப்படி-142)

ஸ்ரீய: காந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்தி நாம்।
ஸ்ரீவேங்கட நிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்॥



# துணைநூற்பட்டியல்

1. பு.ரா.புருஷோத்தம நாயுடு — ஈட்டின் தமிழாக்கம்
சென்னைப் பல்கலைகழகம்
1989

2. பண்டிதை எஸ்.கிருஷ்ணவேணியம்மாள் — செம்பொருள,
திருமலை திருப்பதி
தேவஸ்தான வெளியீடு
C.அண்ணுராவ்B.A.

3. ஸ்ரீகாஞ்சிபிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார். — திருப்பல்லாண்டும், பெரியாழ்வார்
திருமொழியும், திவ்யார்த்த
தீபிகை நான்காம் பதிப்பு-1962.

4. ஏந்தூர் சடகோபராமானுஜதாஸன் — திருவாய்மொழி உரை
ஆராவமுத பிரசுர நிலையம்
வைணவ நூல்வெளியீட்டாளர்
அருளாளபெருமாள்ராமானுஜ
கூடம்

5. ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் — வார்த்தாமாலை,
ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
வெளியீடு, 3-B, புத்தூர்
அக்ரஹாரம், திருச்சி.

6. ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் — நாச்சியார்திருமொழி,
ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
வெளியீடு, 3-B, புத்தூர்
அக்ரஹாரம், திருச்சி.

7. ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் — முதல் திருவந்தாதி,
(அப்பிள்ளையுரை விவரணத்துடன்)
ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
வெளியீடு, 3-B, புத்தூர்
அக்ரஹாரம், திருச்சி.

| | |
|---|---|
| 8. ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் | இரண்டாம் திருவந்தாதி, (அப்பிள்ளையுரை விவரணத்துடன்) ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு, 3-B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி. |
| 9. ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் | மூன்றாம் திருவந்தாதி, (அப்பிள்ளையுரை விவரணத்துடன்) ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு, 3-B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி. |
| 10. ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் | முதல் திருவந்தாதி, (அப்பிள்ளையுரை விவரணத்துடன்) ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு, 3-B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி. |
| 11. B.R.புருஷோத்தம நாயுடு | ஸ்ரீவசனபூஷணம், சென்னைப் பல்கலைக்கழகம் |
| 12. B.R.புருஷோத்தம நாயுடு | ஆச்சார்ய ஹ்ருதயம், சென்னைப் பல்கலைக்கழகம் 1965. |
| 13. ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் | யதீந்திர மத தீபிகை ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு, 3-B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி. |
| 14. ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் **அண்ணங்கராசாரியார்** | ஸ்ரீரங்க ராஜ ஸ்தவம் தத்வார்த்த சிகாமணி வியாக்கியானத்தோடு கூடியது. ஹாடன் அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது - 1929. |

| | |
|---|---|
| 15.ப்ரபந்த குல திலகர் ஸ்ரீ R.பெருமாள்ராமாநுஜதாஸன் | சுத்த ஸம்பிரதாய ஸாரம் 1,காமராஜ் வீதி, இந்திராநகர், முதலியார் பேட்டை, பாண்டிசேரி - 605 004. |
| 16.ப்ரபந்த குல திலகர் ஸ்ரீ R.பெருமாள்ராமாநுஜதாஸன் | பரமாத்ம விவேகம், 1,காமராஜ் வீதி, இந்திராநகர் முதலியார் பேட்டை, பாண்டிசேரி - 605 004. |
| 17.வைணவச் சுடராழி ஆ.எத்திராஜன்B.A. | 108,வைணவ திவ்யதேச ஸ்தல வரலாறு, 28,போலீஸ் காலனி ரோடு,செக்காலை, காரைக்குடி. |
| 18.டாக்டர். இரா.அரங்கராஜன். M.A.P.hD., | பெரியாழ்வார் திருமொழி ஆழ்வார்கள் அமுதநிலையம், 37, சௌத் கூவத் ரோட், கோமளேச்வரன்பேட்டை, சென்னை. |
| 19.T.S.ராஜகோபாலன் B.A.L.T., | திருநெடுந்தாண்டகம், ஆழ்வார்கள் அமுத நிலையம், 37, சௌத் கூவத் ரோட், கோமளேச்வரன் பேட்டை, சென்னை. |
| 20.ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் | ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு, 3-B. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி. |
| 21.ஸ்ரீ.உ.வே.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் | நாலாயிர திவ்யப்ரபந்தம் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு, 3-B. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி. |

| | |
|---|---|
| 22. வித்வான்<br>கோ.முத்துசாமி ஐ.ஏ.எஸ். | திருவரங்கநாதர் திருக்கோயில்,<br>திருவரங்கம் |
| 23. கலையிலங்கு<br>மொழியாளர்<br>இரா.அரங்கராஜன்<br>M.A.P.hD., | ஸ்ரீவைஷ்ணவ தர்மம்<br>28-A, அக்ரகாரம் தெரு,<br>பழங்கானத்தம்,<br>மதுரை-625003. |
| 24. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ<br>அ.கிருஷ்ணமாசார்யார்<br>M.A., | பதிப்பாசிரியர் பெரியதிருமொழி,<br>பெரிய வாச்சான் பிள்ளை<br>வியாக்கியானம்,<br>214,கீழ உத்தர வீதி<br>திருவரங்கம் - 620 006. |
| 25. ஸ்ரீ.உ.வே.வித்வான்<br>திருமலைநல்லான்<br>சக்ரவர்த்தி<br>இராம.கிருஷ்ணய்யங்கார் | இராமானுஜ நூற்றந்தாதி<br>ஸ்ரீமணவாள மாமுனிகள்<br>வ்யாக்யானம் ஸ்ரீ கீதாசார்யன்,<br>8,காந்தி ரோடு,தியாகராயநகர்,<br>சென்னை-17 |
| 26. டாக்டர்<br>ந.சுப்புரெட்டியார் | சோழநாட்டுத் திருப்பதிகள்<br>64வது அகவை நிறைவு<br>வெளியீடு,பாரி நிலையம்,<br>184, பிராட்வே, சென்னை |
| 27. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ<br>அ.கிருஷ்ணமாசார்யார்<br>M.A. | ஸ்ரீரங்கம்அத்யயனோத்சவம்<br>ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம்<br>214,கீழ உத்தர வீதி,<br>திருவரங்கம்-620006. |
| 28. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ<br>அ.கிருஷ்ணமாசார்யார்<br>M.A. | "ப்ராவண்யா"(பாடத்திட்டம்)<br>ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம்<br>214,கீழ உத்தர வீதி,<br>திருவரங்கம்-620006. |

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 5 | உடள்மீதாடி | உண்மீதாடி |
| 3 | 20 | வ்யூஹ | வ்யூஹம் |
| 4 | 18 | ரக்ஷிக்கப்படுவனாயும் | ரக்ஷிக்கப்படுபவனாயும் |
| 5 | 5 | பூர்ணமேத் | ப்ரணமேத் |
| 5 | 20 | தஹ்மிந் | தஸ்மிந் |
| 7 | 14 | ஹேராதேஜா | மஹாதேஜா |
| 9 | 20 | பாலிதா | பாவிதா |
| 10 | 1 | புலம் | புலன் |
| 16 | 25 | ஸர்வ வெ | ஸர்வ ஏவ |
| 16 | 26 | ஸவுர்ண: | ஸுவர்ண: |
| 16 | 26 | இப்யாஸம்... மக்ஷிணி | கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணி. |
| 16 | 27 | ணஷ | ஏஷ |
| 21 | 4 | க்ஷறியிருந்தாலும் | க்ஷறியிருத்தலாலும் |
| 22 | 18 | தீயவகளை | தீயவைகளை |
| 22 | 24 | அவதரித்தலன்று | அவதரித்தாலன்றி |
| 26 | 15 | ப்ரதிமஸு | ப்ரதிமாஸு |
| 37 | 11 | யஜ - தேவபூஜாயாம் | யஜ - தேவபூஜாயாம் |
| 49 | 27 | ஹ்ருத யாலுமி: | ஹ்ருதயாலுபி: |
| 50 | 11 | தருகின்றதோ | தருகின்றதன்றோ |
| 52 | 16 | கஞ்சனைக்கடந்தானை | கஞ்சைக் கடந்தானை |
| 57 | 21 | பரணவத்தையும் | ப்ரணவத்தையும் |
| 59 | 14 | சக்தகத்வம் | சக்தத்வம் |
| 59 | 14 | ஆர்த்திரத்வம் | ஆர்த்திஹரத்வம் |
| 66 | 4 | யாதோவசோ | யதோவாசோ |
| 66 | 6 | ஆழ்வார்திருமொழி | திருவாய்மொழி |
| 72 | 16 | அரசர்அரசர்கள் | அரசர்கள் |
| 76 | 3 | கோயிலுடை யா | கோயிலுடையானுக்கு |
| 80 | 27 | பெருமையாலே | பெறாமையாலே |
| 91 | 25 | நிந்தப்புக்கவன் | நீந்தப்புக்கவன் |
| 91 | 29 | அழிந்துவிட்டன் | அழித்துவிட்டன |

| | | | |
|---|---|---|---|
| 94 | 29 | யாதோவாசோ | யதோவாசோ |
| 96 | 9 | திருமங்கயாழ்வார் | திருமங்கையாழ்வார் |
| 114 | 14 | ஆண்டாளுக்கும் | ஆண்டானுக்கும் |
| 122 | 26 | திருமழிசைப்பரிானும் | திருமழிசைப்பிரானும் |
| 123 | 10 | திருக்ககண்ணழகில் | திருக்கண்ணழகில் |
| 124 | 15 | திருவரங்கத் | திருவரங்கத் |
| | | தரவணையில் | தரவணையில் |
| 135 | 3 | ஏகாதேசி | ஏகாதசி |
| 137 | 13 | உத்தமநம்பிகளக்கும் | உத்தமநம்பிகளுக்கும் |
| 139 | 11 | ஸாது ஸ்ரீவைஷ்ணவர் | சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர் |
| 141 | 12 | ஸிம்ஹாசத்தில் | ஸிம்ஹாசனத்தி |
| 143 | 10 | பெருமுான் | பெருமாள் |
| 145 | 21 | பக்தியுலாஸி | பத்தியுலாஸி |
| 145 | 28 | தாஸிகள் | தாஸிகள் |
| 147 | 14 | பன்னிராயிரம் | பன்னீராயிரம் |
| 151 | 15 | குதிலை | குதிரை |
| 152 | 7 | வரவார் | வருவார் |
| 154 | 19 | மாதத்திர் | மாதத்தில் |
| 157 | 20 | ரபந்தத்தின் | ப்ரபந்தத்தில் |
| 161 | 14 | மாகணங்களாக | மாகாணங்களாக |
| 172 | 26 | கொள்கையின்றும் | கொள்கையினின்றும் |
| 182 | 23 | பயனே | பயனை |
| 194 | 8 | ஏறுதல் எளிதோ | ஏறுதல் எளிதோ |
| 194 | 13 | பணிமின்மே | பணிமனமே |
| 195 | 1 | எம்பெருமானுக்கோயில் | எம்பெருமானுக்குக்கோயில் |
| 195 | 6 | பாதத்தால் ல் | பாதத்தால் |
| 198 | 5 | நிர்வாஹிக்கலாம் | நிர்வஹிக்கலாம் |
| 205 | 21 | ஆலமரத்தின் | ஆலமாமரத்தின் |
| 209 | 13 | அரசனக்கு | அரசனுக்கு |
| 210 | 18 | அவ்அரசனுக்கு | அவ்வரசனுக்கு |
| 215 | 6 | மண்டகப்படி | மண்டபப்படி |
| 218 | 30 | ஆத்மாநுபத்தை | ஆத்மாநுபவத்தை |